# நவதுர்க்கை

புலவர் **சி.எஸ். முருகேசன்,**
M.A., P.G. Dip. in Temple Art



**செந்தமிழ் பதிப்பகம்**
15/21, ஆசிரியர் சங்கக் குடியிருப்பு,
இராஜாஜி நகர் விரிவு,
வில்லிவாக்கம், சென்னை-600 049.
தொலைபேசி: 26502086

NAVADURGAI

C.S. Murugesan



| | | |
|---|---|---|
| பதிப்பு | : | 2016 |
| விலை | : | ₹ 85.00 |
| மொத்தப் பக்கங்கள் | : | 8 + 184 = 192 |
| ஒளி அச்சு மற்றும் முன் அட்டை வடிவமைப்பு | : | சு. அசோக்குமார், Digital Designer பாடி, சென்னை-600 050. தொலைபேசி: 26545532 |
| அச்சிட்டோர் | : | எம்.கே. கிராபிக்ஸ், சென்னை-600 021. தொலைபேசி: 9840828213 |

# முன்னுரை

கல்விக்குக் கலைமகளும், செல்வத்துக்குத் திருமகளும், வீரத்திற்கு மலைமகளுமாக இருக்கும் மூன்று சக்திகளும் இணைந்த ஆதிபராசக்தியின் திருவடிவம்தான் துர்க்காதேவி.

காளிக்கும் துர்க்கைக்கும் உள்ள ஒரே வித்தியாசம் காளி அமர்ந்த நிலையில் காட்சி தருவாள். துர்க்கையோ நின்ற நிலையில் அருள் புரிகின்றாள். இந்த இருவரின் கலப்புருவமே சாமுண்டி. இந்த மூன்று வடிவங்களும் உக்கிர ரூபங்களாய் மக்களிடையே அறிமுகமாகி வழிபாடியற்றப் படுகிறாள்.

காளி தேவிக்காகத் திரட்டப்பட்ட தகவல்கள் காளித் திருத்தலங்களாய் காளி தரிசனமாய் மலர்ந்திட எஞ்சிய ஆதிபராசக்தியின் அருட் தகவல்கள் நவதுர்க்கையாய் இந்நூலில் அறிமுகமாகின்றது.

சென்ற ஆண்டு வரை இப்படி ஒரு நூல் எழுத வேண்டும் என்ற எண்ணமே எனக்கில்லை. ஆனால் திடீரென்று எழுந்த ஓர் எண்ணமே அம்பிகைகளைப் பற்றி எழுதத் தூண்டியது.

இஃது ஓர் அருளுணர்வே ஆகும். இறைவியின் ஆணையை மீறுவதற்கு நாம் யார். துர்க்கையைப் பற்றி எழுத ஆரம்பித்தது முதலே மளமளவென்று தகவல்கள் குவிய ஆரம்பித்தன. எதை எழுதுவது, எதை விடுவது என்ற நிலையில் நூலின் சுவை கருதி சில செய்திகளைத் தவிர்க்கவும் வேண்டிய நிலை ஏற்படவே செய்திகளைச் சுருக்கமாகவே தர வேண்டியதாயிற்று.

வழக்கம்போலவே துர்க்கைத் தலங்களைத் தரிசிக்கவும், துர்க்கை பற்றிய செய்திகளைத் திரட்டித் தருவதில் என்னுடன் பணியாற்றிய நண்பர் ஆ. கோமதி நாயகத்திற்கும் பதிப்பாளருக்கும் எனது இதயங்கனிந்த நன்றிகள்.

ஆதிபராசக்தியான நவதுர்க்கையின் அறிமுகத்தினை எழுதுவதற்கு எனக்கு வாய்ப்பளித்த அந்த இறைவிக்கு எனது உளமார்ந்த நன்றிகள்.

வெற்றியையே அளித்துப் பழக்கப்பட்ட நவதுர்க்கைகள் இந்நூலினை வாசிக்கும் வாசகர்களுக்கும், நூலாக்கம் பெற உதவிய இதயங்களுக்கும் எல்லா நலன்களையும் அளித்து வாழ்வில் வளம் சேர அருள் புரிவார்களாக.

அன்புடன்
சி.எஸ். முருகேசன்

# பொருளடக்கம்

பக்கம்

# 1. துர்க்கை காயத்ரீ

**வே**தத்திலுள்ள பல மந்திரங்களில் காயத்ரீ மந்திரம் தலைசிறந்ததென்று வேதமும், ஸ்ம்ருதிகளும், புராணங்களும் கூறுகின்றன.

பிரணவத்தின் அ, உ, ம் என்ற அட்சரங்களின் ஒலிகள் ரிக், யஜுர், சாமம் என்னும் மூன்று வேதங்களின் சாராமாகும். பரப்பிரமத்தின் சக்தி ஒலி மூலமாக உபாசிக்கப்படுவதே காயத்திரீ மந்திரமாகும். 'பூ புவி சுவ' என்னும் மூன்று வியாஹ்ருதிகளும் காயத்திரி மந்திரமாக ஒலிக்கிறது.

அகரத்திலிருந்து "தத்ஸவிதூர் வரேணியம்" என்னும் முதல் பாதமும், உகாரத்திலிருந்து "பர்சோ தேவஸ்ய தீமஹி" என்னும் இரண்டாவது பாதமும்,

மகரத்திலிருந்து "தியோ யோந, பிரசோதயாத்" என்னும் மூன்றாவது பாதமும் காயத்திரீ மந்திரத்தின் சாரமாகும். காயத்திரீ மந்திரத்தின் சாரமே சாக்த வழிபாட்டின் பஞ்சதகாக்ஷரீ மந்திரம் என்று காயத்திரீக்கு விளக்கமளிக்கிறது உபநிஷத்துகள்.

இந்த வகையில் துர்க்கைக்கும் காயத்திரீ மந்திரம் ஒன்று இருக்கிறது.

"ஓம் காத் யாயனாய வித்மஹே
கன்யாகுமாரி துமஹி
தன்னோ துர்கி; ப்ரசோதயாத்"

இது துர்க்கையின் காயத்திரி ஆகும்.

இந்தக் காயத்திரீ மந்திரத்தை அங்கஞ்யாசம் கரந்யாசங்களுடன் பிராத்தனை செய்ய நினைத்த எண்ணங்கள் யாவும் நிறைவேறும். மனமும் தெளிவு பெறும் என்று கூறப்படுகிறது.

கரந்யாசம் என்பது

அங்குஷ்டாப்யாம் நம:
தர்ஜனீப்யாம் நம:
மத்யமாப்பினம் நம:
அனாமிகாப்யாம் நம:
கனிஷ்டி தூப்யாம் நம:
கரதலகரப் ருஷ்டாப்யாம் நம:

என்று துதிப்பது. இது அங்கஞ்யாசத்தில்

ஸ்ருதயாய நம:
சிரசே ஸ்வாஹா
சிகாயை வஷட்
கவசாய ஹும்
நேத்ரத்ரயாய வௌவுட்
அஸ்த்ராயபட்
பூர்ப்புவஸ் ஸுவரோமிதி
திக்பந்த்

துர்க்கையானவள் அனைத்து சக்திகளுக்கும் மூலமாகத் திகழ்கின்றாள். சிவனிடம் பார்வதியாகவும், விஷ்ணுவிடம் லட்சுமியாகவும், பிரம்மாவிடம் சரஸ்வதியாகவும், கிருஷ்ணரிடம் ராதையாகவும், சந்திரனிடம் ரோகிணியாகவும், இந்திரனிடம் இந்திராணியாகவும், காமனிடம் ரதியாகவும் இப்படி அனைத்து தேவர்களுக்கும் அவர்களது சக்தியாய் இருந்து வழிநடத்துகின்றாள் என்று துர்க்கா ஸ்தோத்திரம் கூறுகின்றது.

துர்க்கை அறிவாளிகளிடத்தில் அவனை இயக்கும் புத்தியாகவும், சீலமுள்ளவர்களிடத்தில் சிரத்தையாகவும், உயர்குடி பிறந்தோரிடத்து தீமையை நினைத்து வெட்கப் படுகின்ற குணமாகவும், பலவீனமானவர்களுக்குத் தைரியத்தை அளிப்பவளாகவும் இருக்கிறாள் என்று பரசுராமர் அருளிய துர்க்கா ஸ்துதி கூறுகின்றது.

# உ. துர்க்கை

'துர்க்கை' என்பது 'துர்கா' என்ற வட சொல்லின் தமிழ் வடிவமாகும்.

துர்கம் என்பது மலை, அரண், மலைக் கோட்டை, அகழி என்ற பொருள்படும். பகைவன் நம் நாட்டின் மதிலை (காவலை) அணுக முடியாமல் செய்யும் திறம் வாய்ந்தது. அப்படி வழிபடும் அன்பர்களைத் துன்பங்கள் அணுகா வண்ணம் காத்தலால் இவள் துர்க்கை எனப் பெயர் பெற்றாள். துர்க்கை என்பதற்கு தமிழில் 'வீரமகள்' என்றும் பொருள் கொள்வர்.

துர்கா என்ற வடச் சொல்லை த + உ + ர + க + ஆ = துர்கா எனப் பிரித்து பொருள் கூறுகிறது ஸ்ரீ துர்கா ப்ரவாவம். அதாவது த, உ, ர, க, ஆ என்ற ஐந்து வர்ணங்களின் கூட்டே துர்காவாகும் என்கிறது.

த - அசுரர்களை அழித்தல் அல்லது மனிதர்களின் அசுர எண்ணங்களை அழித்தல்.

உ - மனிதர்களுக்கு ஏற்படும் இடையூறுகளைப் போக்குபவள்

ர - வியாதிகளை (ரோகங்களை) நிவர்த்தி செய்பவள்.

க - பாவங்களை நசிக்கச் செய்பவள்

ஆ - பயம் மற்றும் சத்ருக்களை அழிப்பவள்.

இந்த துர்க்கை என்று த, உ, ர, க, ஆ-விற்குப் பொருள் கொள்ளப்படுகிறது.

துக்கம் என்றால் துன்பம். இந்தத் துன்பத்தினின்றும் நம்மைக் காக்கும் தேவிக்குத் துர்க்கை என்று பெயர். ஆகவே, துர்க்கையைச் சரணடைகிறேன் என்று துர்க்கைக்கு விளக்கமளிக்கிறது அதர்வண வேதம்.

துர்க்கமாசுரனை வதம் செய்த சக்திக்கு துர்க்கை எனப் பெயர் ஏற்பட்டது என்றும், துர்கமாசுரனை வதம் செய்வதற்காகத் தேவி த, உ, ர, க, ஆ என்ற ஐந்து கணைகளைச் செலுத்தினாள் என்றும், இந்த ஐந்து கணைகளின் வடிவமே துர்க்கை என்றழைக்கப்படுகிறது என்று புராணங்கள் தெரிவிக்கின்றன.

மனிதர்களின் அசுர எண்ணங்களை அழிப்பவளாகவும் அவர்களுக்கு ஏற்படும் தடைகளை நீக்குபவளாகவும், வாழ்க்கையில் ஏற்படும் அறியாமை என்னும் ரோகத்தைப் போக்குபவளாகவும், சென்ற பிறவிகளில் செய்த பாவத்தையும் இப்பிறவியில் செய்த பாவங்களையும் அழிப்பவளாகவும் ஆத்ம ஞானத்தை அடையத் தடையாகவுள்ள மாயை என்ற ரோகத்தை நீக்குபவளாகவும், இந்திரியங்களின் செய்கையால் ஏற்படும் விரோதிகளையும், மனித வாழ்வில் அன்றாடம் சந்திக்கும் பகைவர்களையும், அழிப்பவளாகவும், ஜனன மரண பயத்தையும், வாழ்க்கையில் மற்றவர்களால் ஏற்படும் அச்சத்தையும் அகற்றுபவள் என்ற உட்பொருள்களைத் தன்னுள் அடக்கியதே 'துர்கா' என்ற பெயராகும்.

சாந்தோக்கிய உபநிஷத்தில் 'க' என்ற அட்சரம் சுகம் என்ற பிரம்மத்தையும், 'க்க' என்ற அட்சரம் ஆகாயம் என்பதாகவும் கூறுகிறது. இங்கு கூறப்படும் சுகம் என்ற பிரமம் உலக விஷய சுகம் அல்ல. ஆத்மாவை உணர்ந்த தன்மையான ஆத்ம சுகம் என்றும், அந்த ஆத்மாவின் உறைவிடமான இருதயத்தினுள் உள்ள ஆனந்த மயமான சிதாகாச சேத்ரம் என்றும் உணர்த்தப்படுகிறது.

'க்க' என்ற சிதாகாசத்தில் 'க' என்ற பிரம்மம் உடலில் இல்லை என்றால் உடலில் உயிர் இல்லை என்பதாகும். உயிர் இல்லையேல் உடல் சவம் என்பதாகிவிடுகிறது. அப்படிப்பட்ட 'கம்' என்ற ஆத்ம சுகத்தை 'க்கம்' என்ற இதய

சிதாகாசத்தில் காணவில்லை என்றால் துக்கம் வந்துவிடும்.

இப்படிப்பட்ட துக்கத்தைப்போக்கி 'து' என்ற அட்சர (அழிவில்லாத) பொருள் 'க்க' என்ற அட்சரத்தினால் சிதாகாசத்தில் மெய்ப்பொருளைக் கண்டு, 'க' என்ற அட்சரத்தினால் சிதாகாச ஆகாயத்தில் மெய்ப்பொருளைக் கண்டு, 'க' என்ற ஆத்ம சுகத்தை ஞானம் அளிப்பதால் அந்தப் பரம்பொருள் துர்கா என்று அழைக்கப்படுகிறது.

இடையிலுள்ள 'ர்' என்ற சொல்லின் சேர்க்கை 'ஆ' என்பது விளித்தலுமாகும் என்று துர்க்கை என்ற சொல்லுக்கு விளக்கமளிக்கிறார் ஸ்ரீபரத்வாஜ ஸ்வாமிகள்.

மேலும் சக்தியை உண்டாக்கியவளும் தர்மத்தின் வடிவானவளும், ஏற்றத்தாழ்வு பாராதவளும், நல்லவர்களுக்கு நன்மையும் தீயவர்களுக்குத் தீமையும் செய்பவள். கெட்டவர்களுக்கும் தீயவர்களுக்கும் அவர்களுடைய செய்கையில் இருந்து அவர்களைத் திரும்பி நல்லவர்களாகச் செய்பவள் துர்க்கை.

அன்பின் வடிவமானவளும், அழகிய உருவம் கொண்டவளும், ஆதியும் அந்தமும் இல்லாதவளும் அணுவாகவும், அணுவுக்குள் அணுவாகவும், அதன் சக்தியாகவும் அண்டத்தை ஏற்படுத்தி அண்டமாகவும் அன்பர்களின் இதயக்குகையில் குடியிருப்பவள் துர்க்கை.

உன்னதமானதும், சத்தியமானதும் எப்பொழுதும் எந்த நிலையிலும் யாராலும் வெல்ல முடியாததையும், அண்டம் முதல் அணு வரை உள்ள எல்லாவற்றையும் எந்த சக்தி படைத்து ஆட்டி வைக்கிறதோ அந்த சத்திய திருஉருக் கொண்டவள் துர்க்கை.

சித்தர்களின் சிந்தனையில் வியாபித்து அவர்களின் மனத்திலும் பக்தர்கள் மனதிலும் தேன் அருவியாக ஊற்றெடுத்து நல்ல வாழ்க்கையை அமைத்துக் கொடுப்பவள் துர்க்கை.

ஆன்மீகத்தின் ஒளி எதுவோ, ஆணவத்தை அழிக்கின்றது எதுவோ, ஆன்றோர்களின் வாக்காக வருவது எதுவோ, அன்னையின் வடிவமானது எதுவோ, அன்பின் உருவமானது எதுவோ, அனைத்திற்கும் ஆதாரமாகத் திகழ்வது எதுவோ, அற்புதங்களை நிகழ்த்துவது எதுவோ, அனைத்திற்கும் அழகைக் கொடுப்பது எதுவோ, அந்த ஆனந்த சக்திதான் ஸ்ரீ துர்கா.

வறுமையில் வாடுபவர்களை எது காப்பாற்றுகிறதோ, வறுமையில் தத்தளிக்கும் வீட்டிற்கு வாழ வழிகாட்ட எது வருகிறதோ, அவர்களுக்கு எது அருள் புரிகிறதோ, பக்தி மார்க்கத்தில் எது ஏணியானதோ, அந்த ஏணியில் ஏறுகின்றவர்களை எது காக்கிறதோ, அப்படிக் காப்பதோடு மட்டுமில்லாது பக்திமார்க்கத்தின் கரையை அடையச் செய்து சம்சார சமுத்திரத்தை எது கடக்கச் செய்கிறதோ அந்த சக்திதான் அன்னை துர்கா தேவி.

மிகவும் இக்கட்டான நிலையில் இருப்பவர்களையும், அதிகப்படியான கஷ்டங்களினால் செய்வது அறியாது அல்லல்பட்டு துக்கத்தில் இருப்பவர்களையும் காப்பாற்றுபவள் ஸ்ரீ துர்கா தேவி. அதன் காரணத்தாலேயே துக்கிகளுக்கு (துன்பமடைந்தவர்களுக்கு) துர்காவே துணை என்று கூறப்பட்டு ஜெய் ஸ்ரீ துர்கா என்று அழைக்கப்படுகிறாள் என்று யார் துர்க்கை என்று துர்க்கைக்குப் பொருள் கூறுகின்றார் ஸ்ரீ பரத்வாஜ் சுவாமிகள்.



★ துயர்நீக்கும் துர்கா தேவி பக் 26-27

# 3. துர்க்கையின் புராண அவதாரம்

யட்ச குலத்தில் பிறந்த தனு என்ற அசுரன் தேவர்களை வேண்டி ரம்பன், கரம்பன் என்ற இரண்டு புதல்வர்களைப் பெற்றான். உரிய வயதில் இருவருக்கும் திருமணம் நிகழ்ந்தது. ஆனால், மக்கட் செல்வம் இல்லை. தனது வம்சமே வாரிசில்லாமல் போய் விடுமோ என வருந்திய தனு தனது மகன்களை பிரம்மனை நோக்கிக் கடுந்தவமியற்றுமாறு ஆலோசனை கூறினான்.

தந்தையின் ஆலோசனைப்படியே கரம்பன் பஞ்ச நதம் என்ற புண்ணிய நதியில் மூழ்கி கடுந்தவம் புரியலானான். ரம்பன் அந்த பஞ்ச நதத்தின் கரையில் ஓர் ஆலமரத்தினடியில் இருந்து தவம் புரியலானான். இவர்களின் இந்தக் கடுந்தவத்தால் தன்னுடைய இந்திரப் பதவிக்கு ஏதேனும் ஆபத்து வந்துவிடுமோ என்ற கலங்கிய இந்திரன் முதலை வடிவெடுத்து, அந்த நதியினுள் சென்று கரம்பனின் காலை இழுத்துக் கொன்று விட்டான்.

தன் தம்பி அநியாயமாக மாண்டதைக் கண்டதும் அவனது அண்ணன் ரம்பன் மிகவும் மனம் வருந்தினான். ஆற்றாமையால் உறையிலிருந்த வாளை எடுத்தான். தன் தலையை அறுத்து தான் வளர்த்து வரும் அக்கினி ஹோமத்தில் போடுவதற்காக இடது கையில் தன் தலை முடியைப் பிடித்துக் கொண்டு வலது கையால் வாளை எடுத்துத் தன் தலையை அறுக்க முயன்றான்.

அப்பொழுது அவனது செயலை அக்னிதேவன் தடுத்தான். ரம்பா! தற்கொலை பாவமானது. நீ செய்த ஹோமங்கள் வாயிலாக உனக்கு நன்மை செய்ய கடன் பட்டிருக்கும் அக்னி தேவன் நான். உன் புண்ணியத்திற்கேற்ற வரம் தர எனக்குச் சக்தி உண்டு. உனக்கென்ன வரம் வேண்டும்? என்று கேட்டான் அக்னி தேவன்.

ரம்பனுக்கு ஒன்றும் புரியவில்லை. ஆயினும் தன் தம்பி மீதுள்ள பாசத்தால், என் தம்பி பிழைத்து வர வேண்டும். உன்னால் செய்ய முடியுமா? என்று பணிவுடன் கேட்டான்.

இறந்தவர் மீண்டும் வருவதென்பது நடக்காது. முதலையாக வந்து உன் தம்பியைக் கொன்றவன் இந்திரன். தன் பதவிக்கு ஆபத்து வந்து விடுமென அஞ்சி அவன் அவசரப்பட்டுவிட்டான். உன் தம்பி உயிர் விடுத்து, வேறு வரம் கேள் என்றார் அக்னி.

ரம்பன் சிறிது யோசித்து, பின்னர் மனம் தேறி, வஞ்சகமாய் தன் தம்பியைக் கொன்ற இந்திரனைக் குலத்தோடு அழிக்க தன்மனத்திற்குள் சபதமெடுத்தான்.

'என்னுடைய தவத்தால் நீங்கள் திருப்தி அடைந்தது நிஜமானால் மூவுலகங்களையும் வெல்லக் கூடிய, தேவர், அசுரர், மனிதர் மற்றும் எவராலும் வெல்ல முடியாத, நினைத்த வடிவம் எடுக்கக் கூடிய ஒரு வீரப் புதல்வனைக் கொடுக்க வேண்டும் என்ற வரம் வேண்டினான்.

அக்னியும் ரம்பன் விருப்பப்படியே வரமளித்து மறைந்தார். தன்னுடைய தவத்திற்கான பலன் கிடைத்துவிட்ட மகிழ்ச்சியில் நதிக்கரையை விட்டு நகரத்தை நோக்கித் திரும்பி வருகையில் ஓர் ஆலமரத்தின் நிழலில் அழகும் மிடுக்கும் செருக்கும் வாய்ந்த பெண்ணினத்துக் காட்டெருமை ஒன்றைக் கண்டான். விதிவசத்தால் ரம்பன் அந்த எருமை மீது காமவெறி கொண்டு அதை நெருங்கினான். அந்த எருமையும் அதிக ஆசையோடும் ஆனந்தத்தோடும் அவனை நெருங்கியது.

ரம்பன் அந்தக் கணமே, அந்த எருமையிடம் கூடிக் கலவி புரிந்து மகிழ்ந்தான். அதனால், அந்த எருமை மாடு சூல்தரித்தது. பிறகு எருமையைக் கண்ணும் கருத்துமாய் கவனித்து வந்தான்.

ஒரு நாள் அந்த எருமை இனத்தைச் சேர்ந்த எருமைக் கிடா ஒன்று அந்தப் பெண் எருமை மீது மிகவும் காமங் கொண்டு எருமையைத் துரத்தியது. அதைக் கண்டதும் ரம்பன், அதைத் துரத்தி நன்றாக அடித்து ஓட்டலானான். ஆயினும் காமவெறியோடு ஆத்திரவெறியும் கொண்ட அந்தக் கடாவோ ரம்பனைத் தன் இரு கொம்புகளால் மார்பில் குத்தியது. அதனால் ரம்பன் பூமியில் விழுந்து மடிந்தான்.

ரம்பன் இறந்ததைக் கண்டதும் அவனது ஆசை நாயகியான பெண் எருமை மருண்டு யட்சர்களைச் சரண் அடைந்தது. ஆனால், அந்த இடத்திற்கும் காமவெறி கொண்ட ஆண் எருமை சென்று பெண் எருமைமீது ஏற முயன்றது. ஆனால், பெண் எருமை அந்தக் கிடாவிற்கு இடங்கொடுக்காமல் விலகி ஓடியது. பெண் எருமையின் பாசத்தைக் கண்ட யட்சர்கள் ஆண் எருமையை அம்புகளெய்திக் கொன்றார்கள்.

இறந்துபோன ரம்பனின் உடலைக் கொண்டுவந்து சிதைக்கட்டி அதில் அவனைக்கிடத்தி தீமூட்டி எரிக்கலானார்கள். அப்போது ரம்பனின் பிரேதத்தோடு அவனது ஆசை நாயகியான எருமையும் அக்கினிப் பிரவேசம் செய்ய முயன்றது. அதை யட்சகர்கள் எவ்வளவோ தடுத்தும் பெண் எருமை துயரம் தாங்காமல் எரியும் சிதையில் பாய்ந்து ரம்பனின் உடலுடன் உடன்கட்டை ஏறிவிட்டது.

அப்போது பெண் எருமையின் கர்ப்பத்திலிருந்த ரத்த பீஜனாகிய மகிஷன் என்ற அசுரன் சிதையின் நடுவிலிருந்து வெளிப்பட்டான். பிறகு அவன் அசுரர்களையெல்லாம் சேர்த்துக் கொண்டு அசுர வேந்தனாக முடிசூட்டிக் கொண்டு தேவர்களாலும் அசுரர்களாலும் வெல்ல முடியாத வலிமையுடையவனாகி அரசாட்சி நடத்தி வந்தான்.

இந்த மகிஷன் தன் தோள் வலிமையினால் பூலோகம் முழுவதையும் தன் ஏகாதிபத்தியத்தின் கீழ்க் கொண்டு வந்து

அரசாண்டான். சக்ஷுரன், மகா வீரியன், தனத்யக்ஷன், மதோத்கடன், தாம்பரன், அசிலோமன், பிடலாக்கியன், திரிநேத்திரன், உதர்க்கன், பாஷ்கலன், பந்தகன், காலன் என்பவர்களைத் தன் சேனாதிபதிகளாகக் கொண்டு ஏகாதிபத்திய வெறியோடு ஆட்சி புரிந்து வந்தான். இந்த நிலையில் பாதாளத்தில் இருந்த அசுரர்கள் இவனுடன் சேர்ந்து கொள்ளவே மகிஷன் தன் வலிமையைப் பூரணமாகப் பெருக்கிக் கொண்டு, தேவர்கள் மீது தன் ஆதிக்கத்தைச் செலுத்த முயன்றான்.

யமன், வருணன், வாயு, குபேரன் முதலான அஷ்டதிக் பாலர்களையும் விரட்டியடித்து இறுதியாக இந்திர லோகத்தின் மீது தாக்குதல் நடத்தினான்.

இந்திரன் தலைமையில் தேவர்கள் ஒருபுறமும் மகிஷன் தலைமையில் அசுரர்கள் மறுபுறமும் இருந்து போரிட்டனர். இந்தப் போரில் சக்ஷுரன், பிடாலன் என்ற போர் தளபதிகள் மரணமடையவே கடும் கோபமுற்ற 'மகிஷன் தன்னுடைய மாயையால் எங்கு பார்த்தாலும் மகிஷ உருவங்களைத் தோற்றுவித்து போர் புரியலானான். இதைக் கண்டு தேவர் படைகள் பின்வாங்கினர்.

மகா விஷ்ணு தன் சக்கராயுதத்தால் மாயையால் தோன்றிய மகிஷ அசுரர்களை அறுத்தெறிந்தார். மகிஷன் மலைகளைப் பெயர்த்து உருட்டி படைகளை நாசம் செய்தான். விஷ்ணு அம்மலைகளைத் தம் சக்ராயுதத்தால் பொடிப் பொடியாக்கினார். இறுதியில் பிரம்மன் கொடுத்த வரத்தின்படி ஒரு பெண் தான் இவனைக் கொல்ல முடியும். தான் இவனோடு போர் புரிவது வீண் என்று தீர்மானித்து விஷ்ணு தன்னுடைய வைகுண்டம் சென்றார்.

போரில் தோல்வியுற்ற தேவர்கள் பிரம்மாவிடம் முறையிட்டனர். பிரம்மா சிவபெருமானிடம் சென்று ஆலோசனை கேட்க; சிவபெருமான் புன்னகையுடன்

'பிரம்மனே! வரமளித்தது நீ! விடுவிப்பது நானா? கருவில் உருவாகாத பெண்ணால் மரணம் என்று வரமளித்திருக்கிறாய். அப்படி ஒரு பெண்ணைப் படைத்து விட்டாயா? அசுரர்களின் மாயா சக்திக்கு ஈடான மாயம் உன் தந்தை மகா விஷ்ணுவுக்கே உண்டு. அவரிடம் போய் யோசனை கேள்'' என்று சொல்லி அனுப்பினார்.

தேவர்கள் எல்லோரும் வைகுண்டத்தை அடைந்து மகிஷாசுரனை அழிக்கும் மார்க்கத்தைக் கேட்டனர். 'சுவர்க்கத்தை ஆட்டிப் படைக்கும் மகிஷன் தனது அடுத்த ஆக்கிரமிப்பை சத்திய லோகத்திலும், வைகுண்டத்திலும், கயிலையிலும் தொடர்வான். முடிவில் தேவர் இனமே பூண்டற்றுப் போய்விடும் என்று வந்து கொண்டிருக்கும் ஆபத்தைப் பற்றி பேசிக் கொண்டிருந்தனர். அந்தச் சமயத்தில் சிவபெருமான் அங்கு வரவே, இறுதியில் அவர் ஆலோசனையும் கேட்கப்பட்டது.

ஒரு பெண்ணால் தான் மகிஷனுக்கு மரணம் என்றிருப்பதால் அந்தப் பெண்மைக்கேத் தலைவியான ஆதிபராசக்திதான் அவனைக் கொல்லும் திறமுடையவள். ஆகவே, நாம் அனைவரும் நம் ஒவ்வொருவரிடத்துமுள்ள நம்மை இயக்கும் சக்தியாய் அமைந்திருக்கும் பராசக்தியைத் துதிப்போம். அந்த சக்திகள் எல்லாம் ஒன்று திரண்டு பெண்ணுருப் பெற்றால் அந்தப் பெண்ணே மகிஷனைக் கொல்வாள் என்றார் சிவபெருமான்.

தேவர்களனைவரும் தத்தமது சக்தியை வணங்கினர். சிவனின் உடலிலிருந்து வெளியான ஒளி அழகிய பெண் முகமாகியது. பிரம்மாவிடமிருந்து வெளிப்பட்ட ஒளி உடலாகியது. விஷ்ணுவிடமிருந்து புறப்பட்ட ஒளி பதிரண்டு கரங்களாகியது. யமனின் உடலிலிருந்து வெளியான ஒளி கரிய நீண்ட கூந்தலானது. அக்னியிடமிருந்து வெளியான ஒளி மூன்று கண்களாகப் பரிணமித்தது. மன்மதனின் ஒளி

அழகிய புருவமாகியது. குபேரனது ஒளி மூக்காக வடிவம் பெற்றது. முருகனது ஒளி உதடுகளானது.

சந்திரனிடமிருந்து புறப்பட்ட ஒளி அழகிய ஸ்தனங்களானது. இந்திரனின் தேஜஸ் தேவியின் இடையானது. வருணனின் ஒளி தேவியின் தொடைகளும் கால்களுமானது. பூதேவியின் ஒளி பிருஷ்ட பாகமாயிற்று. விபுலனுடைய தேஜஸ் நிதம்பமாயிற்று. இப்படி எல்லா சக்திகளும் இணைந்த துர்க்கையாக தேவி தோன்றினாள்.

துர்க்கை மகிஷனுடன் போரிடுவதற்கான ஆயுதங்களையும் ஒவ்வொருவரும் அவளுக்கு அளித்தனர். சிவபெருமான் தன்னுடைய சூலாயுதத்தையும், விஷ்ணு சக்ராயுதத்தையும், பிரம்மா கமண்டல நீர் மற்றும் தாமரை மலர்களையும், இந்திரன் வஜ்ராயுதத்தையும், யமன் தண்டாயுதத்தையும், வருணன் சங்கையும், அக்கினி சதக்னி எனும் ஆயுதத்தையும், வாயு வற்றாத அம்புடைய அம்புறாத்தூளியையும், வில்லையும், சூரியன் தன்னுடைய பிரகாசத்தையும் அளித்தனர். தேவியும் திருப்பாற் கடல் தந்த அற்புத ஆடைகளை அணிந்து முத்தாபரணங்களைப் பூட்டிக் கொண்டு அலங்கார சுந்தரியாய் நின்றாள்.

மகிஷாசுரன் போரிடுவதற்கு ஆயுத்தமாகையில் சிம்ம வாகனத்தை இமயவான் வழங்க தேவி அதன் மீது அமர்ந்து புறப்பட்டாள். அதே சமயத்தில் மகிஷனின் ஆட்கள் துர்க்கையின் பேரழகை அவனிடம் மொழிய இத்தகைய கம்பீரமானவளைத் திருமணம் செய்து கொண்டால் மும்மூர்த்திகளையும் கூட வெல்லலாம் என்று முடிவு செய்து தேவியைத் திருமணம் செய்து கொள்ள தன் அமைச்சனைத் தூதனுப்பினான்.

அமைச்சனும் மகிஷனின் கருத்தை தேவியிடம் சொன்னான். "தூதனைக் கொல்லக் கூடாது என்ற வழக்கம் இருப்பதால் உன்னைக் கொல்லாமல் விடுகிறேன். உன்

அரசன் உயிர் பிழைக்க விரும்பினால் பாதாளத்திற்குப் போய் விடச்சொல்" என்று கோபமாகச் சொன்னாள்.

தேவியின் பதிலைக் கேட்ட மகிஷன் கடும்கோபம் கொண்டான். அவளைப் போரிட்டே அடைவது என்ற தீர்மானத்துடன் அழகிய வாலிப வடிவம் தாங்கி கோவேறு கழுதைகள் பூட்டிய பிரம்மாண்டமான தேரில் யுத்தத்திற்குப் புறப்பட்டான்.

போர்க்களத்தில் தேவியின் அழகை நேரில் பார்த்த மகிஷன் திகைத்து நின்றான். "நான் இன்று வரை யாரிடமும் எதையும் யாசித்தது கிடையாது. ஆனால், இப்போது உன்னிடம் அடிமையாய் நின்று யாசிக்கிறேன். அழகின் திருவே, நீ என் பட்டத்து ராணியாய் அமர வேண்டும். இந்த அண்ட சராசரங்களையும் நாம் இருவரும் ஆளவேண்டும்" என்று மண்டியிட்டு வேண்டினான்.

மகிஷனின் பிதற்றலைக் கேட்ட தேவி அட்டகாசமாய் சிரித்தாள். மகிஷனே! பரம புருஷனைத் தவிர யான் வேறு யாரையும் விரும்ப மாட்டேன் என்றாள்.

"தேவி! பெண் கொலை கூடாது என்பதால் நான் உன்னைக் கொல்லத் தயங்குகிறேன். இதை நீ என் பலவீனமாக நினைக்கக்கூடாது. நீ என்னை மணக்க மறுத்தால் உன்னைப் பலவந்தமாக நான் அடைய வேண்டியிருக்கும்" என்று அச்சுறுத்தினான்.

மகிஷனின் பேச்சைக் கேட்ட தேவி பின்னும் சிரித்தாள். "அட மூடனே! எந்தெந்தச் சமயங்களில் பொது மக்களுக்குத் துன்பம் நேரிடுகிறதோ, அப்போது அவர்களைக் காப்பாற்றுவதற்காக நானும் உருவம் எடுக்கிறேன். ரூபமற்ற நான் ரூபமும், பிறவியற்ற நான் பிறவி எடுப்பதும் உயிர்களைக் காப்பாற்றவே. இப்பொழுது நான் வடிவம் எடுத்தது உன்னைக் கொல்வதற்காகவே. அதற்காகவே இப்பொழுது வந்துள்ளேன்" என்றாள்.



தன் எண்ணத்திற்கு எதிராகவே தேவி பேசுவதைக் கண்டு கோபங்கொண்ட மகிஷன் தேவியுடன் போர் தொடுத்தான்.

போரின் ஆரம்பத்திலேயே மகிஷனின் தளபதிகளான துர்த்தரன், திரிநேத்ரன் என்ற அசுரர்கள் மடிந்தனர். அந்தகன் என்ற தளபதி துர்க்கையின் வாகனமாகிய சிங்கத்தின் தலையில் இரும்பு உலக்கையினால் அடிக்க அது அவனை அறைந்து கொன்றது.

உடனே, மகிஷன் கோபங் கொண்டு தனது கதையினால் சிங்கத்தின் தலையிலடிக்க அது கால்களால் மகிஷனை அறைந்தது. உடனே, மகிஷன் சிங்க வடிவமெடுத்து சிங்கத்துடன் போரிட்டு தேவி சிங்கத்தை நகங்களால் கிழித்தான். அதனைக் கண்ட துர்க்கை இரும்பு முனை கொண்ட விஷ பாணங்களால் மகிஷனைத் தாக்கினாள். உடனே, மகிஷன் யானை வடிவம் கொண்டு தன் துதிக்கையினால் மலை, மரங்களைப் பிடுங்கி தேவி மீது வீசினான். தேவி விஷ்ணு சக்ராயுதத்தினால் அதனைப் பொடிப் பொடியாக்கினாள். மறுபடியும் தன் மாயாவித்தனத்தினால் பாம்பாக உருமாறி தேவியைக் கொத்த முயற்சித்தான். உடனே, தேவி கத்தியை ஓங்க, மகிஷன் சுயவுருவெடுத்து தேவியைத் தாக்கினான்.

தேவி சினம் தலைக்கேற பத்ரகாளியாய் மாறினாள். மகிஷனும் பற்பல மாயா வடிவமெடுத்து யுத்தம் செய்தான். இந்த மாய விளையாட்டுக்கு முடிவு கட்ட தேவி சுவர்ண பாத்திரத்திலுள்ள மதுவை அருந்தினாள். அப்படி அவள் மது

அருந்தும்போது மதுவின் துளிகள் சிந்திய இடம் 'சுக்ல தீர்த்தம்' என்ற குளமாயிற்று. தன் கையிலுள்ள சிவபெருமானின்★ சூலாயுத்தினால் மகிஷனைக் குத்த முனைந்தாள். மகிஷன் அவளின் கொடிய வடிவம் கண்டு தென் திசைக்கோடியில் இரு கடலுக்கும் இடையிலுள்ள ஒரு குளத்தில் மூழ்கி மறைந்தான்.

துர்க்கை தனது படைகளுடன் அந்த குளத்திற்குச் சென்று தனது சிங்கத்திடம் அந்தக் குளத்து நீர் முழுவதையும் குடிக்கச் சொன்னாள். நீர் எல்லாம் வற்றிவிட வேறு வழியில்லாமல் மகிஷன் வெளியே வந்தான். உடனே, துர்க்கை தனது சக்ராயுதத்தை ஏவி அவன் தலையை வெட்டி வீழ்த்தும்படி கட்டளையிட்டாள். சக்ராயுதம் மகிஷனின் தலையை அறுத்துத் தள்ளி விட்டு தேவியின் கைக்கேத் திரும்பி வந்தது.

மகிஷாசுரனின் தலை தேவியின் பாதத்தில் வந்து விழுந்தது. அவனின் தலையற்ற முண்டம் ஆகாயம் வரை எழும்பித் துள்ளி கீழே விழ தேவர்கள் பூமாரி சொரிந்தனர். போர்க்களத்தில் எஞ்சியிருந்த அசுரர்களைத் தேவியின் சிங்கம் சீறிப் பாய்ந்து பாதாள லோகத்திற்குத் துரத்தியது. மகிஷனைக் கொன்ற துர்க்கைத் தேவி ''மகிஷாசுரமர்த்தினி'' என்ற பெயர் சூட்டப்பட்டு தேவர்களால் வணங்கப்பட்டாள். துர்க்கை எந்த இடத்தில் தங்கி மகிஷனை சம்காரம் செய்தாளோ அந்த இடமே இன்று ''தேவி பட்டிணம்'' என்று பெயர் பெற்றிருக்கிறது என்று புராணங்கள் கூறுகின்றன.

புரட்டாசி மாதம் கிருஷ்ணபட்ச சதுர்த்தசியில் மகாலட்சுமி என்ற துர்க்கை அவதாரம் செய்தாள் என்றும், அந்த துர்க்கையானவள் சுக்லபட்ச அஷ்டமி திதியில் மகிஷாசுரனை வதம் செய்தாள் என்றும், மறுநாள் நவமி திதியில் தேவர்கள் அவளை வழிபட்டனர் என்றும், அதற்கும்

★ மூகாம்பிகா க்ஷேத்ரா புராணம்

மறுநாள் விஜய தசமியன்று துர்க்கை தேவர்களிடம் விடை பெற்றுக் கொண்டு ஸ்ரீ புவனேஸ்வரி வாசம் செய்யும் "மணித்வீபம்" சென்றடைந்தாள் என்றும் தேவி புராணம் சொல்கின்றது.

மகிஷாசுரவதம் நடந்தபின் தேவர்களுக்கு பின்வரும் தனது 32 சிறப்பு பெயர்களைக் கூறி இந்த 32 சிறப்பு பெயர்களும் மிக மிக இரகசியமானவை. இஃது எளிதில் எவராலும் உணரக்கூடியதல்ல. மூன்று உலகங்களிலும் இந்த துதிக்குச் சமமான பிரார்த்தனை ஏதும் கிடையாது. இந்த 32 சிறப்பு துதிகளையும் யார் பக்தியுடன் துதிக்கின்றனரோ அவர் பயங்களிலிருந்தும், பாவங்களிலிருந்தும் விடுபடுகின்றனர். எல்லாவித ஆபத்துகளிலிருந்தும் காக்கப்படுகின்றனர் என்று உணர்த்தினாள்.

1. ஓம் ஸ்ரீ துர்கா நம
2. ஓம் ஸ்ரீ துர்கார்த்திசமணீ நம
3. ஓம் ஸ்ரீ துர்கா பத்வினிவாரிணீ நம
4. ஓம் ஸ்ரீ துர்கமச்சேதினீ நம
5. ஓம் ஸ்ரீ துர்கஸாதினீ நம
6. ஓம் ஸ்ரீ துர்க நாசினீ நம
7. ஓம் ஸ்ரீ துர்க தோத்தாரிணீ நம
8. ஓம் ஸ்ரீ துர்க நிஹந்தரீ நம
9. ஓம் ஸ்ரீ துர்க்மாபஹா நம
10. ஓம் ஸ்ரீ துர்க மஞானதா நம
11. ஓம் ஸ்ரீ துர்கதைத்ய லோகதவானலா நம
12. ஓம் ஸ்ரீ துர்கமா நம
13. ஓம் ஸ்ரீ துர்கமா லோகா நம
14. ஓம் ஸ்ரீ துர்க்காத்மஸ்வரூபிணீ நம
15. ஓம் ஸ்ரீ துர்க்க மார்கப்ரதா நம

16. ஓம் ஸ்ரீ துர்க்காத்ம வித்யா நம
17. ஓம் ஸ்ரீ துர்கமாச்ரிதா நம
18. ஓம் ஸ்ரீ துர்கமஞான ஸ்மஸ்தானா நம
19. ஓம் ஸ்ரீ துர்க்க மத்யானபாஸினி நம
20. ஓம் ஸ்ரீ துர்க்க மோகா நம
21. ஓம் ஸ்ரீ துர்க்க மகா நம
22. ஓம் ஸ்ரீ துர்க்க மார்த்த ஸ்வரூபிணீ நம
23. ஓம் ஸ்ரீ துர்க்க மாசுரஸம் ஹர்த்ரீ நம
24. ஓம் ஸ்ரீ துர்க்கமாயுததாரிணீ நம
25. ஓம் ஸ்ரீ துர்க்கமாங்நீ நம
26. ஓம் ஸ்ரீ துர்கமாதா நம
27. ஓம் ஸ்ரீ துர்க்க மாயா நம
28. ஓம் ஸ்ரீ துர்க்க மேச்வரீ நம
29. ஓம் ஸ்ரீ துர்க்க பீமா நம
30. ஓம் ஸ்ரீ துர்க்க பாமா நம
31. ஓம் ஸ்ரீ துர்கபா நம
32. ஓம் ஸ்ரீ துர்கதாரிணீ நம*

மகிஷாசுரன் வதம் முடிந்த பிறகு தேவியை தேவர்கள் 'மகிஷாசுரமர்த்தினி' என்ற பெயர் சூட்டி தோத்திரம் செய்தனர். அவர்கள் தோத்திரத்தில் மகிழ்ந்த தேவி இந்த மகிஷாசுரமர்த்தினி தோத்திரத்தைத் துன்பம் நேரும்போது பாடுங்கள். நான் நேரிடையாகவோ மறைமுகமாகவோ உங்களுக்குக் காட்சியளித்து உங்களது துயரங்களைப் போக்குவேன் என்று வரமளித்து பாற்கடலின் நடுவேயுள்ள 'மணித்வீபம்' என்ற தன்னுடைய மனோரம்யமான லீலாஸ்தானத்தை அடைந்தாள்.

★ திரிபுர ரகசியம் - 46-வது அத்யாயம்.

இப்படி தேவர்கள் தேவியைப் போற்றிப் புகழ்ந்த மகிஷாசுரமர்த்தினி தோத்திரமே இன்று துன்பத்தால் வாடும் ஒவ்வொருவரும் துதித்து அருள் பெறும் பக்திப் பாமாலையாகப் புகழ்பெற்று விளங்குகின்றது.

இந்த ஸ்தோத்திரத்தைப் படிப்பவரனைவரும் சகல சத்ருபாதைகளும் நீங்கப் பெற்று சர்வமங்களமும் நலமும் பெறுவது உறுதி என்று அனுபவத்தவர்கள் சொல்கின்றனர்.

ஸ்ரீம்

**மகிஷாசுர மரித்தினி ஸ்தோத்திரம்**

அயிகிரி நந்தினி நந்தித மேதினி
விச்வ வினோதினி நந்தநுதே
கிரிவர விந்திய சிரோதி நிவாஸிநி
விஷ்ணு விலாசினி விஷ்ணு நுதே
பகவதி ஹே சிதிகண்ட குடும்பினி
பூரி குடும்பினி பூரிக்ருதே
ஜெய ஜெய ஹே மகிஷாசுரமர்த்தினி
ரம்யக பர்தினி சைல ஸுதே

(இந்த நூலின் 169ம் பக்கத்தில் முழு ஸ்தோத்திரமும் உள்ளது)

இந்த மகிஷாசுரனின் பிறப்பு பற்றி இருவேறு கருத்துக்கள் நிலவுகின்றன.

கௌதமரின் பெண்ணும் சுநேத்ரரின் மனைவியுமான சுமித்திரை என்ற பதிவிரதை நீராடிவிட்டு கையில் நீர்க் குடத்துடன் வந்து கொண்டிருந்தாள். கடுமையான நிறமும், பருத்த சரீரமும் கொண்ட அவளை இந்திரன் எருமை போலிருக்கிறாய் என்று கேலி செய்ய, சுமித்திரை தன்னைக் கேலி செய்த இந்திரனுக்கும் அவன் மனைவிக்குப் பிறக்கும் பிள்ளையும் எருமையாகக் கடவது என்று சாபமிட்டாள்.

சுமித்திரையின் சாபப்படியே எருமையாக மாறிய இந்திராணி பூலோகத்தில் காட்டில் திரிந்து கைடபனுடைய வீரியம் சிந்தியிருந்த புல்லை மேய அப்போது அங்கு வந்த ரம்பன் இந்திராணியாகிய அந்த எருமையுடன் சேர்ந்தபோது அந்த எருமைக்குப் பிள்ளையாக மகிஷாசுரன் பிறந்தான். பின்னர் சுமித்திரையின் சாபப்படியே அந்த எருமைக்குப் பிறந்த மகிஷாசுரனே இந்திரனின் செருக்கை அடக்கினான் என்பது திரிபுரா ரகசியம் என்னும் புராணம் கூறும் செய்தி.

ஸ்காந்தம் ருத்ர சம்ஹிதை என்ற சமஸ்கிருத நூல் மகிஷாசுரனின் பூர்வ ஜென்ம வரலாறு பற்றிய குறிப்பு ஒன்றைத் தருகிறது.

சென்ற பிறவியில் மகிஷாசுரன் வரமுனி என்ற முனிவராய் இருந்தான். அகத்தியர் முதலான ஐம்பது ரிஷகள் அவரின் தவத்தின் பெருமையைக் கேள்விப்பட்டு அவரைக் காண வந்தனர். ஆனால், வர முனியோ தனது எல்லையற்ற வரசக்தியால் அவர்களை மதிக்காதவராய் இருந்தார். அதனால் கோபமுற்ற அகத்தியர் முதலான ஐம்பது முனிவர்களும் நாங்கள் வந்ததை அறிந்தும் எருமை மாதிரி கண்டு கொள்ளாமலிருந்து அவமதித்து விட்ட படியால் நீ எருமையாகப் பிறக்கக் கடவாய் என்று சாபமிட்டனர்.

தன்னுடைய தவறை உணர்ந்த வரமுனி வருந்தி சாப விமோசனம் கேட்க அந்த முனிவர்களும் பராசக்தியின் திருவருளால் உனக்கு நற்பதம் கிடைக்கும் என்று கூறிச் சென்றனர்.

அகத்தியரின் சாபப்படியே வரமுனி மகிஷாசுரனாய் அவதரித்தான். அந்த சாபப்படியே தேவியால் சம்ஹாரம் செய்யப்பட்டான். அப்படி வெட்டப்பட்ட அவனுடைய தலை தேவியின் திருவடியில் இருக்கும் பேறு பெற்றான்.

ஒரு சமயம் மகிஷாசுரன் காத்பாயன மகரிஷியின் சீடனை பெண்ணுருக் கொண்டு மோகிக்கச் செய்தான்.

இதனால் கோபம் கொண்ட காத்யாயன் "பெண்ணுருக் கொண்டு என் மகளை மோகிக்கச் செய்தமையால் நீ ஒரு பெண்ணாலேயே மடிவாய்" எனச் சாபமிட்டார்.

மகிஷாசுரனை அழிக்க இதனை நல்ல சந்தர்ப்பமாகப் பயன்படுத்திக் கொண்ட பிரம்மா, விஷ்ணு, ருத்ரர், இந்திரன் முதலிய தேவர்கள் காத்யாயராசிரமத்தில் வந்து தங்கி பராசக்தியைப் பிராத்தித்தனர்.

மகிஷாசுரனை அழிப்பதற்காக தேவி காத்யாயனாச் சிரமத்தில் உதித்தாள். அதனால், இந்த துர்க்கையை காத்யாயணி என்றும் தேவர்கள் அழைத்தனர் என்று காத்திகாயினி புராணம் கூறுகின்றது.

காளிகா புராணம் மகிஷனின் சம்ஹாரத்தைப் பற்றிய நிகழ்ச்சியில் ஒரு புதிய செய்தியையும் வெளியிடுகின்றது.

ஒரு சமயம் மகிஷாசுரன் தன் தலையை வெட்டி பராசக்தி ரத்தபானம் செய்வதுபோலக் கனவு கண்டான். திடுக்கிட்டு எழுந்து பார்த்தபோது அதிகாலை நேரமாயிருக்கவே, அந்தக் கனவு பலித்து விடுமோ என்ற அச்சத்தில் அம்மாதிரியானதொரு நிலையைத் தவிர்த்துக் கொள்ளும்பொருட்டு அன்று முதல் தேவியை நோக்கிக் கடுமையான தவம் செய்ய முற்பட்டான்.

மகிஷாசுரனின் தவத்திற்கு மகிழ்ந்த தேவி அவன் முன் தோன்றி வேண்டும் வரம் யாது? என்று கேட்க அவனோ தன் கனவு பற்றித் தெரிவித்து தன் முன் ஜென்ம நிகழ்ச்சிகளை நினைவு படுத்துமாறு வேண்டிக் கொண்டான்.

தேவியும் அவனது முன் ஜென்ம நிகழ்ச்சிகளைக் கனவுக் காட்சிகளாக அவனுக்கு உணர்த்தினாள். அவன் அவனுடைய முன்னிரு ஜென்மங்களில் மகிஷனா யிருந்ததையும்; முதல் பிறவியில் பதினாறு கைகள் கொண்ட 'உக்ரசண்டி' என்ற பெயருடைய தேவியினால் கொல்லப் பட்டதையும், இரண்டாம் பிறவியில் பதினெட்டு கைகள்

கொண்ட பத்ர காளியால் சம்ஹாரம் செய்யப்பட்டதையும் அவனுக்கு உணர்த்தினாள்.

சுய நினைவுக்குத் திரும்பிய மகிஷன் இந்த ஜென்மத்திலாவது எனக்கு மரணமில்லாத வாழ்க்கையை அருளக் கூடாதா? என்று கேட்க அவனது வரத்தைக் கேட்டு சிரித்துக் கொண்ட தேவி, "மகிஷா இந்தப் பிறவியிலும் உனக்கு என்னால் மரணம் ஏற்படும் என்று விதியிருப்பினும் உன்னுடைய சிரத்தினால் மட்டும் நீ உயிர் வாழ்வாய். என்னுடைய வாகனமாகவும் இருப்பாய். எனக்கு அளிக்கப்படும் ரத்த பலிகளை நீ சாப்பிட்டு மகிழ்வாய்" என வரமளித்தாள்.

அவளுடைய வரத்தின்படியே மகிஷன் துர்க்கையினால் சம்காரம் செய்யப்பட்டு அவனது தலையைத் தனது பாதத்தில் வைத்து பெருங் கருணை செய்தாள் என்று காளிகா புராணம் கூறுகின்றது.

மகிஷாசுரனின் தோற்றம் குறித்த மற்றொரு செய்தியை 'ஸ்ரீ துர்கா சப்தசதி' நமக்கு தெரிவிக்கின்றது.

சிந்துத்வீபன் என்ற முனிவர் மகிஷ்மதீ என்ற வனத்தில் தவம் செய்து வந்தார். அதே வனத்தில் விப்ரசித்தி என்ற அசுரனின் மகள் வித்யுன்மதீ எருமை வடிவம் தாங்கி அவரது தவத்தைக் குலைக்க முற்பட்டாள். தன் தவத்தைக் கலைக்க முயன்ற அந்த அரக்கியை நூறு ஆண்டுகள் எருமையாகவே இருந்து விடும்படி சாபமிட்டார் சிந்துத்வீபன்.

தன் தவறுக்கு வருந்திய அரக்கன் மகள் தனக்கு சாப விமோசனம் வழங்குமாறு முனிவரிடம் வேண்டினாள். மகிஷ உருவமுடைய மகனை என்று நீ பெறுகிறாயோ அப்போது இந்தச் சாபம் தீருமென்று சாப விமோசனம் வழங்கினார்.

வித்யுன்மதீ என்ற அந்த அசுரப் பெண் நர்மதை நதியில் நீராடும்போது அங்கு நீராட வந்த சிந்துத்வீபன் முனிவர்

அவளது ஆடையற்ற உண்மை உருவைக்கண்டார். அவளது பேரழகு அவரை வசீகரிக்கவே அவரிடமிருந்து வந்த வீரியம் நதியில் சிந்தியது. வித்யுன்மதீ என்ற எருமை அந்த வீரியத்தை அருந்த அவளிடமிருந்து மகிஷாசுரன் பிறந்தான். வித்யுன்மதீயின் சாபமும் தீர்ந்து அவளது பழைய வடிவை அடைந்தாள் என்று ஸ்ரீ துர்கா சப்தசதி தெரிவிக்கின்து. ★

மகிஷனைக்கொன்ற மகிஷாசுரமர்த்தினி தங்க நிற மேனியும் அழகிய இளம் பெண் தோற்றமும் கோபப் பார்வையும் கொண்டவளாகச் சிம்மத்தின் மீது அமர்ந்திருப்பாள். இவளுக்கு இருபது கரங்கள். வலப்புறக் கரங்களில் சூலம், வாள், சக்கரம், பரசு, வக்ரம் ஆகியவைகளும், இடப்புறக்கரங்களில் ச்ங்கு, வில்லம்பு, துணித்த சிரம், சிரசிலிருந்து சிந்தும் ரத்தத்தைப் பிடிக்கும் கிண்ணம். கேடயம் முதலியவைகளை ஏந்தியிருப்பாள் என்று ஆகம நூல்கள் மகிஷாசுரமர்த்தினியின் உருவ அமைப்பை விவரிக்கின்றன. இந்த வடிவ அமைப்பில் துர்க்கையின் வாகனமான சிம்மமும் அரக்கனைக் குதறிய நிலையும், தேவி அசுரன் கழுத்தில் சூலாயுத்தை ஏறியும் நிலையும் உண்டு.

இந்த மகிஷாசுரமர்த்தினிக்கு பண்டைய நினைவுச் சின்னமாக மாமல்லபுரம் மகிஷாசுரமர்த்தினி குகை திகழ்கின்றது. மாமல்லபுரம் கலங்கரை விளக்கத்திற்குப் போகும் வழியிலுள்ள மண்டபம் போன்ற அமைப்புடைய இக்குகையில் கையிலே கதையேந்திப் போரிடும் மகிஷனும், வில்லேந்தி வீரச் சமர்புரியும் தேவியின் வடிவமும் தோற்றோடும் அரக்கர்களின் கூட்டமும் அவர்களை விரட்டியடிக்கும் அன்னையின் சேனைகளும் அழகுற செதுக்கப்பட்டுள்ளன. மாமல்லபுரச் சிற்பங்களில் இதுவே தலையாயதாகக் கருதப்படுகிறது.

---

★ மார்க்கன்டேய புராணத்தில் ஸ்ரீ சப்தசதி 100 சுலோகங்களைக் கொண்டது. இந்த சப்தசதி மந்திரங்களால் உணர்த்தப்பெறும் தேவதை துர்க்கை

இந்த மகிஷாசுரமர்த்தினி சிற்பத்திற்கு இணையான மற்றொரு மகிஷாசுரமர்த்தினி சிற்பம் திருவாரூர் வான்மீகநாதர் கோவிலில் மகிஷாசுரமர்த்தினி சன்னதியில் காணப்படுகிறது. சிற்பம் புதியது என்றாலும் பழமை நிகழ்ச்சிகளை அப்படியே தத்ரூபமாகப் பிரதிபலிக்கிறது.

சிம்மத்தின் மீது அமர்ந்து மகிஷனுடன் தேவி போரிடும் நிலையில் அவளின் வலக்கைகளில் சுத்தி, வாள், சூலம், சக்கரம் ஆகியவைகளும் இடக்கைகளில் சங்கு, வில், கேடயம், அசுரன் தலை முடியைப் பிடித்தபடி ஒரு கால் எருமை மீதும், மற்றொரு கால் அசுரன் மீதும் ஊன்றியபடி தேவி காட்சியளிக்கின்றாள்.

அவளின் பக்கத்தில் மகிஷாசுரன் வாள், கேடயம் ஏந்தி போரிடும் நிலை செதுக்கப்பட்டுள்ளது. மகிஷனின் முகத்தில் மீசை அழகாக வடிக்கப்பட்டுள்ளது. தேவியின் வாகனமாகிய சிம்மம் அசுரனின் வடிவமாகிய எருமை மீது பாய்கிறது. எருமை தலை இன்றி உடல் பகுதி முழுவதுமாகக் காட்டப்பட்டுள்ளது.

இப்படி துர்க்கையின் தோற்றத்திற்கு மகிஷாசுரனும் அவளை சம்மரிக்க தேவி அவதரித்த நிலையையும் புராணங்கள் கூறினாலும் நேரிடையாக துர்க்கை பெயர் காணப்படாததால் இதனை துர்க்கமாசுரன் வரலாற்றுடன் இணைத்து துர்க்கனை வென்ற தேவி துர்க்கை என்ற பெயர் பெற்றதாகச் சில புராணங்கள் கூறுகின்றன.

இரண்யாட்சன் வம்சத்தில் வந்த குரு என்ற அசுரனின் மகனாகப் பிறந்த துர்க்கமன் சிறிய வயதினிலேயே பிரம்மாவை நோக்கிக் கடுந்தவம் மேற்கொண்டான். அவனது தவத்தைக் கண்டு காட்சியளித்த பிரம்மா விடமிருந்து அசுரர், மனிதர், தேவர் முதலியவர்களிடமுள்ள அனைத்து மந்திர சக்திகளும் தன்னை வந்து அடைய வேண்டும் என்ற வரத்தைப் பெற்றான்.

இவ்விதம் அனைத்து மந்திரங்களையும் துர்க்கமன் கைக்கொண்டதால் மூவுலகங்களும் அவன் வசமாகியது. மந்திரங்கள் அனைத்தும் துர்க்கமனிடம் ஒப்புவிக்கப்பட்டதால் பூவுலகில் மந்திரங்கள் மறக்கப்பட்டன. அதனால் ஜபம், ஹோமம் முதலிய கர்மாக்கள் நடைபெறவில்லை. இப்படி பூஜை புனஸ்காரங்கள் செய்யாதபடியால் தேவர்களுக்கு அவர்களுக்குரிய அவிர் பாகம் கிடைக்கவில்லை. இதனால், அவர்கள் தம் சக்தியை இழந்து விட்டார்கள். சக்தியிழந்த தேவர்களால் பூமியில் சுபீட்சத்தை அளிக்க இயலவில்லை.

பூமியில் நீர்வளம் குன்றியது. மழை என்பது மறைந்து போன விஷயமாயிற்று. நதி, கிணறு, குளம், குட்டை எல்லாம் வறண்டு பெரும் பஞ்சம் தாண்டவமாடியது. தேவர்களும் மனிதர்களும் தேவியிடம் தங்கள் நிலைகுறித்தும் பூமியின் பசுமையற்ற நிலைகுறித்தும் முறையிட்டனர்.

உயிர்கள் பஞ்சத்தால் படும் வேதனையைக் கண்டு தேவியின் கண்கள் கருணையினால் கசிந்தன. அக்கண்களிலிருந்து வெளிப்பட்ட கண்ணீர்த் துளிகளால் பூமியில் பசுமை தோன்றியது.

தேவி உயிர்களுக்காகப் பல கண்களுடன் தேவர்கள் மகரிஷி கண் முன் காட்சியளித்தாள். இப்படி நூறு கண்களால் கண்ணீர் சிந்தி மழையைப் பொழிவித்ததால் இவள் **'சதாக்ஷீ'** என்று அழைக்கப்பட்டாள்.

வெறும் மழைமட்டும் போதுமா! உலக உயிர்களுக்கு பசிபோக்கும் உணவுப் பொருட்களான காய், கனி, கிழங்குகள், கீரைகள், மலர்கள் இவைகளைக் கையில் ஏந்தி உலக உயிர்களின் பஞ்சத்தைப் போக்க வறண்ட நிலங்களில் மழையைப் பெய்வித்து பயிர் தழைக்கச் செய்தாள். அதனால் இந்த தேவி **'சாகம்பரீ'** என்ற சிறப்பு பெயரையும் பெற்றாள்.

பூலோகத்தில் மறுபடியும் பசுமை தழைப்பதை அறிந்த துர்க்கமன் கடும் கோபம் கொண்டான். இந்த நிலையை உண்டாக்கிய தேவியை ஒரு வழி செய்து விடுவது என்று பெரும் படையுடன் புறப்பட்டான். தங்களுக்கு உதவிபுரிய போய் தேவி பெரும் ஆபத்தில் சிக்கிக் கொண்டாளோ என்ற ஐயத்துடன் உலக உயிர்கள் அச்சப்பட்டன. அவனின் போர் முழக்கம் கேட்டு தேவர்களும் அஞ்சினர். இந்தத் தடவை துர்க்கமன் தங்களை அழிக்காமல் விடமாட்டான் என்று நடுங்கிக் கொண்டிருந்தனர்.

கருணை வடிவான தேவி தேவர்களையும், ரிஷிகளையும், மற்றவர்களையும் காப்பாற்றும் எண்ணத்தில் அக்கினி மயமான ஒரு பிரகாரம் அமைத்து அதனுள் அவர்களை இருக்கச் செய்து, அந்த அக்கினி பிரகாரத்தின் வெளியில் இருந்து கொண்டு துர்கமாசுரனுடன் கடும் போர் புரிந்தாள்.

தேவியின் உடலிலிருந்து தாரணீ முதலான பதினாறு சக்திகளும் உதித்து பின்னர் இவைகள் முப்பத்திரண்டாகப் பிரிந்து இறுதியில் அறுபத்து நான்கு சக்திகளாகத் திரண்டு தேவியின் சேனைகளாக உருமாறி துர்க்கமனுடன் போரிட்டன.

தேவி துர்க்கமனை வதம் செய்ய 'த்'காரம், 'உ'காரம்; 'ரே'பம் 'க'காரம், 'ஆ'காரம் என்ற ஐந்து பாணங்களை எய்தாள். இந்த ஐந்து பாணங்களும் துர்க்கமாசுரனை வதம் செய்தன. அவனிடமிருந்த மந்திரங்களெல்லாம் தேவியை வந்தடைந்தன.

மந்திர சக்திகளனைத்தும் ஜோதி வடிவில் தேவியை வந்தடைந்தமையால் அவள் 'சர்வ மந்திரமயீ' என்று அழைக்கப்பட்டாள். துர்கமாசுரனை அழித்து உயிர்களின் துக்கத்தைப் போக்கியமையால் அவள் துர்க்கை என்ற

பெயரை அடைந்தாள் என்று புராணங்கள் துர்க்கையின் தோற்றத்திற்குக் காரணம் கூறுகின்றன.



# 4. துர்க்கையின் வரலாற்று அறிமுகம்

துர்க்கையின் தோற்றம் குறித்த புராண வடிவமைப்பு ஒருபுறமிருப்பினும் அவளின் வரலாற்று வடிவத்தையும் அறிந்து கொள்வது அவசியமாகிறது.

துர்க்கை என்ற பெண் தெய்வம் திராவிடராகிய தமிழரின் பண்டு தொட்ட தாய் தெய்வ வடிவத்தின் ஒரு கூறுபாடு ஆகும். முழுக்க முழுக்க ஆரியரின் தெய்வமாக வழிபடப்பட்ட இந்தத் துர்க்கை திராவிடரின் வழிபாட்டு தெய்வமாக கால் ஊன்றிய கதையை வரலாற்று ஏடுகள் வடிவமைத்துக் காட்டுகின்றன.

தமிழகத்தைப் பொருத்தவரை துர்க்கையின் வழிபாடு சிலப்பதிகாரக் காலத்தில் பிள்ளையார் சுழி போடப்பட்டது என்பது

“வரிவளைக்கை வாளேந்தி
மாமயிடற் செற்றுக்
கரியதிரி கோட்டுக் கலைமிசை
மேல் நின்றாயால்.”

என்ற சிலம்பு வேட்டுவ வரியால் புலனாகிறது. இதனை கொற்றவைக் கோலம் என்று வாதிடுவாரும் உள்ளனர்.

சிலப்பதிகார காலத்திற்கு முன்... துர்க்கை என்பதன் வடிவம் தமிழர்கள் கற்பனையும் செய்யாத திருஉருவம்.

நாடோடியாய் ஓடித்திரிந்த மனிதன் இயற்கையின் சீற்றத்திலிருந்து தன்னைப் பாதுகாத்துக் கொள்ள இயற்கையையே துணையாக நாடினான்.

அச்சுறுத்தும் இயற்கை எப்படி தனக்குப் பாதுகாப்பைத் தர இயலும் என்று சிந்தனையிட்ட மனிதன் தன்னைப் பாதுகாக்க கல்லாலான கருவிகளையும் கழி, இரும்பு போன்ற ஆயுதங்களையும் உருவாக்கி செயல்படுத்தினான். தன் பாதுகாப்புக்கு அவைகள் உத்தரவாதமளித்ததால் அந்த ஆயுதங்களையே மேடைகளிட்டு வைத்து வழிபடத் தொடங்கினான்.

வேட்டையாடும் தொழிலிலிருந்து வேளாண்மைத் தொழிலுக்கு மாறிய மனிதன் அந்த வேளாண்மைக்கு உறுதுணையாய் நின்ற பெண்மையையும் போற்றத் தொடங்கினான். தன்னை ஈன்ற தாய்க்கும் தாய்மைக்கும் மதிப்பளித்த மனிதன் தாய்த் தெய்வ வழிபாட்டைத் துவங்கினான்.

வரலாற்றுக்கு முற்பட்ட காலத்தில் உலகமெங்கும் தாய்த் தெய்வ வழிபாடே இருந்து வந்தது. உலகின் பழமையான நாகரிகமான இந்து சமவெளி நாகரிகத்தின் புனிதப் பொருட்களில் இந்தத் தாய்த் தெய்வ வழிபாட்டுச் சின்னங்கள் கிடைத்துள்ளமை இதற்குச் சான்று கூறுபவையாக உள்ளன.

இவ்விதம் கற்கால மனிதன் முதல் வரலாற்றுக்கு அறிமுகமான மனிதன் வரை வழிபட்ட தாய்த் தெய்வ வழிபாட்டு சுடுமண் பொம்மைகள் இந்தியாவில் மிகுதியாகக் கிடைத்துள்ளன. சிந்து சமவெளி, ஹரப்பா, மொகஞ்சாதாரோ இலச்சினைகள், தமிழ்நாட்டு ஆதிச்ச நல்லூர் இலச்சினைகள் ஆகியவற்றிலும் மற்றும் இந்தியாவெங்கும் நடத்தப்பட்ட அகழ்வாய்வுகளிலும் இத்தகைய சுடுமண் பொம்மைகள் கிடைத்தன.

இந்த அகழ்வாய்வுத் தடங்களைக் கொண்டு பெண் தெய்வ வழிபாடு இரு நிலைகளில் வழிபடப்பட்டு வந்துள்ளமையை உய்த்துணரலாம். ஒன்று பெண்ணைத்

தாயாக வழிபடுவது, இரண்டாவது பெண்ணைக் கன்னியாக வழிபடுவது.

தாயாக வழிபட்ட தெய்வம் மோடி என்ற பெயரால் அறிமுகமாகி நிற்கின்றது. இஃது தாய்மையாய்ப் போற்றப்பட்ட தெய்வம். மோடு என்றால் வயிறு என்பது பொருள். வயிற்றைப் பெரியதாகவும், தனங்களைப் பெரியதாகவும் கொண்ட பெண் தெய்வப் பொம்மைகள் தாய்மையை அடிப்படையாகக் கொண்டவை. பெற்ற வயிறு பெரியதாக இருக்க வேண்டும். அமுதூட்டும் மார்புப் பகுதிகளும் எடுப்பாக இருக்க வேண்டும் என்ற நோக்கில் வடிவமைக்கப்பட்ட இத்தகைய டெர்ர கோட்டா களிமண் பொம்மைகள் சிந்து சமவெளியன்றி இந்தியாவின் பழமை பிரதேசங்கள் எல்லாவற்றிலும் கிடைக்கின்றன.

மற்றொரு பெண் தெய்வம் கன்னியின் வடிவமாகச் சித்தரிக்கப்பட்டுள்ளது. அளவான மார்பகமும் சிறுத்த இடையும் அமைந்த இத்தகைய கன்னித் தெய்வங்களின் பெண் குறிப் பகுதி மட்டும் சற்று உப்பலாக எடுப்பான தோற்றமுடன் வடிவமைக்கப்பட்டுள்ளன. இஃது உலகெங்கும் பின்பற்றப்பட்ட வளமைச் சடங்குக்குப் பெண் தெய்வத்துடன் தொடர்பு படுத்திய நிலை எனலாம். ஆணுறுப்புடன் தொடர்புடைய லிங்க வழிபாடு போன்று பெண்ணுறுப் போடு தொடர்புடைய யோனி வழிபாடும் அக்காலத்தில் நிலவியதை இந்தக் களிமண் பொம்மைகள் நிரூபிக்கின்றன.

இஃது வட இந்தியாவிற்கு மட்டுமின்றி தென் தமிழகத்திற்கும் பொருந்தும். நாடோடி விவசாயியாகி, கூட்டத்தலைவனாகி, சின்னஞ்சிறு பிரதேசங்களைத் தன் அரசாக அமைத்துக் கொண்ட காலத்தில் தன் வெற்றிக்குத் துணை நிற்கும் தெய்வமாக பெண்மையைப் போற்றி நின்றான்.

சிற்றரசுகளும் சரி பேரரசுகளும் சரி சங்க காலத்தே தன் வெற்றிக்குரிய பெண் தெய்வமாக கொற்றவையை

உருவாக்கின. இஃது அரசர்கேயன்றி அவனது வீரர்களுக்கும் வெற்றித் தெய்வமாகக் காட்சியளித்தது.

பின்னர் தமிழ்பெருந்நிலத்தில் நிலப்பாகுபாடு அடிப்படையில் ஐவகை நிலங்களுக்கும் தனித்தனி தெய்வங்கள் உருவாக்கப்பட்டன. சிவவழிபாடு தலைநிலை எய்தியது. குறிஞ்சிநிலத்தலைவன் முருகனாகவும், முல்லை நிலக்கடவுள் மாயோனாகவும், ஏனைய நிலங்களுக்குத் தலைவியாக கொற்றவையும் வழிப்படப்பட்டாள்.

சிந்து சமவெளிமக்கள் பசுபதியையும்(சிவனையும்) தாய் தெய்வத்தையும்(பழையோள்?) வழிபட்டுள்ளனர். ஆரியரின் வருகை இந்தியாவில் நிகழ்ந்தபோது நாடெங்கும் இந்திர வழிபாடு, வருண வழிபாடு அக்னி வழிபாடு போன்றவை செல்வாக்குப் பெற்றன. இஃது மெல்ல தெற்கேயும் எட்டிப்பார்க்க ஆரம்பித்தது.

வடநாட்டுக் கார்த்திகேயனும் தமிழ்நாட்டு முருகக்கடவுளும் ஒன்றாகத் திரித்துக் கூறப்பட்டது. திராவிடர் சிவனும் ஆரியரின் உருத்திரனும் ஒன்றாக்கப்பட்டு சிவபெருமானாகக் கூறப்பட்டது. அதுபோலவே தமிழ்நாட்டு முல்லை நிலக்கடவுளான மாயோனும் வடநாட்டு விஷ்ணுவும் ஒன்றாகச் சித்தரிக்கப்பட்டது.*

வடநாட்டுக் துர்க்கையும் தமிழ்நாட்டுக் கொற்றவையும் ஒன்றாக இணைக்கப்பெற்றது. அஃதாவது கொற்றவையின் மறுவடிவே துர்க்கை** எனக் கூறப்படுகிறது.

சிலப்பதிகாரக் காலத்தே அறிமுகமான துர்க்கைக்கு இந்தியாவின் வடக்குப் பகுதிகளில் கிடைத்த வரவேற்பை போன்று தமிழகத்தில் கிடைக்கவில்லை. கொற்றவை மற்றும் காளி தெய்வங்களை வழிபட்ட மக்கள் துர்க்கையை தங்கள் வழிபாட்டுத் தெய்வமாக ஏற்கத் தயங்கினர்.

---

★ தாய்த் தெய்வ வழிபாடு - பி. எல். சாமி.

★★ காளி தரிசனம் - சி. எஸ். முருகேசன் .

தங்களின் பழைய தெய்வங்களான கொற்றவைக்கும் காளிக்கும் அளிக்கப்பட்ட முக்கியத்துவத்தைத் துர்க்கை தெய்வத்திற்கு அளிக்கத் தயங்கினர்.

பெண் தெய்வ வழிபாட்டைப் பொருத்தவரை துர்க்கை காளி அல்லது கொற்றவையுடன் ஒன்றுபடுமையாதவரை தங்கள் தெய்வீகக் கொள்கை ஒரு முடிவுக்கு வராது என்று எண்ணமிட்ட ஆரியர் உக்கிர தெய்வமான காளி ஊருக்குள் இருக்கலாகாது என்றும், அந்தக் காளியானவள் ஊரின் எல்லை அல்லது நாட்டின் எல்லைகளுக்குப் பெருந்தெய்வம் என்று கூறி ஊருக்குப் புறத்தே ஒதுக்கி வைத்தனர்.

தங்கள் தெய்வத்தின் காரணமாக இதற்குக் கட்டுபட்ட தமிழ் மக்கள் ஊருக்கு வெளியே காளிக்குக் கோயில்களை வைத்து விழாக்களைப் பெரிய அளவில் கொண்டாடினர்.

இதே சமயத்தில் காளியின் கோபம் தணிந்த சாந்த வடிவமே துர்க்கையாக ஊருக்குள் வந்து அருள் செய்கின்றாள் என்று துர்க்கை வழிபாட்டை பெருந்தெய்வவழிபாட்டுடன் கலக்க முற்பட்டனர். துர்க்கைக்குத் தனி சந்நிதிகளேதும் அமைக்காமல் கோஷ்ட தெய்வங்களாக நிலைநிறுத்தி ஆண் தெய்வ வழிபாட்டை ஊக்குவிக்கத் தொடங்கினர்.

பல்லவர் மற்றும் முற்காலப்பாண்டியர் காலத்தில் துர்க்கை மற்றும் காளிவழிபாடு இருநிலைகளில் உருவாக்கப்பட்டது. மலைகளில் குடைவிக்கப்பட்டு வழிபடுவது ஒரு வகை. சதுரம் அல்லது செவ்வகப் பலகைகளில் துர்க்கையின் வடிவத்தைச் செதுக்கி ஏரிக்கரைகளிலும் வயல்வெளிகளிலும் திறந்த வெளியிலும் நட்டு வழிபடுவது மற்றொரு வகை.

இந்தக் குடவரைக்கோயில்கள் கற்றளிகளாக உருப்பெற்ற காலத்தில் கூட துர்க்கை வழிபாடு தனிநிலையில் வளர்ச்சி ஏதும் காணவில்லை என்பது ஆங்காங்கே வயல்வெளிகளில் தனி நிலைச் சிற்பங்களாகக்

கிடைக்கும் துர்க்கை சிற்பங்களைக் கொண்டு தெளியலாம்.

பல்லவர்கள் வடக்கேயிருந்து வந்தவர்களாகையால் அவர்தம் காலத்தில் நிறைய துர்க்கைச் சிற்பங்களைச் செதுக்கி வழிபாடாற்றினர். அவரைத் தொடர்ந்து அவரது கிளை வழியினர் அரசாண்ட காலத்திலும் இஃது வளர்ச்சியடைந்ததேயன்றி தனித் தெய்வ வழிபாடாக உருப்பெறவில்லை. சிறு தெய்வ வழிபாடாக ஆலய, கோட்டை, கோட்டங்களின் தெய்வ உருவாக மட்டுமே இன்றும் வழிபடப்பெறுகிறது.

ஒரு சில கோவில்கள் விதிவிலக்காக இருக்கின்றனவே தவிர தனித் தேவதை வழிப்பாடாக இது மலரவில்லை. ஆனால், இதன் பண்டைய வடிவமான கொற்றவை அல்லது காளி வழிபாடு தனித் தெய்வ வழிபாடாக இன்றும் தொடர்ந்து கொண்டிருப்பதற்கு அதன் புகழ் பெற்ற திருத்தலங்களே சான்றாக அமைகின்றன.



# 5. துர்க்கையின் திருவடிவம்

மகிஷாசுரனை சம்காரம் செய்வதற்காகத் தேவர்களால் படைக்கப்பட்ட திருவடிவமே துர்க்காதேவி.

தேவர்கள் வேண்டுகோளுக்குச் செவிசாய்த்து மும்மூர்த்திகளும் ஒன்று சேர்ந்து தங்கள் தேஜஸிலிருந்தும், தேவர்களின் தேஜஸிலிருந்தும் பதினெட்டுக் கைகள் கொண்டவளாய், சிம்ம வாகினியாய் துர்க்கை உருவாக்கப் பட்டாள்.

தேவர்களின் தேஜஸிலிருந்து இவள் தோற்றுவிக்கப் பட்டதால் 'சர்வ தேவதா சொரூபிணி' என்று போற்றப் படுகின்றாள். தேவர்கள் மகிஷாசுரனை அழிப்பதற்காகத் தங்களுடைய அனைத்து ஆயுதங்களையும் இவளிடம்

அளித்தனர். அதனால் அனைத்துத் தேவர்களுடைய அடையாளங்களும் துர்க்கையிடம் காணப்படுகின்றன. இதனால் இவள் 'மகாலட்சுமி' என்றும் அழைக்கப் படுகின்றாள்.

உலகத்திலுள்ளவர்களுடைய மந்திரங்கள் அனைத் தையும் துர்க்கமன் என்ற அசுரன் தன் வசமாக்கிக் கொண்டான். துர்க்கையானவள் அந்த மகா மந்திரவாதியை சம்காரம் செய்தாள். துர்க்கமனின் மரணத்திற்குப் பின்னர் அவனிடமிருந்த அனைத்து மந்திரங்களும் துர்க்கையின் வசமாயின. அதனால், இவள் 'சர்வ மந்திர சொரூபிணி' என்று அழைக்கப்படுகின்றாள்.

கொடுமைகள் பலபுரிந்த மகிஷாசுரனைக் கொன்று உலகைக் காத்ததால் இவள் 'மகிஷாசுரமர்த்தினி' என்றும் அழைக்கப்படுகின்றாள்.

மகிஷனைக் கொல்வதற்காக துர்க்கையைப் படைக்க விரும்பி ஒப்பற்ற ஒரு பேரழகியைப் படைக்க விரும்பினர். உடனே, பிரம்மாவின் முகத்தினிலிருந்து பத்மராக ரத்னம் போன்ற சிவந்த ஒளியும், சங்கரர் உடலிலிருந்து வெண்ணிற ஒளியும், விஷ்ணு சரீரத்திலிருந்து நீல ஒளியும், இந்திரன் சரீரத்திலிருந்து மின்னல் வண்ண ஒளியும், குபேரன் சரீரத்திலிருந்து தங்க நிற ஒளியும், யமனிடமிருந்து கூந்தல், புருவம் முதலான உறுப்புகளுக்குக் கருமை நிற ஒளியும், அக்னியிடமிருந்து தழல் போன்ற சிவந்த நிறமும், வருணனிடமிருந்து பனி போன்ற வெண்மை நிறத்தையும் பெற்றாள்.

இவ்விதம் அழகு பொருந்திய திருவடிவமாய், மகா லட்சுமியாய் சத்வம், ரஜஸ், தமஸ் என்ற முக்குணங்களையும் கொண்டவளாய் துர்க்கை தோன்றினாள்.

துர்க்கைக்குச் சிவ தேஜஸ் முகமாகவும், யமன் தேஜஸ் கேசங்களாகவும், அக்கினியின் ஒளி மூன்று கண்களாகவும்,

சந்தியா தேஜஸ் புருவங்களாகவும், தட்சனின் ஒளி அழகிய பற்களாகவும், குபேர ஒளி மூக்காகவும், வாயு ஒளி காதுகளாகவும், முருகனின் ஒளி உதடுகளாகவும், விஷ்ணு ஒளி பதினெட்டுக் கரங்களாகவும், வசுக்களுடைய ஒளி விரல்களாகவும், சந்திரனின் பிம்பம் மார்புத் திரளாகவும், இந்திரனின் மின்னல் ஒளி இடையாகவும், பிரம்மாவின் ஒளி இரண்டு பாதங்களாகவும், சூரிய ஒளி பாதங்களின் விரல்களாகவும் மாறின. எந்தெந்தத் தேவர்களின் ஒளி எந்த எந்த அவயங்களாக உருமாறினவோ அவைகள் அத்தேவர்களின் தன்மையனதாகவே விளங்கின. இதை வைக்ருதிக ரகசியம் பின்வருமாறு வர்ணிக்கின்றது.

## தேவியின் வடிவழகு

சங்கரஸ்யச யத்தேஜ
தததேதன் முங்கஜம் |
யாம்யேனே கேசா:
வன்ஹேச்சதேஜஸா நயனத்ரயம் ||
ப்ராஜாபத்யேனே தந்தாச்ச
சந்தயயோஸ் தேஜஸாப் ப்ருரவெள |
தனதஸ்ய ச வாயோச்ச
நாசிகா ச்ரவரணள ததா ||
அதரச்சாதிரக் தோஸ்யா:
ஸஞ்ஜாதோருண தேஜஸா |
உத்தரோஷ்டஸ் ததாரம்ய:
கார்திகேயஸ்ய தேஜஸா ||
வசுனாம் தேஜ ஸாங்குள்ய:
ஸெளம்யேனே ஸ்தனயோநி யுகம் ||
ஐந்த்ரேண மத்யம் கங்கோரூ
வருணஸ்யச தேஜஸா

பாதாங்குஸ்யோ பானவோ
பாதௌப்ராம் ஹேனதேஜஸா ||
ச் வேதானனா நீலபுஜா
சுச்வேதஸ்தன மண்டலா |
ரக்த மத்ய ரக்தபாதா
ரக்த ஜங்கோகுருன்மதா ||
சசித்ர ஜகனா சித்ர மால்யாம்பர
விபூஷணா!
சித்ரானுலேபனா சாந்தி
ரூப சௌபாக்ய சாலினீ |

என்று துர்க்கைத் தேவியின் வடிவழகு வருணிக்கப் படுகின்றது.

இவளுடைய பதினெட்டுக் கரங்களிலும் ருத்ராட்ச மாலை, கோடரி, கதை, அம்பு, வஜ்ரம், தாமரைப்பூ, வில், கமண்டலம், தடி, மின்னல், உறை, கேடயம், சங்கு, மணி, பானபாத்திரம், சூலம், பாசம், சக்ரம் முதலான பதினெட்டு ஆயுதங்களும் அலங்கரித்தன.

துர்க்கையின் வடிவழகு மட்டுமன்றி அவளது வாகனமான சிங்கத்தின் வடிவமும் சப்தசதியில் வருணிக்கப்படுகின்றது.

துர்க்கையின் சிம்ம வாகனம் இமாவான் கொடுத்தது. இதுவும் துர்க்கையைப் போன்றே சர்வதேவதை வடிவம் கொண்டது. துர்க்கையின் சிம்மத்தினுடைய தலையில் சிவனும், கழுத்தில் விஷ்ணுவும், நெற்றியில் பார்வதியும், மார்பில் சாரதா தேவியும், காதுகளில் அஸ்வினி தேவனும், மணிக்கட்டுகளில் சண்முகரும், பக்கங்களில் அஷ்டதிக் கஜங்களும்,

கண்களில் சூர்ய சந்திரர்களும், பற்களில் அஸ்ட வசுக்களும் நாக்கினில் வருணனும், கர்ஜ்ஜனையில் சர்சிகா, சண்டிகா என்ற தேவதைகளும், கன்னங்களில் குபேரனும்,

கழுத்தின் இணைப்புக்களில் நட்சத்திரங்களும், இருதயத்தில் சாதியர் என்ற தேவரும், முடிகளில் சூரிய கிரணங்களும், வீரியத்தில் மகாவிஷ்ணுவும், வாலில் சர்வதேவதைகளும் வீற்றிருந்ததாக சப்தசதி வருணிக்கின்றது.



## 6. நவதுர்க்கை

சித்தர்களின் சிந்தனையில் வியாபித்து அவர்களின் சித்தம் தெளிவடையச் செய்பவளும், சித்தர்களின் மனத்திலும் பக்தர்களின் மனத்திலும் தேன் அருவியாக ஊற்றெடுத்து தேன் போன்ற வாழ்க்கையை அமைத்துக் கொடுப்பவள் துர்க்கை.

அன்பின் வடிவமானவளும், அழகிய உருவில் உள்ளவளும், ஆதியும் அந்தமும் இல்லாதவளும், அணுவாகவும், அணுவிற்குள் அணுவாகவும், அதன் சக்தியாகவும், அண்டத்தை ஏற்படுத்தி அண்டமாகவும் அன்பர்களின் இதயத்தில் குடியிருப்பவள் துர்க்கை.

ஆன்மீகத்தின் ஒளி எதுவோ, ஆணவத்தை அழிப்பது எதுவோ, ஆன்றோர்களின் வாக்காக வருவது எதுவோ, அன்னையின் அன்பு வடிவமானது எதுவோ, அனைத்திற்கும் ஆதாரமாகத் திகழ்வது எதுவோ, அற்புதங்களை, நிகழ்த்துவது எதுவோ, அனைத்திற்கும் அழகைக் கொடுப்பது எதுவோ அந்த ஆனந்த சக்திதான் ஸ்ரீ துர்க்கை.

வறுமையில் வாடுபவர்களை எது காப்பாற்று கின்றதோ, வறுமையில் தத்தளிக்கும் வீட்டிற்கு வாழ வழிகாட்ட எது வருகிறதோ, உன்னதமானதும் சத்திய மானதும் எப்பொழுதும் எந்த நிலையிலும் யாராலும் வெல்ல முடியாததாயும் அண்டம் முதல் அணுவரை உள்ள அனைத்தையும் எந்த சக்தி படைத்து ஆட்டி வைக்கிறதோ அந்த சத்திய திருஉருக் கொண்டவள்தான் துர்க்கை என்று,

யார் துர்க்கை என்பதற்கு ஸ்ரீபரத்வாஜ் சுவாமிகள் பதிலளிக்கின்றார்★.

## 1. பஞ்ச சக்திகள்

உலக உயிர்கள் நன்மையடைய ஆதிபராசக்தி எடுத்த முதல் அவதாரங்கள் ஐந்து என்று தேவி பாகவதம் கூறுகின்றது. அவை:

1. துர்க்கா, 2. இலட்சுமி, 3. சரஸ்வதி, 4. சாவித்திரி, 5. ராதா என்பவைகளாகும். இவைகளைப் பஞ்சசக்திகள் என்றும் கூறுவர். பஞ்ச பூதங்கள் உலகத்தையும் உயிர்களையும் உருக்கொள்ள வைத்தது போல உயிர்களின் இயக்கத்திற்கும் உலகின் இயற்கை சக்திகளின் இயக்கத்திற்கும் இந்த பஞ்ச சக்திகள் மூலமாய் அமைந்து இயக்குகின்றன.

### 1. துர்க்கை

சித்தர்களுக்குத் தலைவியாகவும், சிவபெருமானின் காதலியாகவும், விஷ்ணுவிற்கு மாயையாகவும், பரிபூரண பிரம்ம ஸ்வரூபிணியாகவும், பசி, தாகம், ஞானம், கருணை, மகிழ்ச்சி, வீரம், மாயை, காதல், பொறுமை, சிந்தனை ஆகியவற்றின் அதிதேவதையாக துர்க்கை விளங்குகின்றாள்.

### 2. லட்சுமி

செல்வங்களுக்கு எல்லாம் தலைவியாகவும், சுத்த சத்துவமானவளும், சகல நலன்களை அளிக்க வல்லவளும், சகல மங்களங்களை வழங்குபவளும், விஷ்ணுவிற்கு மிகவும் விருப்பமானவளாக இருப்பவளும் கற்பிற் சிறந்தவர்களுக்கு அன்பிற்குரியவளாகவும் இருப்பவள் ஆதிபராசக்தியின் அம்சமான இந்த லட்சுமிதேவி.

★ துயர் நீக்கும் துர்க்காதேவி பக். 26-27

நிதிகளின் தலைவியாக இருக்கும் இவள் எட்டு வடிவங்களாகப் பிரிந்து ஒவ்வொரு தனிசக்திகளாக வளங்களை வாரி வழங்கிக் கொண்டிருக்கின்றாள். அந்த அஷ்ட லட்சுமி வடிவங்களாவன:

1. தனலட்சுமி, 2. தான்யலட்சுமி, 3.தைரியலட்சுமி, 4. விஜயலட்சுமி, 5. வீரலட்சுமி, 6.சந்தானலட்சுமி, 7.கஜலட்சுமி, 8.வித்யாலட்சுமி என்பவைகளாகும்.

### 3. சரஸ்வதி

ஆதிபராசக்தியின் மூன்றாவது வடிவம் சரஸ்வதி. வெள்ளத்தாமரைப் பூவிலிருப்பாள், வீணை செய்யும் ஒலியிலிருப்பாள், தூய வெள்ளாடை அணிந்து வெள்ளைத் தாமரையில் அமர்ந்து பிரம்மாவின் அன்பிற்குரியவளாக சத்திய லோகத்தில் வீற்றிருப்பவள் இந்த சரஸ்வதி.

இவளே அறிவு, கல்வி, வாக்கு ஆகியவற்றின் தலைவியாகவும் திகழ்கின்றாள். இவளைத் துதிப்பவர்களின் அறியாமையை ஒழித்து ஞானத்தை அளிக்கின்றாள்.

வீரம், செல்வம், கல்வி என்று இந்த முப்பெரும் சக்திகளே முதலில் பிரிந்த ஆதி சக்திகளாகும்.

### 4. சாவித்திரி

வேதத்தின் உட்பொருளாக மதிக்கப்படுகின்ற இந்தத் தேவதை காயத்திரி என்றும் அழைக்கப்படுகின்றாள். யோகியர்களுக்கு சுழுமுனை நாடி சூடேறாமல் காப்பாற்றுபவளும் எல்லோரும் விரும்பத்தக்க வடிவம் கொள்ளும் சுத்த சத்துவ மூர்த்தியாக இருப்பவள் இந்த சாவித்திரி. எந்தத் தெய்வத்தை ஆராதித்தாலும் அதில் தானாக இருந்து கொண்டு அருள் செய்பவள் இந்த சாவித்திரி.

**5. ராதா**

பிரேமை அல்லது மாயை என்றும் வழங்கப்படுபவள். பஞ்சவாயுக்களுக்குத் தலைவியான இவள் பக்தர்களின் காதல் உணர்ச்சிகளைத் தூண்டிவிட்டு மன்மதனின் செயல்களுக்கு வடிவம் கொடுப்பவளாகவும், பிரேம பக்திக்குத் தலைவியாகவும் இருப்பவள் இந்த ராதாவாகும்.

இந்த ஐந்து சக்திகளின் ஒருமித்த ஒரு வடிவமே துர்க்காதேவி என்றும் சொல்லப்படுகின்றது.

இந்தப் பஞ்ச சக்தியில் இருந்து மேலும் ஐந்து சக்திகள் அவதாரம் செய்கின்றனர்.

துர்க்கை என்ற முதல் சக்தியிடமிருந்து கங்காதேவி உதயமாகின்றாள். எல்லாப் பாவங்களையும் மன்னிக்கும் நீர்த்தேவதை இந்த துர்க்காதேவி.

லட்சுமி என்ற இரண்டாவது சக்தியிடமிருந்து துளசிதேவி தோற்றம் கொள்கின்றாள், எல்லா நோய்களையும் தீர்க்கும் புனிதவதியாகவும். எல்லாப் பொருள்களையும் தூய்மை அடையச் செய்பவளும் பாவங்கள் அற்றவளுமாக துளசி தேவி அறிமுகப்படுத்தப் படுகின்றாள்.

சரஸ்வதி என்று மூன்றாவது சக்தியிடமிருந்து மானஸா தேவி வடிவம் கொள்கின்றாள். உபாசனா வழியில் இருப்பவர்களுக்கு ஆறு ஆதாரங்களிலும் வியாபித்து அவர்களுக்கு யோகத்தின் சித்தியை அளிக்கின்றாள்.

சாவித்திரி என்ற நான்காவது சக்தியிடமிருந்து சஷ்டி தேவி உற்பத்தியாகின்றாள். முருக பக்தர்களுக்கு வெற்றியை அளிக்கும் தேவதையான இவள் பிரகிருதி என்பதின் ஆறாவது அம்சமாகத் தோன்றி முருகனுக்குச் சக்தியை அருளுகின்றாள்.

ராதா என்ற ஐந்தாவது சக்தியிடமிருந்து மங்கள சண்டிகாதேவி என்ற சக்தியின் திருவடிவம் அவதரித்தது. இந்த மங்கள சண்டிகாதேவி தேவ மாங்கல்ய பலத்தையும் திருமணக் கோரிக்கையை நிறைவேற்றுபவளாகவும் வேண்டும் வரங்களை நிலையானதாக அளிக்கவல்ல வளாகவும் இருக்கின்றாள்.

## 2. அஷ்ட துர்க்கைகள்

பஞ்சதுர்க்கைகளாக அவதரித்த ஆதிபராசக்தி அஷ்ட துர்க்கைகளாகவும் வடிவமெடுத்து பக்தர்களைக் காத்து அருளுகின்றான்.

1.சயை, 2. விசையை, 3.ஜெயந்தி, 4.அபராசிதை, 5.சித்தை, 6.இரத்தை, 7.அலம்புசை, 8.உற்பலை என்பவை துர்க்கையின் அஷ்ட வடிவங்களாகும். இதனை 1. வாமை, 2. சேட்டை, 3.இரௌத்திரி, 4.காளி, 6.கல்விகரிணி, 6.பலவிகரிணி, 7.பலப்பிரமதனி, 8.சர்வபூத தமனி என வேறு எட்டு வடிவமாகவும் கூறுவர்.

## 3. நவதுர்க்கை

துர்கே சூலினி ஜாதவேதஸி
மகாசாந்த யாஹ்வயே சாபரீ
ஜ்வாலா துர்கி வராபிதே
லவணகே தீபாவிதே ஹ்யாளீரி
ஏஹ்யம்பே புரதோ மமாத்ய
பயக்ருத்ரோதரோகாரி பீடாதிமான்
வித்வஸ்தான் குரு தேஹி சௌக்யமதுலம்
பக்திம்ததா வியாஹதாம்.

வனதுர்க்கை, சூலினி துர்க்கை, ஜாத வேத வேதோ துர்க்கை, சாந்தி துர்க்கை சபரீ துர்க்கை, ஜ்வாலத் துர்க்கை,

லவண துர்க்கை, தீப துர்க்கை, ஆஸுரி துர்க்கை என ஆதிபராசக்தியின் ஒன்பது துர்க்கை வடிவங்களை ஸ்ரீ வித்யாம்னாயகல்பம் கூறுகின்றது.

## 4. வனதுர்க்கை

வனம் என்றால் காடு என்று பொருள். துர்கம் என்றால் கோட்டை என்பது பொருள். காட்டிலுள்ள கோட்டை இயற்கை பாதுகாப்பு நிறைந்தது. இப்படி இயற்கையான பாதுகாப்பை நமக்குத் தருபவள் வன துர்க்கையாகும்.

கொற்றவையிலிருந்து உருமாறிய முதல் கொற்றவை வடிவம் வன துர்க்கையே.

வனங்களில் வாசம் புரிபவள் இந்த வன துர்க்கை. வனங்களில் தவம் புரியும் யோகியருக்கும், ஞானிகளுக்கும் காட்டுவிலங்குகள் மற்றும் இயற்கைச் சீற்றங்களிலிருந்தும் முழுபாதுகாப்பைத் தருபவள். தன்னை வழிபடுவரின் கர்மவினைகளைப் போக்கி. சித்த சுத்தியையும் வைராக்கியம் தபோபலம் ஆகியவற்றையும் அருள்பவள்.

சிறிது தடித்த தேகத்துடனும் குங்குமம் போல் சிவந்த நிறத்தையும் கொண்டவள். வைரங்களிலும், நவமணிகளிலும் பதிக்கப்பட்ட கீரிடத்தையும் திருநீறு, குங்குமம் அணியப் பெற்ற நெற்றியையும் நீண்ட நாசியினையும், சிவந்த உதடுகளையும் தொங்கல்கள் அணியப் பெற்ற காதுகளையும், மல்லிகை மலர்களைச் சூடியிருக்கும் நீண்ட கருங்கூந்தலையும் உடையவள்.

தங்க வளையல்கள் அணியப் பெற்றதும், பலவித ஆயுதங்களைத் தரித்த கரங்களையுடையவள் வனதுர்க்கை. சிறுத்த இடையையும், பருத்த கொங்கைகளையும், தாமரை மலர்த்தண்டுகளைப் போன்ற கால்களையும், சதங்கைகள் அணியப்பெற்ற பாதங்களையும் உடையவள் வன துர்க்கை என்று புராணங்கள் வர்ணிக்கின்றன.

ஒரு காலத்தில் விந்தியமலையானது மகாமேரு போல் வானுயர உயர்ந்து கொண்டிருந்தது. சூரிய சந்திர ஒளி தென்னாட்டில் மறைந்து இருள் சூழ்ந்தது. கயிலையில் சிவபெருமானின் திருமணத்தைக் காணச் சென்றோரின் பளு தாங்காமல் வட பாரதம் உயர்ந்து தென் பாரதம் தாழ்ந்தது. ஏற்றத்தாழ்வுகளைச் சரிசெய்ய தென்னாடு போகுமாறு அகத்தியருக்குக் கட்டளைப் பிறந்தது.

இறைவனின் ஆணையை மீற யாருக்குத் தைரியம் வரும்? இறைவன் பேச்சுக்கு மறுபேச்சேதும் பேசாமல் தென்னாடு திரும்பினார். வழியில் விந்தியமலை கர்வத்தால் உயர்ந்து யாருக்கும் வழிவிடாமல் இருந்தது. வனத்திடை எதிர்பாராமல் ஏற்பட்ட இந்த இடர்கண்டு அகத்தியர் கலங்கினார் இல்லை.

வனத்துக்குச் சொந்தக்காரியாகிய வன துர்க்கையை வழிபட்டார். அவளருளால் புதிய சக்தியைப் பெற்றார். விந்திய மலையைத் தான் இவ்வழியே திரும்பும் வரையில் மேற்கொண்டு வளராமலும் தற்போது தாழ்ந்துள்ள நிலையிலேயே இருக்குமாறும் கட்டளையிட்டார்.

விந்தியமலையும் வன துர்க்கையின் அருளால் அகத்தியரின் வார்த்தைக்குக் கட்டுப்பட்டு அப்படியே நின்றது. ஆனால் அகத்தியர் மீண்டும் வடநாடு செல்லாமல் தென்னாட்டிலேயே தங்கி விட்டார். வன துர்க்கை வரமளித்தபடி அகத்தியரின் வார்த்தைக்குக் கட்டுப்பட்டு விந்திய மலையும் வளராமல் நின்று விட்டது.

இந்த வன துர்க்கை தங்கத் தாமரை மலரில் அமர்ந்திருப்பவள், முக்கண்ணி, மின்னல் போன்ற நிறத்தவள், சங்கு, சக்கரம், அபயம், வரதம் இவற்றை நான்கு கரங்களில் ஏந்தியிருப்பவள், சந்திர கலையைத் தரித்தவள், அட்டிகை, தோள் வளை, ஆரம், குண்டலம் ஆகியவைகளை

அணிந்தவள், அவள் பக்கத்தில் சிம்ம வாகனம் இருக்கும் என அகத்தியர் புராணம் கூறுகிறது.

இந்த துர்க்கையின் வடிவத்திற்குச் சற்று மாறுபட்ட வடிவத்தை திருவாவடுதுறை ஆதின வெளியீடான சிவாலயத் திருமேனிகள் தெரிவிக்கின்றது.

நான்கு கரத்திற்குப் பதில் எண் கரத்தவளாகவும், தாமரை மலருக்குப் பதில் மகிஷன் தலையும், அமர்ந்த நிலைக்குப் பதில் நின்ற திருவடிவமும், மின்னல் நிறத்திற்குப் பதில் பசுமையான அருகம்புல்லின் நிறமும் குறிப்பிடப்படுகின்றது. இவளது எண்கரங்களிலும் சங்கு, சக்கரம், கத்தி, கேடயம், அம்பு, வில், சூலம், தர்ஜனி முத்திரை ஆகியவை உள்ளதாகக் குறிப்பிடப்படுகின்றது.

இந்த வன துர்க்கை காடுகளிலும் ஏரிகளிலும் ஊருக்குப் புறத்தேயும் கோயில் கொண்டிருப்பவளாகக் கூறப்படுகிறது.

இந்த வன துர்க்கையானவள் மற்ற எட்டுத் துர்க்கையிலும் மிகுந்த பேரழகு படைத்தவள் என்று தெரிகிறது. அதனால்தான் நவதுர்க்கைகளின் சொரூபிணி, என்று வர்ணிக்கப்படுகின்றாள்.

அகத்தியர் புராணம் கூறும் நான்கு கர துர்க்கைக்கு கதிராமங்கலம் துர்க்கையும், சிவாலயத் திருமேனிகள் குறிப்பிடும் எண்கர துர்க்கைக்கு மேல் மலையனூர் ஏரி வனத் துர்க்கையும் சிறந்த உதாரணங்களாகக் கொள்ளலாம்.

இந்த வனதுர்க்கையைப் போற்றும் மந்திரம்

**ஓம் ஐம் ஹ்ரீம் ஸ்ரீம் தும்**
**உத்திஷ்ட புருஷி கிம்ஸ்வபிஷி பயம்மே**
**ஸமுபஸ்திதம் யதிசக்ய மசக்யம்வன் தமே**
**பகவதி சமய ஸ்வாஹா**

## 5. சூலினி துர்க்கை

மூன்று அங்கங்களுடன் கூடிய சூலத்தைக் கையில் ஏந்தி இருப்பதால் சூலினி துர்க்கை என்று அழைக்கப்படுகிறாள்.

சூலம், பாணம், கத்தி, சக்கரம், சங்கு, கதை, வில், பாசம் இவற்றைக் கைகளில் தரித்துக் கொண்டிருக்கும் இந்த சூலினி துர்க்கையானவள் உயரமான கிரீடத்தையுடைய்வள். மேகம் போன்ற நிறத்தினள், பயங்கர உருவத்தினள், அணிகலன்கள் நிறைய அணிந்தவள். சிங்கத்தின் மீது அமர்ந்தவள். கத்திகேடயத்துடன் கூடிய ஜெயா, விஜயா, பத்ரா, சூல காத்யாயணீ என்ற நான்கு கன்னியரால் சூழப்பட்டவள், அவுணர்களை அழித்தவள் என்று சூலினி துர்க்காவை இனம் காட்டுகிறது அதர்வண ரகசியம்.

இதே நாளில் இந்த சூலினி துர்க்கையின் தோற்றத்திற்கு திரிபுர சம்மார நிகழ்ச்சி முக்கியக் காரணமாக அமைந்துள்ள விவரத்தைக் கூறுகின்றது.



தேவர்களைத் துன்பத் திற்குள்ளாக்கிய முப் புரங்களைச் சேர்ந்த அரக் கர்களை அழிக்கப் புறப் படுகிறார். சிவ பெருமான். வழியில் எதிர்ப்பட்ட தேவி அவர் எங்கே செல்கிறார் என்று கேட்க ஆவலாய் ஒடி வருகிறாள். தன்னுடைய சினம் கண்டு அஞ்சி மறையும் சிவனுக்கு சிரிப்புத்தான் வருகிறது. உமையைப் பார்த்து சிரித்தபடியே சரி நீயும் வா என்றழைக்கிறார்.

உமையும் சிவபெருமானுக்கு வெற்றியை அளிக்க வேண்டி துர்க்கை வடிவினளாய் சூலம் ஏந்தி அவரின் இடது

பக்கத்தில் நின்றாள். சூலம் எந்தியவளாய் சிவபெருமானுக்கு வெற்றியை அளித்ததனால் இவள் சூலினி துர்க்கை எனப்படுகிறாள்.

இந்த சூலினி துர்க்கை மஞ்சள் பட்டாடை உடுத்தி நீளமான திரி சூலம் ஏந்தி போரிடும் பாவனையிலோ அல்லது அனுக்கிரகிக்கும் பாவணையிலோ அமைந்திருக்கும் என்று சிற்ப சாஸ்திரம் கூறுகின்றது.

திருவாருர் கோயிலிலும், தீர்த்த மலையிலும் இந்த சூலினிக்கு வடிவங்கள் உண்டு.

இராவண சம்காரத்தில் ராமனுக்குத் துணை நின்றவள் இந்த சூலினி துர்க்கை என்று கூறப்படுகின்றது.

ஓம் ஸ்ரீம் ஹ்ரீம் ச்ரெளம்தும்
ஜ்வல ஜ்வல சூலினி துஷ்ட க்ரஹ
ஹூம் பட் ஸ்வாஹா

என்பது சூலினியை வழிபடும் மந்திரமாகக் கூறப்படுகின்றது.

## 6. ஜாதவேதோ துர்க்கை

சிவனின் தவத்தைக் கெடுக்க முனைந்த மன்மதனின் செயல்கண்டு சிவபெருமான் கோபப்பட்டுத் தன் நெற்றிக்கண்ணைத் திறந்தார். அந்தக் கோபாக்கினி மன்மதனைச் சுட்டுச் சாம்பலாக்கியது. ஆயினும் சிவனின் அந்தத் தீக்காயங்கள் தணிந்த பாடில்லை.

சிவபெருமானின் அந்தத் தீச்சுடர்கள் மூவுலகங்களையும் தகிக்கத் தொடங்கியது.

சிவபெருமான் அந்தத் தீப்பிழம்பைக் கங்கையில் கொண்டு சேர்க்க ஆணையிட்டார். அக்கினியாலும் அந்த தீச்சுடரைத் தொட முடியவில்லை. அக்கினி மனமுருகத் தேவியைத் துதித்தார். அக்கினியின் வேண்டுகோளுக்கு இணங்கி துர்க்கை வடிவினளாய் அக்கினியில்

பிரவேசித்தாள். அக்கினியின் கரங்களில் தண்மையான நிலையைத் தோற்றுவித்தாள். அவளே உண்மையில் தீப்பிழம்பைத் தூக்கிச் சென்றாள். அக்கினித்தேவனுக்கு இது தெரியாது. எனவே ஜாதவேதோ துர்க்கையே அக்கினியின் செயலினைச் செய்தாள் என்று ஜாதவேதோ துர்க்கையை புராணங்கள் அறிமுகப்படுத்துகின்றன.

மேலும் இந்த ஜாதவேதோ துர்க்கையானவள் மின்னல் கீற்றைப் போன்ற ஒளியையுடையவள். சிங்கத்தின் கழுத்தில் அமர்ந்திருப்பவள். கேடயம் கொண்ட கையினரான கன்னியர்களால் சேவிக்கப்படுபவள், எட்டுக்கைகளை யுடையவள். அந்த எட்டுக் கரங்களிலும் சக்கரம். கதை, வாள், கேடயம், வில், பாசம், தர்ஜினி ஆகியவைகளைத் தாங்கி அமர்ந்திருக்கிறாள் என்று இவளது வடிவத்தைப் புராணங்கள் வருணிக்கின்றன.

எட்டுக் கைகளையுடைய இவளை இருகரங்கள் மட்டுமே கொண்டவள் என்று சில புராணங்கள் சுட்டுகின்றன. சிம்ம வாகனத்தின் மேல் இருகரங்களிலும் இரண்டு தாமரை மலர்களை ஏந்தியிருப்பவள் என்று கூறி இவளுக்கு ஸ்ரீகந்த துர்க்காதேவி என்ற புதிய பெயரையும் சூட்டுகின்றன. வன துர்க்கையைப் போன்றே இவளும் மூன்று கண்கள் உடையவளாகக் குறிக்கப்படுகிறாள்.

**ஜாதவேதஸே ஸுனவாம ஸோமமராதியதோ**
**நிதஹாதி வேத: ஸன பர்ஷததி துர்காணி**
**விச்வாநாவேவசிந்தும் துரிதாத்யக்னி**

என்பது ஜாதவேதோ துர்க்கையை வழிபடும் மந்திரமாகும்.

## 7. சாந்தி துர்க்கை

தன்னை அவமதிக்கும் நோக்குடன் தட்சன் யாகம் நடத்தியமையாலும் அந்த யாகத்தில் தட்சனுக்குப் புத்திமதி சொல்லச் சென்ற தாட்சாயிணியை அவமதித்ததால் அவள்

யாகத் தீயில் விழுந்து மாண்டாள். அதனால் பெருங்கோபமுற்ற சிவபெருமான் வீரபத்திரர் மற்றும் காளியை விட்டு யாகத்தை நாசம் செய்ய சொல்கிறார்.

யாகம் உருத்தெரியாமல் அழிகிறது. யாகத்தை நடத்திய தட்சனின் தலை வெட்டப்படுகிறது. தட்சன்தான் அறிவில்லாமல் யாகத்திற்கு அழைத்தானென்றால் தேவாதி தேவர்களின் சிந்தனை என்ன செய்தது? சிவனாரின் கோபம் தேவர்கள் பக்கம் திரும்பியது. இறைவனது கோபம் பற்றி தேவர்கள் அறியாதவர்களா என்ன? தேவர்கள் இறைவியிடம் முறையிட்டனர்.

இறைவி சாந்தி துர்க்கையாக வடிவெடுத்து இறைவனின் கோபத்தைக் கட்டுப்படுத்தினாள். சாந்த சொரூபமாகத் தோன்றி இறைவனின் கோபத்தைத் தணித்ததால் இந்த துர்க்கைக்கு சாந்தி துர்க்கை என்ற பெயர் ஏற்பட்டது.

வரதம், அபயம், திரிசூலம், தாமரை, மான் ஏந்தியபடி உயிர்களுக்குச் சாந்தி வழங்குபவளாகவும் சிம்ம வாகினியாகவும் சாந்தி துர்க்கையைக் குறிப்பிடுவர்.

இந்த சாந்தி துர்க்கையானவள் பன்னிரு கரங்களையுடையவளாகவும், அப்பன்னிரு கரங்களிலும் சங்கு, சக்கரம், வாள், கேடயம், அம்பு, வில், கதை, திரிசூலம், வரதம், அபயம், அமிர்த ரத்தினம் நிறைந்த பாத்திரம் இவைகளைக் கொண்டவளாகவும் கிரீடம், மேகலை, ஒட்டியானம் முதலிய அணிகள் கொண்டவளாகவும், பொன்னாலான ஆடை அணிந்தவளாகவும் விளங்குவாள் என்று வித்யாம்னாய கல்பம் என்ற நூல் குறிப்பிடுகின்றது.

பெரும்பாலான ஆலயங்களில் சாந்தி துர்க்கைதான் காட்சியளிக்கிறாள். ஆனால், பன்னிரு கைகளுக்குப் பதில் அபயம், வரதம், திரிசூலம், தாமரை மலர் ஏந்திய

கரத்தினளாக மகிஷன் தலை மீது நிற்பவளாக சிம்ம வாகினியாக மட்டுமே காணப்படுகிறாள்.

இந்த துர்க்கையை வழிபடுபவர்களுக்கு கடன் தொல்லை, வியாதி, எதிரிகளால் ஏற்படும் தொல்லைகள், பிறரால் நேரும் தீங்குகள், பாம்பு மற்றும் பிசாசினால் ஏற்படும் ஆபத்துகளைப் போக்கி வாழ்க்கையில் சாந்தியை ஏற்படுத்துவாள் என்று கூறப்படுகிறது.

"ஓம் ஹ்ரீம் தும் துர்காம் தேவீம்
சரணமஹம் ப்ரபத்யே"

என்பது சாந்தி துர்க்கையை வழிபடும் மந்திரமாகும்.

## 8. சபரி துர்க்கை

பாரதப் போரில் கௌரவர்களை வெல்ல, சிவனிடமிருந்து பாசுபதம் என்ற அஸ்திரத்தைப் பெறுவதற்காக அர்ச்சுனன் வனத்தில் கடுமையான தவம் செய்தான். அவனது தவத்தை மெச்சிய சிவபெருமான் அவனது வீரத்தைச் சோதிக்க எண்ணினார்.

மூகன் என்ற அசுரன் வராக வடிவெடுத்து அர்ச்சுனன் தவத்தைக் கலைக்க வந்தான். இறைவன் வேடுவனாகத் தோற்றம் கொண்டு வனத்தில் அர்ச்சுனன் தவத்தைக் கலைக்க வந்த வராகத்தினை நோக்கி அம்பெய்தார். அதே சமயத்தில் தன்னுடைய தவத்தினைக் குலைக்கவரும் வராகத்தை நோக்கி குறிபார்த்து அம்பொன்றை எய்தான் அர்ச்சுனன்.

இருவருடைய அம்புகளும் ஒரே சமயத்தில் வராகத்தின் மீது பட்டு வராகம் மாய்ந்தது. இருவரது அம்புகளில் யாருடைய அம்பு வராகத்தை மாய்த்தது? இருவரும் தம் அம்பே வராகத்தை மாய்த்தது என்று வாதிட்டனர். இருவரது சொற்போரும் முடிவடையாமல் தொடர்ந்தது.

இறுதியில் இருவரும் ஒரு முடிவுக்கு வந்தனர். இருவரும் விற்போர் செய்வது என்றும், இதில் யார் வெற்றி

பெறுகிறார்களோ அவர்களே இப்பன்றியைக் கொன்றவர் என்ற முடிவுக்கு வரலாம் என்றார் வேடரான இறைவர். முன்பு ஒரு தடவை கர்ணனுடன் சரிக்குச் சமமாக வில்வித்தையாட முன்வந்தபோது துரோணர் தடுத்த நினைவு வரவே, தான் இவ்வேடனுடன் வில்வித்தை செய்வது தனது கௌரத்திற்கு இழுக்கு என்று நினைத்து அவ்வேடனின் யோசனையை நிராகரித்தான் அர்ச்சுனன்.

இறைவன் அவனது திறமையை அறிய முன்வந்தவராயிற்றே! சும்மா இருப்பாரா என்ன? அவனிடம் அவரது பாசுபதாஸ்திரம் பெறும் தகுதி உள்ளதா என்று சோதித்தறிய மற்றொரு வழியையும் பிரயோகித்தார்.

நீ, எனக்கு சரிசமானவன் அல்ல. அதனால், கீழ்மகனான உன்னுடன் விற்போற் புரிய இயலாது என்றான் அர்ச்சுனன்.

"அப்படியானால் பேசாமல் உன் தோல்வியை ஒத்துக்கொள்!" என்றான் வேடன்.

அது முடியாது!

அப்படியானால் மற்போராவது செய்து என்னை வெற்றி கொள். வராகத்தை அழித்த அம்பு உன்னுடையது தானென்று கருதி நான் பேசாமல் என் வழியே போய் விடுகிறேன். இதுவும் முடியாதென்றால் நீ போரிடும் தகுதியற்ற கோழை என்று கருதி இதனை விட்டுக் கொடுத்து விடுகிறேன் என்று எள்ளி நகையாடினார் இறைவர்.

இனியும் பேசாமல் இருப்பது தனது வீரத்திற்கு அழகல்ல என்று தான் தவம் செய்யும் நிலையையும் மறந்து வேடுவனான இறைவனுடன் மற்போர் புரிய ஆயுத்தமானான் அர்ச்சுனன்.

இறைவனுடன் அர்ச்சுனன் மற்றோர் புரிவதா? தாங்குவானா? இறைவன் அர்ச்சுனனைக் கடுமையாகத் தாக்கிவிட்டால் என்னாவது? இறைவனது கோபத்தை அர்ச்சுனன் தூண்டா வண்ணம் இருக்க தான் இறைவனுடன்

இருக்க வேண்டியது அவசியம் என்று இறைவியும் வேடுவக் கோலத்துடன் இறைவனைத் தொடர்ந்தாள்.

இறைவி தலையில் மயிற்பீலியைச் சொருகிக் கொண்டாள். குந்துமணி மாலைகளை மார்பில் அணிந்து கொண்டாள். காதிலே ஓலைச் சுருள். தாடங்கம் பூட்டிக் கொண்டாள். கையில் வில்லும் அம்பும் ஏந்திக் கொண்டாள். இடையில் மரவுரி தரித்துக் கொண்டாள். வேடுவச்சியாக இறைவனுடன் தோன்றினாள்.

இப்படி மற்போரில் இறைவன் அர்ச்சுனனை கடுமையாகத் தாக்கிவிடக் கூடாது என்பதற்காக அம்மை வேடுவக்கோலம் பூண்டு இறைவனுடன் வந்ததாக, வில்லிபாரதம் குறிப்பிடுகிறது. தந்தையானவன் கோபாவேசப்பட்டு பிள்ளைகளைக் கண்டிக்கும்போது, அவரது கோபம் எல்லை மீறாமலும், அதே சமயம் பிள்ளைகளின் தவறுகளைக் கண்டிக்கும் வண்ணமும் தடுத்து நிறுத்தும் தாய்போல் துர்க்கையன்னையானவள் மரவுரி தரித்து வேடுவப் பெண்ணாக அதாவது சபரியாகத் தோற்றம் கொண்டதால் இவள் சபரி துர்க்கை என்றழைக்கப் படுகிறாள்.

இறைவனுக்கும் அர்ச்சுனனுக்கும் மற்போர் நடைபெறுகிறது. அர்ச்சுனன் தன் முழுப் பலத்தையும் பிரயோகித்து வேடனுடன் போர் புரிகிறான். தன் வீரத்தை அவமதித்த அவனை எப்படியும் மண்ணைக் கவ்வச் செய்ய வேண்டும் என்ற வெறியே அவனுக்கு மேலோங்கியிருந்தது. மூர்க்கத்தனமாகப் போரிடும் அர்ச்சுனனுடன் கருணை மிக்க இறைவியின் வேண்டுகோளின்படி விளையாட்டாகவே போர் செய்து கொண்டிருந்தார் இறைவன்.

தான் இவ்வளவு கடுமையாகத் தாக்கியும் அதை யெல்லாம் அலட்சியமாகத் தடுத்து, விளையாட்டுத் தனமாகப் போரிடுகிறானே இந்த வேடன். நாம் கற்ற

வித்தையெல்லாம் வீண்தானோ? இந்த சாதாரண வேடுவனையே சமாளிக்க முடியாத நான் பெரும் எண்ணிக்கையிலான கௌரவ சேனைகளை வெற்றி கொள்வது எப்படிச் சாத்தியமாகும் என்று கலங்கிக் கொண்டிருக்கையில் வேடுவன் அர்சுனனின் கையைப் பிடித்து உயரே தூக்கி கீழே போட்டார். அவ்வளவுதான் அர்ச்சுனனின் அங்க நாடிகளும் தளர்ந்து போய்விட்டது.

மற்போருக்கு இந்த லட்சணம் என்றால் விற்போரில் இன்னும் என்னென்ன வித்தைகள் செய்து காண்பிப்பானோ இந்த வேடன்? திறமை யாரிடம் இருந்தால் என்ன? அதனை போற்றி கௌரவிப்பதுதானே முறை? மாபெரும் வில்வித்தை வீரனான தன்னை, சாம்ராஜ்யபதியான தன்னை இந்தச் சாதாரண வேடன் வெற்றி கொள்கிறானென்றால் என் தோல்வியை நான் ஒத்துக் கொள்வதே பெருந்தன்மையான செயல் என்று அந்த வேடனிடம் அகந்தை அழிந்தவனாய் தலை குனிந்து நின்றான்.

பார்த்தனின் 'வில் வித்தையில் வல்லவன்' என்ற அகந்தையை அழித்தாயிற்று. அவனது பலத்தையும் பரிட்சித்துப் பார்த்தாகிவிட்டது. இனியும் சோதனைகள் தேவையா? கருணை காட்டுங்கள் என்று பரிந்துரை செய்தாள் சபரி.

சபரியின் உள்ளக் குறிப்பின்படியே அர்ச்சுனனுக்குத் தன் உண்மையுருவைக் காட்டி அவனது வெற்றிக்காக பெருமை மிக்க பாசுபதாஸ்திரத்தை வழங்கினார். உமையும் சபரீ துர்க்கையாக அவனது வெற்றிக்கு வாழ்த்துக்களை வழங்கினார்.

இந்த சபரி துர்க்கையைப் பின்வரும் மந்திரம் சொல்லி துதித்தால் சகல நன்மைகளையும் தருவாள் என்று கூறப்படுகின்றது.

ஹ்ராம் ஹ்ரீம் ஸௌ: க்லௌம் ஐம் ஸ்ரீம்
ஜ்வலத் துர்கே ஏஹ்யேஹி
ஸ்புரப் ரஸ்புர ஆதிவிஷ்ணு ஸோத்ரி, அஸ்த்ர
ஜவலத் துர்கே, ஆவசயாவேச ஜ்வலத்துர்காய
வித்மஹே ஜாஜ் வல்யமானாய தீமஹி தன்னோ
படபாநல: ப்ரசோதயாத் வலமவரயூம் ஜ்வலத்
துர்காஸ்த்ரே ஹும்பட் ஸ்வாஹா

## 9. ஜுவாலா துர்க்கை

பண்டாசுரனுக்கும் பரமேஸ்வரிக்கும் பெரும்போர், வெற்றித் தோல்வி யாருக்கு என்பதில் ஐயப்பாடு இருந்தது. போர் தர்மத்தையும் மீறி இருளில் யுத்தம் செய்தான் பண்டாசுரன். இரவு அசுரர்களுக்கு வசதியாக இருந்தது. திடீர் திடீரென இருளில் தாக்கும் அசுர சேனைகளுக்குப் பதிலடி கொடுக்க தீர்மானித்தாள்.

மண், கல் கோட்டைகளை தகர்த்து எதிரிகள் உள்ளே நுழைந்து விடலாம். நீரால் சூழப்பட்ட ஆழமான கொடிய முதலைகள் நிறைந்த அகழியைக் கூட எதிரிகள் சமாளித்து விடுவர். ஆனால், அக்கினியால் சூழப்பட்ட அரணைக் கடக்க முற்பட்டால் சாம்பலாக வேண்டியதுதான்.

எனவே, தேவியானவள் யுத்தக் களத்தை பிரகாசப் படுத்துமாறு வன்னிவாசினிக்கும், ஜுவாலாமாலினிக்கும் கட்டளையிட்டாள். ஆயினும் அரக்கர்கள் மறைமுகத் திடீர் தாக்குதலைத் தொடர்ந்தனர்.

தேவி ஜுவாலா மாலினியிடம் நூறு யோசனை பரப்பளவுள்ள பூமியை வளைத்துக் கொண்டு முன்னூறு யோசனை ஜுவாலா (தீச்சுடர்) எழும்படி செய். இதில் வாயிற்படி மட்டும் வெப்பமின்றி இருக்கட்டும் என்று கட்டளையிட்டாள்.

தேவியின் கட்டளையை ஜுவாலாமாலினி நிறைவேற்றினாள். இப்படி எதிரிகளின் சேனைகள் தேவியின் சேனையை அண்டாமல் தடுக்க அக்கினி ஜுவாலையுடன் கூடிய அக்கினி பிரகாரம் அமைத்த காரணத்தால் இந்த துர்க்கை ஜுவாலா துர்க்கை என்றழைக்கப்படுகிறாள்.

அதுமட்டுமல்ல தன்னை வழிபடும் பக்தர்களுக்குத் தீய சக்திகளினால் துன்பம் ஏற்பட்டு விடாமலிருக்க ஜுவாலாமாலினி க்ஷிப்த வாஹ்நி பிராகார மண்டலா என்ற பெயரைப் பெற்ற தேவி பக்தர்களை அக்கினி ஜுவாலை என்ற அரணாக இருந்து காப்பாற்றுவதால் ஜுவாலா துர்க்கை என்றும் போற்றப்படுகின்றாள்.

இந்த அக்கினி துர்க்கையைத் தீச்சுடரால் சூழப்பட்டவள் என்றும், நெருப்பு மயமான பாணமும், வில்லும் உடையவள் என்றும், சங்கு சக்கரமும், வில்லும், அம்பும், வாள், கேடயம், சூலம், தர்ஜினி என்பவைகளைக் கைகளில் கொண்டிருப்பவள். மூன்று கண்களை உடையவள் சிம்மவாகினி என்று ஜுவாலை துர்க்கையை வித்யாம்னாய கல்பம் அறிமுகப்படுத்துகின்றது.

## 10. இலவண துர்க்கை

விஷ்ணுவின் சூழ்ச்சியாலும் தேவியின் மோகனத்தாலும் மடிந்த மதுகைடப அசுரர்களின் வாரிசுதான் லவணாசுரன். மது மாளும் போது சக்தியின் திரிசூலமொன்றை தனது மகன் லவணாசுரனிடம் அளிக்க அதன் பெருமையால் அவன் வெற்றிகள் பல குவித்தான். மன்னன் இராவணனையே வென்று வெற்றி வாகைச் சூடினான்.

அந்த சக்தி வாய்ந்த துர்க்கையின் திரிசூலம் இருக்கும் வரை அவனுக்குத் தோல்வி என்பதே ஏற்படாது என்ற நிலையில் அவன் முனிவர்களையும் தேவர்களையும்

கொடுமைப்படுத்தி மூவுலகங்களிலும் தனது செங்கோலை நிலைநிறுத்தினான்.

தேவர்கள் இந்த லவணாசுரனின் கொடுமையைப்பற்றி இராமனிடம் முறையிட இராமரும் லவணாசுரனைஅழிக்க, சத்ருக்கனனை அழைத்தார். தன்னுடைய தம்பிக்கு இலவணாசுரனை அழிக்கும் வல்லமையைத் தருமாறு துர்க்கையிடம் வேண்டிக் கொண்டார்.

சத்ருக்கனனும் தமையனைப் போலவே துர்க்கையை வழிபட்டு தனது வெற்றிக்குத் துணை நிற்குமாறு துர்க்கையை வேண்டிக் கொண்டான். பின்னர் மதுகைடபர்களை அழித்த விஷ்ணுவின் அம்பினை இராமரிடமிருந்து பெற்றுக் கொண்டு கானகம் நோக்கிச் சென்றான்.

வனத்தில் வேட்டையாடிக் களைத்த இலவணாசுரன் களைப்பாற அங்கிருந்த கோயிலொன்றில் அமர்ந்தான். தன்னுடைய சக்திவாய்ந்த சூலாயுதத்தை அம்மன் காலடியில் வைத்துவிட்டு சற்றுக் கண்ணயர்ந்தான். இதுதான் தருணமென்று கருதிய சத்ருக்கனன் அசுரனை எழுப்பி தன்னுடன் போரிட வருமாறு அழைத்தான்.

அவனுக்குத் திரிசூலத்தை எடுப்பதற்கு சந்தர்ப்பமே தராத அளவில் அவனுடன் போரிட்டு அவனைக் கொன்றான். சக்தி மிகுந்த சூலாயுதத்தையும் கைக் கொண்டான். இவ்விதம் இலவணாசுரனை அழிக்க சத்ருக்கனுக்கு உதவிய துர்க்கைக்கு **'இலவண துர்க்கை'** என்ற பெயர் ஏற்பட்டது.

இந்த இலவணாசுரனை அழிக்க ஸ்ரீராமர் துர்க்கையை வழிபட்டு தம்பி லட்சுமணனை அனுப்பினார் என்றும், தேவியின் சக்தியால் இலவணாசுரன் லட்சுமணனால் வதம் செய்யப்பட்ட காரணத்தினால் லட்சுமணனுக்கு வெற்றியைத் தேடிதந்த துர்க்கை இலவண துர்க்கை என்ற பெயரை அடைந்தாள் என்றும் சில நூல்கள் கூறுகின்றன.

கிரீட மகுடத்தவளாய் சூரியன் போன்ற ஒளியினளாகவும், அக்கினி போன்ற மேனியளுமாக, கைகளில் பிரயோகச் சக்கரம், வாள், சூலம் கொண்டு இலவண துர்க்கை விளங்குவாள் என்று இவளது வடிவழகை ஸ்ரீ துர்கா ப்ரபாவம் வருணிக்கிறது.

ஓம் சிடி சிடி சண்டால்யை மஹா
சண்டால்யை அமுதம்மே வசமாயை ஸ்வாஹா.

என்பது இலவண துர்க்கையை வழிபடும் மந்திரமாகும்.

## 11. தீப துர்க்கை

'குண்டலினி சக்தி' உபாசகர்களுக்குத் தீபம் போல இவள் ஒளி தருபவள் என்று கூறப்படுகின்றது.

போகியர் மனத்தில் உள்ள அஞ்ஞான இருளை அகற்றி ஞான தீபத்தை ஏற்றிடும் இந்த தீபலட்சுமியை துர்க்கை வடிவினளை தீப துர்க்கை என்று அழைக்கின்றனர்.

இந்த துர்க்கையின் தத்துவத்தில்தான் ஸ்பதஸதி பாராயணங்களில் பதின்முன்று அத்யாய தேவதைகளை பதின்மூன்று தீபத்தில் ஆவாகனம் செய்வது அதன் சமஸ்டியாக ஆவாகனம் செய்யப்படும் தீபமே தீப துர்க்கை என்றும் இந்த தீப அர்ச்னை திவ்யமங்கள ஸப்தசதீ தீ பார்ச்சனை என்றும் பரத்வாஜ சுவாமிகள் கூறுகின்றார்.

தீபத்தின் சுடரில் அழகிய தேவதையாகத் தோன்றும் இவள் தாமரை மலர் போன்ற தோற்றத்தினள், சிம்மத்தின் மீது அமர்ந்திருப்பாள். சூலம், வில், அம்பு, சங்கு, தாமரை, அபயம், வரதம் எனும் ஆயுதங்களை எண் கரங்களில் கொண்டிருப்பாள். சம்கார பயத்தைப் போக்கி ஞானமளித்து முக்தியை வழங்குபவள். குண்டலினி சக்தி வேண்டும் ஞானியர் உள்ளத்து இருளினைத்தன் சாந்தியினால் அகற்றி தீபம்போல் ஒளி விடுபவள் என்று புராணங்கள் இந்த தீப துர்க்கையைக் குறிப்பிடுகின்றன.

"ஓம் ஆம் ஹ்ரீம் க்ரோம் அமும்
துர்கே ஏஹ்யேஹிஆவேசய
ஆவேசய க்ரோம்
தும்துர்கே க்ரோம் ஹ்ரீம்
ஆம் ஹூம்பட் ஸ்வாஹா
என்பது தீப துர்க்கையை வழிபடும் மந்திரமாகும்.

## 12. ஆசுரி துர்க்கை

மகரிஷி கௌதமரின் மனைவியான அகல்யாவின் மேல் மோகம் கொண்ட இந்திரன் கௌதமரைப் போலவே வடிவம் கொண்டு அகல்யாவை வஞ்சித்து அடைந்த மோசக்கதை அனைவரும் அறிந்தது தான்.

சங்க சூடனின் மனைவி துளசியின் மேல் மோகம் கொண்ட மகா விஷ்ணு சங்கசூடன் போல் வடிவம் கொண்டு, அவளது அந்தப்புரம் சென்று, துளசியைக் கலந்து அவளது பதிவிரதா தர்மத்தைக் குலைத்ததும் ஒரு சிலருக்கே தெரிந்த சங்கதிதான்.

இப்படி 'மாற்றான்' தோட்டத்து மல்லிகைக்கும் மணமுண்டு என்பதற்காக, மலர்ந்து மணம் வீசும் மலர்களைப் பறிக்க கை நீட்டும் மன்மதன்களை அழிக்கவும், கற்புடைய நங்கைகளைக் காப்பதற்காகவும் வடிவமெடுத்தவள்தான் ஆசுரி துர்க்கை.

விஷ்ணுவாய் மாயங்கள் புரிந்த அதே சக்தி பெண்ணுருவாய் அசுரர்களையும் மாய்த்தது. பாற்கடல் கடைந்தபின் கிடைத்த அமிர்தத்தைப் பெற அசுரர்களுக்கும், தேவர்களுக்கும் போட்டி ஏற்பட்டது. நியாயப்படி இந்த அமிர்தம் ஆளுக்குப் பாதியாகப் பங்கிடப்பட வேண்டியது. முறை வைத்துப் பெறுவதானால் முழுவதுமே அசுரர்களுக்குச் சேர வேண்டியது.

அமிர்தத்தை அசுரர்களுக்குக் கொடுத்துவிட தேவர்கள் ஏமாளிகளா என்ன? மாயங்களில் வல்ல விஷ்ணுவிடம் இதற்கு ஏதேனும் வழி செய்யுமாறு வேண்டினர்.

மகாவிஷ்ணுவும் மோகினி வடிவம் தாங்கி அசுரர்களின் முன் தோன்றி உங்களுக்கு அமிர்தத்தினும் இனிய நான் வேண்டுமா? அல்லது அமிர்தம் வேண்டுமா? என்று அசுரர்களிடம் கேட்டார்.

விஷ்ணு மோகினியின் கண் வீச்சில் சிவபெருமானே மையல் கொண்டார் என்றால் இந்த அசுரர்கள் எம்மாத்திரம். தங்களுக்கு அமிர்தத்துக்குப் பதில் அமிர்தத் தடாகமான அந்த ஆரணங்கே போதுமென்றனர். மோகினியும் அப்படியானால் உங்களில் பலமுள்ளவன் என்னை ஏற்கட்டும் என்றாள்.

அசுரர்களுள் யார் பலமுள்ளவர்? ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டனர். அசுரர்கள் அனைவருமே பலமுள்ளவர்களே என்ற நினைவு மறந்துபோய், அந்த மோகினியின் மோக வடிவமே கண் முன் நிழலாடியது. அவளின் கண் வீச்சுக்கு அடிமைபட்ட அசுரர்கள் ஒவ்வொரும் தான் பலசாலி எனக் காட்டிக்கொள்ள ஒருவரை ஒருவர் அடித்துக் கொண்டு மாய்ந்தனர்.

விஷ்ணுவான மோகினியும் தேவர்களுக்கு அவர்கள் எண்ணப்படியே அமிர்தத்தை வழங்கினாள். இப்படி தேவர்களுக்கு அமிர்தம் வழங்கிய சக்தியே ஆசுரி துர்க்கை என்று கூறப்படுகிறது.

இந்த ஆசுரி துர்க்கையானவள் சந்திர கலை போன்ற வெண்ணிறத்தினள். மலர்ந்த கண்ணினள். இடது கரத்தில் சூலமும் வலது கரத்தில் பாத்திரமும் அங்குசமும் கொண்டவள். பாம்பு பூணூல் தரித்தவள். பலவிதமான அணிகள் கொண்டவள். பத்மாசனத்தில் வீற்றிருப்பவள் என்று ஸ்ரீ துர்கா ப்ரபாவம் வர்ணிக்கிறது.

ஒட்டக்கூத்தரின் தக்கயாகப் பரணியில் இந்த அசுரி துர்க்கை போற்றப்படுகிறாள். தன் ஆசிரியர் போற்றிய ஆசுரி துர்க்கையை இரண்டாம் இராசராசன் தாராசுரம் ஐராவதேஸ்வரர் கோயிலில் செதுக்கி மகிழ்ந்துள்ளான். அங்குள்ள இராஜகம்பீரன் மண்டபத்தின் சுவரில் தற்போது அன்னபூரணி என்று தவறுதலாக வழிபடும் ஒரு கரத்தில் பாத்திரமும் மற்றொரு கரத்தில் தாமரையும் உள்ள பெண் தெய்வ சிற்பமே ஆசுரி துர்க்கையாகும். இவளை விஷ்ணு மாயா என்ற சக்தியாக டாக்டர் இரா. நாகசாமி குறிப்பிடுகிறார்.★

"ஓம் கடுகே கடுகபத்ரே அஸுபகே ஆசூரி ரக்தே
ரக்தவாஸஸே அதர்வணஸ்யதுஹிதே அகோரேகோர
கர்ம காரிகே அமுகஸ்ய கதிம் தஹ உபவிஷ்டஸ்ய தஹ
குதம் தஹதஹ ஸுப்தஸ்யமனோ தஹதஹ
ப்ரபுத்தஸ்ய ஹ்ருதயம் தஹதஹ ஹனஹன பசபச
தாவத்தஹ தாவத்பச யாவன்மே வசமாயாதி
ஹும்பட்ஸ்வாஹா

என்பது ஆசூரி துர்க்கையை வழிபடும் மந்திரமாகும்.



## 7. ஆகம அடிப்படையில் நவதுர்க்கை

ஆகமங்களின் அடிப்படையில் துர்க்கையானவள் பின்வரும் ஒன்பது தோற்றங்கள் கொண்டவாளக வடிவமைக்கப்படுகின்றாள்.

1. அக்கினி துர்க்கை
2. மகா துர்க்கை
3. ஜல துர்க்கை

★ கல்லும் கதை சொல்லும் - தாராசுரம் கோயிலில் மகாமாயா சக்தி இரா. நாகசாமி

4. பிரம்ம துர்க்கை
5. விஷ்ணு துர்க்கை
6. ருத்ர துர்க்கை
7. வன துர்க்கை
8. ஸ்தூல துர்க்கை
9. சூலினி துர்க்கை

என்று ஒன்பது விதத் தோற்றங்களில் ஆகமங்கள் துர்க்கையைக் குறிப்பிடுகின்றன.

இந்த நவதுர்க்கை வடிவங்களில் அக்கினி துர்க்கை, வன துர்க்கை, சூலினி துர்க்கை ஆகிய மூன்றும், புராண முறையில் நவதுர்க்கைகளுள் ஒன்றாகக் குறிக்கப்பட்டவை. ஏனயவை குறித்து ஒரு சில வடிவங்களும் புராணக் கதைகளில் அங்கொன்றும் இங்கொன்றுமாக அறிமுகமாகின்றன.

## 1. மூல துர்க்கை அல்லது மகா துர்க்கை

பக்தர்களுக்கு அருள் புரிவதற்காக துர்க்கையானவள் பலவித வடிவங்களை எடுத்தாள். இத்தகைய வடிவங்களுக்கு மூலமான சக்தியை மூலதுர்க்கை என்று அழைக்கின்றனர். எல்லா சக்திகளிலிருந்தும் தோன்றிய இவளை மகாலட்சுமி அல்லது மகிஷாசுரமர்த்தினி என்றும் அழைப்பர். உயிர்களுக்கு ஏற்படும் எல்லா வகையான ஆபத்துக்களிலிருந்தும் காத்து அருளுபவள் இந்த மூல துர்க்கை. எல்லா வடிவமான துர்க்கைகளுக்கும் ஆதாரமாக இருப்பவள் என்று பத்ம புராணம் கூறுகின்றது. துர்க்கைகளுக்கெல்லாம் பெரிய துர்க்கையாகக் காட்சி தருவதால் இவள் மகா துர்க்கை என்றும் அழைக்கப்படுவாள்.

## 2. பிரம்ம துர்க்கை

ஒளி மண்டலத்தின் மத்தியில் இருக்கும் இவள் சங்கு சக்கர தாரிணியாய், திரிசூலம், உலக்கை, தர்ஜினி, வில், அம்பு இவற்றைத் தாங்கும் எண் கரத்தினளாய் பொன்னிறக் கிரீடம் தரித்து, பாம்மை ஆபரணமாய் பூண்டு கருநிறத்தவளாய், முகத்தில் தெற்று பற்களை உடையவளாய் முக்கண்களைப் பெற்றவளாய், முனிவர்களும் தேவர்களும் போற்றக் கூடியவ்ளாய் பிரம்ம துர்க்கை காணப் படுகின்றாள். இவளை பிராமரீ துர்க்கை என்றும் துர்க்கா பிரபாவன் அறிமுகப்படுத்துகின்றது.

## 3. ருத்ர துர்க்கை

சிவப்பு நிற ஆடையணிந்தவளாய் பச்சை நிறமேனி யுடையவளாய் பொன் மகுடமணிந்து நாற்கரத்தினளாய் சூலம், வாள், சங்கு, சக்கரம் என்ற ஆயுதங்களுடன் சூரியனையும் சந்திரனையும் தன் முடியில் அணிந்து கொண்டவளாய் விளங்குவாள் இந்த ருத்ர துர்க்கை. இவள் கரத்தில் சூலம் இருக்கும் காரணத்தால் இவள் ருத்ர துர்க்கை என்று அழைக்கப்படுகின்றாள்.

## 4. விஷ்ணு துர்க்கை

மேலே கூறப்பட்டுள்ள அந்த அடையாளங்களுடன் வெறும் சங்கு சக்கரதாரிணியாய் காட்சியளிப்பவள் விஷ்ணு துர்க்கை என்று அழைக்கப்படுகிறாள். இவளிடம் வாளுக்கும் சூலத்திற்கும் பதிலாக அபய வரத முத்திரை களுடன் கூடிய இரு கைகள் அமையப்பெற்ற இந்த துர்க்கைக்கு இரு கண்கள் மட்டுமே அமையப் பெற்றிருக்கும் என்பது சிறப்பு அம்சம். விஷ்ணு கோயில்களில் அபூர்வமாகவும் சிவன் கோயில்களில் பெரும் அளவிலும் காணக் கிடைக்கும் திருவடிவம்.

## ஸ்ரீவித்யாம்னாய கல்ப நவ துர்க்கை

துர்கே சூலினி ஜாதவேதஸி மஹா
சாந்த்யாஹ்வயே சாபரீ
ஜ்வாலாதுர் கிவராபிதே லவணகே
தீபா விதே ஹ்யாசூரி
ஏஹயம்பே புரதோ மமாத்ய
பயக்குருத்ரோகாரி பீடாதி மான்
வித்வஸ்தான் குரு தேஹி சௌக்ய
மதுலம் பக்திம் ததா வ்யாஹதாம்.

என்று ஸ்ரீ வித்யாம்னாய கல்பம் நவதுர்க்கைகளின் வித்தியாசமான பட்டியலைத் தருகிறது. இது சுவாமினி பூஜையில் கூறப்பட்ட 1. சைலபுத்ரீ, 2.ப்ரம்ஹசாரினீ, 3,சந்திரமணி, 4.கூஷ்மாண்டா, 5.ஸ்கந்தமாதா, 6.காத்யாயணீ, 7.காளராத்ரீ, மகாகௌரி, 9. சித்திதாத்ரீ என்ற ஒன்பது துர்க்கைகளினும் மாறுபட்ட வடிவம்.

வன துர்க்கையாகவும், சூலினியாகவும், ஜாத வேதா துர்க்கையாகவும், சாந்தி துர்க்கையாகவும், சபரீயாகவும் லவண துர்க்கையாகவும், தீப துர்க்கையாகவும், ஆசுரீ துர்க்கையாகவும் உள்ள தாயே என் எதிரில் வாருங்கள். எனக்குக் காட்சி கொடுங்கள். இப்பொழுது எனக்குப் பயமளிக்கும் ரோகம், சத்ரு, பீடை முதலியவற்றை அழித்து ஈடற்ற நலத்தை அருளுங்கள். அதுபோலவே உன்னிடத்தில் அசைக்க முடியாத பக்தியையும் அருளுங்கள் என்று வேண்டும் வகையில் வன துர்க்கை, சூலினி துர்க்கை, ஜாத வேதோ துர்க்கை, சாந்தி துர்க்கை, சபரீ துர்க்கை, ஜ்வலத் துர்க்கை, லவண துர்க்கை, தீப துர்க்கை, ஆஸீரீ துர்க்கை என ஒன்பது துர்க்கைகளையும் அறிமுகப்படுத்துகின்றது.

## 5. சுவாசினி பூஜை நவ துர்க்கை

சுவாசினி பூஜை என்பது திருமணம் ஆனவர்கள் செய்யும் துர்க்கை பூஜையாகும்.

நவராத்திரியன்று ஒன்பது கலசங்கள் வைத்து பூஜை செய்து வீட்டிற்கு வரும் சமங்கலிகளுக்கு மஞ்சள், குங்குமத்துடன் ஆடையொன்றும் (ரவிக்கை துணி) தானமாகத் தரவேண்டும்.

இந்த நவராத்திரி சுவாசினி பூஜை முறைகளைப் பற்றி கூறும் சமஸ்கிருத நூல் சுவாசினி பூஜை என்ற பெயரிலேயே காணப்படுகின்றது. இந்த நூலில் குறிப்பிடப்படும் நவதுர்க்கைகள் அனைவரும் சாந்த சொரூபிணிகளாக சித்தரிக்கப்படுள்ளனர். இது ஸ்ரீவித்யாம்னாய கல்பம் கூறும் நவதுர்க்கைகளிலும் மாறுபட்ட வடிவமாகக் காணப்படுகின்றது.

1. சைலபுத்ரீ
2. பிரமசாரிணீ
3. சந்திரமணி (சந்த்ரகண்டா)
4. கூஷ்மாண்டா
5. ஸ்கந்தமாதா
6. காத்யாயணீ
7. காலராத்ரீ
8. மகாகௌரி
9. சித்திதாரத்ரீ

என்ற ஒன்பது சாந்த துர்க்கைகளை சுவாசினி பூஜை அறிமுகப்படுத்துகின்றது.

## 6. சைலபுத்திரி

அரைவட்டமான சந்திரனைத் தலையில் சூடிக் கொண்டவளும், ரிஷப வாகனத்தில் இருப்பவளும்,

சூலத்தை தரிப்பவளும், புகழுடையவளுமான சைலராஜாவின் புத்திரியான துர்க்கை என்று இவளைப் புராணங்கள் இனங்காட்டுகின்றன. சில புராணங்கள் இதே சைலபுத்திரியை மலைமகள் என்றும் குறிப்பிடுகின்றன.

அன்னை துர்க்கையின் முதல் வடிவம் இந்த சைலபுத்திரி எனப்படுகிறது. மலைகளின் (சைலம்) அரசனான இமாலயனின் மகளாக அவதரித்ததால் அவருக்கு இப்பெயர் ஏற்பட்டது. இவளின் வலதுகையில் திரிசூலமும், இடது கையில் தாமரை மலரும், அவங்கரிக்கின்றன.

நவதுர்க்கைகளில் முதல் துர்க்கையானவள் இந்த சைலபுத்திரி.

தட்சன் சிவபெருமானைக் குறித்து கடுந்தவம் செய்து கொண்டிருந்தான். அதை அறிந்த சிவபெருமான் பார்வதியை நோக்கி, தட்சன் என்பவன் உன்னையே மகளாகப் பெற வேண்டும் என்று தவஞ்செய்வதால் நீ அவனுக்கு மகளாகப் பிறக்க வேண்டும் என்றார்.

அதற்கு உமையும், இறைவா நான் தட்சனுக்கு மகளாகப் பிறந்தால் நீங்கள் என்னைத் திருமணம் செய்து கொள்வது எப்போது என்பதை எனக்குச் சொல்ல வேண்டும் என்றாள்.

அதற்குச் சிவபெருமான், உமையே! தட்சனின் மனைவி மகிழ, நீ அவளுக்குக் குழந்தையாகி, வளர்ந்து கன்னிப்பருவம் அடைந்தவுடன் நான் வந்து உன்னை மணந்து கொள்வேன். நீ தட்சனின் மகளாகப் பிறப்பாயாக என்றார்.

சிவனின் உத்தரவுப்படி உமை தட்சனின் மனைவி முன்பாக ஒரு குழந்தையாகத் தோன்றினாள். அதைக் கண்டதும் த்ட்சன் மனைவி பெரிதும் மகிழ்ச்சி அடைந்தாள்.

இவ்விதமாகப் பார்வதி தேவியே பூவுலகில் தட்சன் மகளாக தாட்சாயிணியாகத் தோன்றியவுடன் தேவர்கள்

மலர் மாரி பொழிந்தனர். தட்சனும் தவம் நீங்கி அரண்மனை வந்தான். ஈஸ்வரியாகிய தன் மகளைக் கண்டு மிகவும் ஆனந்த மடைந்தான். அவன் மனைவி அந்தக் குழந்தையை மார்போடு அணைத்து தாய்ப்பாலூட்டி மகிழ்ந்து சீராட்டி வளர்த்து வந்தாள்.

தாட்சாயிணிக்கு உரியபருவம் வந்ததும் சிவபெருமானே நேரில் வந்து திருமணமும் செய்து கொண்டார். ஒரு நாள் தட்சன் தன் வீட்டில் மாப்பிள்ளையாக வீற்றிருக்கும் சிவபெருமானிடம் பெருமானே! நீர் தினந்தோறும் எனக்கு விபூதி கொடுத்து வர வேண்டும் என்று வரம் கேட்டான்.

தட்சனது வஞ்சக எண்ணத்தை அறிந்து கொண்ட சிவபெருமான் அவனுக்கு அந்த வரத்தையளிக்காமல் அக்கணமே தாட்சாயிணியுடன் கயிலயத்திற்குச் சென்றுவிட்டார்.

சிவபெருமான் தன் மனப்போக்கின்படி நடக்காமல், தன் புத்திரியோடு மறைந்து போனதால் தட்சன் ஆத்திரமடைந்து தன் மருமகனான சிவபெருமான் அழிந்து போகும்படிச் செய்ய வேண்டுமென்று நினைத்து மரணயாகம் ஒன்றை நடத்தினான்.

அந்த யாகத்திற்குத் தேவேந்திரன், அஷ்ட திக்குப்பாலர்கள், தேவர்கள், பிரம்மா, விஷ்ணு, சந்திரன், சூரியன் ஆகிய அனைவரும் சென்றனர். தட்சனின் யாகத்தை அறிந்த தாட்சாயிணியும் யாகத்திற்குச் செல்ல சிவபெருமானின் அனுமதியைக் கோரினார்.

நம்மை அழையாத யாகத்திற்கு நாம் செல்வது முறையன்று. மேலும் இது என்னை அழிப்பதற்கு நடத்தப்படும் யாகம். அங்கு நீ செல்வது முறையன்று என்று அறிவுரை கூறினார் சிவபெருமான். ஆனால் சிவனின் அறிவுரைகளை ஏற்றுக் கொள்ளும் நிலையில் தாட்சாயிணி இல்லை. தந்தை பாசம் அவள் மனதை அலைக்கழித்தது.

கணவர் மேலுள்ள கோபத்தை மாற்றுவதற்காகவாவது தன் தந்தையைச் சந்திக்க அனுமதி கோரினாள் தாட்சாயிணி. இனி அறிவுரைகள் ஏதும் பயன்படாது என்ற நிலையில் அவளை தந்தையைக் காண அனுமதியளித்தார்.

தாட்சாயிணி தட்சனின் அரண்மனைக்குள் நுழைந்ததும் யாரும் அவளை வரவேற்கவில்லை. மாறாக அவமதிப்பே நடந்தது. அவளது சகோதரிகள் பேச்சில் கேலியும், பரிகாசமும் நிறைந்திருந்தது. இவையெல்லாவற்றிற்கும் மேலாக தட்சனின் கொடுஞ்சொற்கள் அவளது இதயத்தைச் சுக்கு நூறாக்கின. இத்தகைய அவமதிப்பைக் கண்டு தாட்சாயிணியின் உள்ளம் கொதித்தது. கணவரின் சொல்லை மீறிய துன்பத்தை அவள் அனுபவித்தாள். இனி எந்த முகத்தை வைத்துக் கொண்டு தன் கணவரைச் சந்திப்பது.

தட்சனின் கொழுந்துவிட்டு எரியும் யாகத் தீயில் தன்னுடைய வடிவத்தைச் சாம்பலாக்கினாள். மரண யாகத்தின் நோக்கம் நிறைவேற்றியது. யாகத் தீயில் மாண்ட தாட்சாயிணியின் நிலையினை அறிந்த சிவபெருமானுக்கு கோபம் பொங்கியது. சினத்தோடு விழித்தார்.

சிவபெருமானின் நெற்றியில் அக்கினி நீர் சுரந்தது. அப்படி வழிந்த நீரிலிருந்து வீரபத்திரர் ருத்திராங்காரத்துடன் தோன்றி சிவபெருமானை நோக்கி என்னை அழைத்த காரணம் என்ன? என்று கேட்டார்.

சிவபெருமானும் வீரபத்திரரிடம் நீ தட்சனின் யாகத்தை அடியோடு அழித்து வா என்று கட்டளையிட்டார்.

இறைவனின் கட்டளையை ஏற்ற வீரபத்திரன் பொங்கியெழுந்து பூதகணங்களோடு தட்சன் யாகசாலைக்குச் சென்று, யாகத்தை அழித்து அங்கு வந்திருந்த தேவர்களையும் முனிவர்களையும் அடித்து நொறுக்கி தட்சனின் தலையை ஒரு பூதம் தின்னும்படிக் கொடுத்து யாகசலை இருந்த இடத்தைச் சுடுகாடாக்கினான்.

தட்சனின் யாகசாலை அழியும் காட்சியை விண்ணிலிருந்து பார்த்த பார்வதிதேவி மன்னித்துவிடும்படி கோரினாள். சிவபெருமானும் அவளது உள்ளக்கிடக்கையை அறிந்து மடிந்த தேவர்களை உயிர்ப்பித்துக் கொடுத்து தட்சனின் உடலுக்கு ஆட்டுத் தலையை அடையாளமாக வைத்து அவனையும் உயிர்ப்பித்தருளினார்.

தேவர்கள் உயிர் பெற்றெழுந்து சிவனாரை வணங்கும் போது அவர்களை நோக்கி தேவர்களே என்னைக் கொல்ல நடத்திய யாகத்தில் நீங்கள் கலந்து கொண்டதால் உங்களுக்கு அசுரர்களால் துன்பம் உண்டாகட்டும் என்றார்.

தேவர்கள் பயந்து நடுங்கி சிவபெருமானே எங்களுக்கு நீர் இட்ட சாபம் எப்போது நிவர்த்தியாகும்? நாங்கள் செய்த பிழைகளை மன்னிக்கக் கூடாதா? என்று கெஞ்சினர்.

தேவர்களே மகாமாயை என்ற ஒரு பெண் புறப்பட்டுப் போய் காசிப மகரிஷியின் தோள்களைக் கட்டித் தழுவி அந்த ரிஷியுடன் சேர்வாள். அவள் மூலம் காசிப ரிஷிக்கு நான்கு பிள்ளைகள் பிறப்பார்கள். அவர்களில் ஆண் பிள்ளைகள் மூவர் ஆயிரத்தெட்டு அண்டங்களையும் ஆளுவார்கள். அவர்களில் சூரபத்மன் என்றும் அசுரன் நானூற்று இருபத்து ஏழு சதுர்யுகம் வரை எமனும் அஞ்சும்படியாக அரசாட்சி நடத்துவான். அப்போது எம்மிடம் குமாரப் பெருமான் தோன்றி சூரபத்மனோடு போராடி உங்களைச் சிறையிலிருந்து மீட்டு உங்கள் துன்பத்தைத் தீர்ப்பான். போய் வாருங்கள் என்றார்.

யாகத் தீயிலே விழுந்து மாண்ட தாட்சாயிணி மறுபிறவியில் மலைராஜனின் மகளாகப் பிறந்தாள். அதனால் அவளுக்கு மலைமகள், சைலபுத்திரி என்ற பெயர் ஏற்பட்டது. பார்வதி தேவி மற்றும் ஹேமவதி என்ற செல்லப் பெயர்களும் அவளுக்கு வழங்கப்பட்டது. உபநிஷத்தின் ஒரு

கதையின்படி இதே ஹேமவதிதான் தேவர்களின் கர்வத்தை அழித்தவள் என்றும் சொல்லப்படுகிறது.

மலைமகள் உரிய பருவம் வந்ததும் தேவர்களின் பெரு முயற்சியில் மன்மத தகனம் நடந்த பிறகு சிவபெருமானுடன் சேர்ந்தார்.

இவ்விதம் சிவனாருடன் மலை மகளின் திருமணம் நிகழ்ந்தது. நவதுர்க்கைகளுள் மலைமகளின் மகத்துவமும் சக்திகளும் எண்ணிலடங்காது. நவராத்திரியின் முதல்நாள் வழிபாடு இவருடையது. இந்த முதல் நாள் உபாசனையில் யோகி தன்னுடைய மனதை மூலாதாரத்தின் சக்கரத்தில் நிலைநிறுத்துகிறான். இதிலிருந்துதான் அவனது யோக சாதனைகள் ஆரம்பமாகிறது.

வட இந்தியாவில் காசியில் உள்ள வருணை நதிக்கருகில் சைலபுத்திரி மலைமகள் கோயில் உள்ளது. நவராத்திரியின் முதல் நாளில் இந்த துர்க்கையைத் தரிசிப்பதை மக்கள் பெரும் பேறாகக் கருதுவர்.

## 7. பிரம்மசாரிணி துர்க்கை

தாமரை மலர் போன்ற இருகைகளிலும் ஜபமாலையும் கமண்டலமும் தரித்திருக்கும் பிரம்மசாரிணி துர்க்கை என்னிடத்தில் கருணை செய்யட்டும் என்று ஒரு மந்திரம் காணப்படுகிறது.

அன்னை துர்க்கையின் ஒன்பது வடிவங்களில் இது இரண்டாவது வடிவம். இங்கே "பிரமம், என்பதின் பொருள் 'தவம்' ஆகும். பிரமம் என்றால் வேதம், தத்துவம் மற்றும் தவம் எனப் பொருள்படும் பிரகாசமான பிரம்மசாரிணி வலது கையில் ஜெபமாலையும் இடது கையில் கமண்டலமும் கொண்டு கன்னிகையாக தவக்கோலத்தில் காட்சி தருகின்றாள்.

தட்சனின் யாகத் தீயிலே மாண்ட தாட்சாயிணி மறுபடியும் சிவபெருமானைக் கணவராக அடைய மலைமகளாகப் பிறப்பெடுக்கிறாள். இமவான் புத்திரியான இவள் கன்னிப்பருவம் அடைந்து காத்திருந்தும் சிவபெருமான் இவளைக் கண்டு கொள்ளவேயில்லை.

தாட்சாயிணியை இழந்த துன்பத்தில் கடுந்தவம் செய்த வண்ணமிருந்தார். அவரின் கடுந்தவத்தைக் குலைக்க தேவர்கள் செய்த முயற்சியெல்லாம் வீணாயிற்று.

சிவபெருமானின் மனைவியாக வேண்டுமென்பதற்காக கடுமையான தவத்தை மேற்கொண்டாள் மலைமகள்.

ஓர் ஆயிரம் வருடங்கள் வெறும் பழங்களையும் கிழங்குகளையும் உண்டு தவம் செய்தார். இன்னும் ஒரு நூறு வருடங்கள் வெறும் காய்கறி மட்டுமே உண்டாள். தன்னுடைய தவம் எந்தவிதப் பலனையும் அளிக்காதது கண்டு தனது தவத்தை இன்னும் கடுமையாக்கினாள்.

திறந்த ஆகாயத்தின் கீழே மழை மற்றும் வெய்யிலில் கஷ்டப்பட்டாள். மூன்று ஆயிரம் வருடங்கள் கீழே விழும் வில்வ இலைகளை மட்டும் உண்டு சிவனைப் பூஜித்தாள் அதன் பிறகு அதனையும் உண்ணுவதைத் தவிர்த்து பல ஆயிரம் வருடங்கள் வரை அன்ன ஆகாரமின்றி நீர் கூடப் பருகாமல் தவம் செய்ய ஆரம்பித்தார்.

இலைகளைக் கூட(பர்ணம்) இவள் உண்ணாததால் அபர்ணா எனப்பட்டாள். இந்தக் கடுமையான தவத்தின் காரணமாக பிரமசாரிணியின் உடல்நிலை மிகவும் பாதிக்கப்பட்டது. அவளின் அந்நிலை கண்டு அவளுடைய தாய் மேனா துக்கத்துடன் அவளுடைய விரதத்தை கைவிடச் சொன்னார். ஆனாலும் அவள் தன்னுடைய நிலையிலிருந்து மாறவில்லை.

மலைமகளின் இந்தக் கடுந்தவம் மூவுலகங்களிலும் எதிரொலித்தது. தேவர்கள், முனிவர்கள், சித்தர்கள்

எல்லோரும் தேவியின் இந்தக் கடுந்தவத்தைப் பற்றியே பேசினர். இனியும் தாமதித்தால் விபரீத விளைவுகள் ஏற்படும் என்ற கருத்தில் பிரம்மா அசரீரியாக மலைமகளுடன் தொடர்பு கொண்டார்.

"தேவி! இன்றுவரை யாருமே இதுமாதிரியான கடுமையான தவத்தை மேற்கொண்டதில்லை. உன்னால் மட்டுமே இது சாத்தியமாயிற்று. எங்கு பார்த்தாலும் உன் தவத்தின் பெருமையே பேசப்படுகின்றது. உன்னுடைய இந்தத் தவத்திற்கு மனமகிழ்ந்து பகவான் சந்திரமௌலி சிவன் வடிவத்திலேயே உனக்கு கிடைப்பார். உனது ஆசையும் வெகு சீக்கிரமே நிறைவேறும்.

இப்பொழுது உன் தவத்தைக் கைவிட்டு வீடு திரும்புவாயாக. உன்னுடைய தந்தை உனக்காக வந்து கொண்டிருக்கிறார். அவருடன் செல், வெகுசீக்கிரமே உன் திருமணம் கை கூடும் என்றார்.

பிரம்மாவின் வாக்கு பலித்தது. கடுந்தவத்திலிருக்கும் சிவபெருமானுக்குப் பணிவிடைகள் செய்ய மலைமகள் தேவர்களால் அனுமதிக்கப்பட்டாள். அவர்கள் இருவருக்கும் மன்மதன் வாயிலாக ஆசை ஏற்படச் செய்ய மன்மதன் சிவனாரின் கோபத்தில் எரிந்து சாம்பலானான்.

ஆயினும் அவனின் மலர்க்கணை சிவனாரின் உள்ளத்தில் பார்வதியைப் பற்றிய நினைவுகளை எழுப்ப, விரைவில் தவநிலை கலைந்து அவளை மணந்து கொண்டார்.

உமையின் இந்தத் தவம் செய்யும் கோலமான பிரமசாரிணி துர்க்கை வடிவம் பக்தர்களுக்கும் சித்தர்களுக்கும் அருள் பாலிப்பதாக அமைந்தது. பிரமசாரிணியின் உபாசனையில் மனிதனிடத்தில் தவம், தியாகம், வைராக்கியம், ஒழுக்கம் ஆகியவை ஏற்படுகின்றது.

மேலும் அவளின் அருளில் வாழ்க்கையின் கடினமான பாதையில் கூட மனிதனின் மனம் கடமை வழி தவறாது செல்கிறது. அன்னை பிரம்மசாரிணி அருளால் அவனுக்கு எல்லா சித்தியும் வெற்றியும் கிடைக்கப் பெறுகிறது.

நவராத்தி துர்க்கா பூஜையின் இரண்டாம் நாள் இவரின் இந்த பிரம்மசாரிணி வடிவ உபாசனை செய்யப்படுகிறது. இந்த இரண்டாம் நாள் பூஜையின் போது சாதகனின் மனம் சுவாதிஷ்டான சக்கரத்தில் நிலைபெறுகிறது.

இந்தச் சக்கரத்தில் யோகியானவன் தேவியின் கிருபையையும் பக்தியையும் பெறுகின்றான்.

வட இந்தியாவில் காசியில் துர்க்கா காட் என்னும் பெயருடைய படித்துறையருகே பிரம்மசாரிணி கோயில் உள்ளது. நவராத்திரியின் இரண்டாம் நர்ள் இவளை தரிசிப்பது பெரும் சிறப்பாகக் கருதப்படுகிறது.

## 8. சந்திரமணி துர்க்கை

அன்னை துர்க்கையின் மூன்றாம் சக்தியின் பெயர் சந்திரமணி எனப்படுகிறது. நவராத்திரி உபாசனையின் மூன்றாம் நாள் இவளின் விக்கிரகம் ஆராதனை செய்யப்படுகிறது. இவளின் இந்த வடிவம் சாந்தியும் அமைதியும் அளிப்பதாகும்.

தேவியின் நெற்றியில் மணிவடிவிலான அரைநிலவு உள்ளது. இதனால் இவர் சந்திரமணி தேவி என்று அழைக்கப்படுகிறாள்.

இவளின் உடல் தங்க நிறமாக மின்னக் கூடியது. இவளுக்குப் பத்து கரங்கள். அந்தப் பத்துக் கரங்களிலும் ஆயுதங்கள் காணப்படுகின்றன. இவள் தனது வாகனமான சிங்கத்தில் போருக்குப் புறப்படுபவள் போல் காணப்படுகின்றாள்.

இவளுடைய இந்த வடிவத்தைக் கண்டு அரக்கர்கள் பயப்படுவர். நவராத்திரியில் துர்க்கை உபாசனையில் மூன்றாம் நாள் பூஜை மகத்துவம் வாய்ந்ததாக உள்ளது.

இந்தத் தினத்தில் சாதகனின் மனது மணிப் பூரக சக்கரத்தில் சந்திரமணியின் அருளால் அவனுக்கு அலௌகிக வஸ்துகளின் தரிசனம் தென்படுகின்றது. புனிதத் தலங்களைத் தரிசித்த அனுபவம் ஏற்படுகிறது. அவனுக்குப் புனித ஒலிகளும் கேட்கின்றன.

இந்த நேரத்தில் சாதகன் மிகவும் எச்சரிக்கையுடன் நடந்து கொள்ள வேண்டும்.

அன்னை சந்திரமணியின் அருளால் சாதகனின் எல்லாப் பாவங்களும் தடைகளும் விலகுகின்றன. இவளுடைய வடிவம் எப்போதும் யுத்தத்திற்குத் தயார் நிலையில் இருப்பது போல் இருக்கிறது.

பக்தர்களின் சிரமத்தை நிவர்த்தி செய்வதற்குத் தயாரான நிலையில் இவளுடைய சந்திர மணியின் ஒலி எப்போதும் ஒலித்துக் கொண்டே இருக்கிறது.

வட இந்தியாவில் காசியில் சௌக்கடைத் தெரு அருகே சித்திராகண்ம என்ற அம்மன் கோயில் உண்டு. இவள் நவதுர்க்கைகளில் சந்திரமணி (சந்திர காண்டா) துர்க்கை யாவாள். நவராத்திரியின் மூன்றாம் நாள் தரிசனம் சிறப்பானது.

## 9. கூஷ்மாண்டா துர்க்கை

துர்க்கையின் நான்காவது வடிவம் இந்த கூஷ்மாண்டா. தனது மந்தமான சிரிப்பினால் பிரமாண்டத்தைத் தோற்றுவிப்பதால் அவள் கூஷ்மாண்டா எனப்படுகிறாள்.

சிருஷ்டிகளின் நிலையற்ற தன்மையினால் உலகின் நான்கு புறமும் இருளே சூழ்ந்திருக்கிறது. இந்த மாபெரும்

கரிய இருளை தனது மின்னல் சிரிப்பினால் பிரசாசமாக்கி சிருஷ்டியை கூஷ்மாண்டா தோற்றுவிக்கிறாள் என்று உபநிஷத்துகள் தெரிவிக்கின்றன.

இந்த சிருஷ்டியின் ஆதிசொருபமே சக்திமயமானது தான். பிரமாண்டமோ நிலையில்லாதது. இந்நிலையில் கூஷ்மாண்டா தனது பெரும் ஒளியினால் ஓர் சூரிய உலகத்தையே சிருஷ்டிக்கிறாள். இந்தச் சூரிய ஒளியின் பிரகாசத்தினால் பத்து திசைகளும் வெளிச்சமடைகின்றன.

இந்த கூஷ்மாண்டாவுக்கு எட்டு கைகள் இருப்பதனால் இவள் அஷ்ட பூஜாதேவி என்றும் அழைக்கப்படுகிறாள். இவளது திருக்கரங்களில் கமண்டலம், வில், பானம், அம்பு, தாமரை மலர், அமிர்த கலசம், சக்கரம், கதாயுதம் ஆகியவை உள்ளன. எல்லாவற்றிற்கும் சிகரமாக எட்டாவது கையில் ஜபமாலை உள்ளது.

கூஷ்மாண்டா எல்லா சித்திகளையும் எல்லா நிதிகளையும் தரக்கூடியவள் என்று உபநிஷத்தில் கூறப்படுகிறது.

சமஸ்கிருதத்தில் கூஷ்மாண்டாவை கும்மறடேசோ என்பர். நவராத்திரியின் நான்காவது நாளில் இவளுக்கு உபாசனை செய்யப்படுகிறது. கூஷ்மாண்டாவை பூஜை செய்யும் சாதகனது மனது ஆறாதாரச் சக்கரங்களில் அனாகதச் சக்கரத்தில் லயிக்கிறது.

காளி வழிபாட்டில் கூறப்பட்டுள்ள மதுக் கொடை நிகழ்ச்சியில் வழிபடும் தெய்வமாக இந்த கூஷ்மாண்டா கருதப்படுகிறாள்.

தாமரை மலர் போன்ற இரு கைகளிலும் கள் நிறைந்த குடத்தையும்; இரத்தம் நிறைந்த குடத்தையும் வைத்திருக்கும் கூஷ்மாண்டா துர்க்கையானவள் நன்மை செய்யட்டும் என்று புராணங்கள் இவளை அறிமுகப்படுத்துகின்றன.

வட இந்தியாவில் காசியில் சௌக்கடைத் தெரு அருகில் கூஷ்மாட் துர்க்கை கோயில் உண்டு. நவராத்தியின் நான்காம் நாள் இங்கே விசேஷமாகக் கொண்டாடப்படுகிறது.

## 10. ஸ்கந்த மாதா

ஸ்கந்த துர்க்கை என்று அழைக்கப்படும் இந்த ஸ்கந்த மாதா கந்தனின் தாயாக இருப்பதனால் இந்தப் பெயரால் அழைக்கப்படுகிறாள். தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் நடந்த யுத்தத்தில் இந்த ஸ்கந்த துர்க்கையானவள் தேவர்களின் சேனாதிபதியாக இருந்தாள்.

நவராத்திரி விழாவின் ஐந்தாவது நாள் இவளுக்கான பூஜை செய்யப்படுகின்றது. இவளை பூஜை செய்து வழிபடும் சாதகனின் மனது விசுத்தி சக்கரத்தில் லயிக்கும் என்று சொல்லப்படுகிறது.

இவளுடைய விக்கிரகத்தில் இவளது மடியில் முருகப்பெருமான் அமர்ந்திருப்பது போல் வடிக்கப்பட்டு உள்ளது. இவள் சமாசனத்தில் இருப்பதால் இவள் பத்மாசனதேவி என்றும் அழைக்கப்படுவாள். நவ துர்க்கைகளில் ஒருவராக இவள் கருதப்படுவதால் இவளுக்குச் சிம்மவாகனமும் உண்டு.

காசியில் ஜைத்புரா என்ற பகுதியில் ஸ்கந்த மாதா அல்லது வாகீஸ்வரி என்ற துர்க்கையம்மன் கோயில் உள்ளது. இங்கு நவராத்தியின் ஐந்தாம் நாள் வெகுவிசேடம்.

## 11. கார்த்தியாயிணி

ஒரு சமயம் மகிஷாசுரன் காத்யாயன மகரிஷியின் புதல்வனைப் பெண்ணுருக்குக் கொண்டு மோகிக்கச் செய்தான். இதனால் கோபம் கொண்ட காத்யாயனர் பெண்ணுருக் கொண்டு என் மகனை நிலை தடுமாறச்

செய்தமையால் நீ ஒரு பெண்ணிலேயே மடிவாய் என்று சாபமிட்டார்.

மகிஷாசுரனின் அநியாயங்களை அழிக்கவும் கார்த்தியாயன மகரிஷியின் சாபத்தை நிறைவேற்றவும் பிரம்மா, விஷ்ணு, ருத்ரர், இந்திரன் முதலான தேவர்கள் காத்யாயனாசிரமத்தில் வந்து தங்கி பராசக்தியைக் குறித்து தவமியற்றினர்.

தேவர்களின் வேண்டுகோளை நிறைவேற்ற பராசக்தியானவள் மகாலட்சுமியாய் காத்யாயனாசிரமத்தில் பிறந்தனள். காத்யாய கோத்திரத்தில் பிறந்தமையால் துர்க்காதேவி **காத்யாயணி** என்று அழைக்கப்படுகிறார். அதனால்தான் துர்க்கா காயத்திரியை

**காத்யாயனாய வித்மஹே**
**கன்யாகுமாரீ தீமஹி தன்னோ**
**துர்க்: பிரசோதயாத்**

என்று துதிக்கின்றோம்.

மகிஷாசுரனின் அநியாயங்கள் பெருகவே மும்மூர்த்திகளும் தங்களது சக்திகளை ஒன்றாகத் திரட்ட ஒரு சக்தியை உருவாக்கி வைத்தனர்.

அந்த மகாசக்தியை முதன் முதலில் பூஜை செய்தவர் கார்த்தியாயன மகரிஷி. அந்த கார்த்தியாய்னர் வழிபட்ட தேவியை வணங்கிய இவளும் கார்த்தியாயிணி எனப்பெயர் பெற்றதாகப் புராணம் கூறும்.

கார்த்யாயன மகரிஷிக்குப் புத்திரியாக அவதரித்த கார்த்தியாயிணி புரட்டாசி மாதம் கிருஷ்ணபட்ச சதுர்த்தசி திதியில் மகாலட்சுமியாக அவதாரம் செய்தாள் என்றும், சுக்கிலபட்ச அஷ்டமி திதியில் மகிஷாசுரனை வதம் செய்தாள் என்றும், நவமியில் தேவர்கள் அவளை வழிபட்டனர் என்னும், விஜயதசமியன்று அவள் தேவர்களிடம்

விடைபெற்று ஸ்ரீபுவனேச்சுவரி தேவி வாசம் செய்யும் மணித்வீபம் சென்றடைந்தாள் என்றும் புராணம் கூறும்.

மகிஷாசுரனை அழிப்பதற்காக மகாலட்சுமி வடிவமெடுத்த கார்த்தியாயிணிக்கு சிவ தேஜஸ் முகமாகவும், யமன் தேஜஸ் கேசங்களாகவும், அக்கினியின் தேஜஸ் மூன்று கண்களாகவும், சந்தியா தேஜஸ் மூன்று புருவங்களாகவும், ..சனின் தேஜஸ் அழகிய பற்களாகவும், குபேர தேஜஸ் காதுகளாகவும், கருணை தேஜஸ் மேல் உதடாகவும், கார்த்திகேயன் தேஜஸ் கீழ் உதடாகவும், விஷ்ணு தேஜஸ் பதினெட்டுக்கரங்களாகவும், அஷ்டவசுக்களுடைய தேஜஸ் விரல்களைாகவும், சந்திரனின் தேஜஸ் தனங்களாகவும், இந்திர தேஜஸ் இடையாகவும்(மின்னல் இடையாள்), வருண தேஜஸ் முழங்கால் தொடைகளாகவும், பிரம்மாவின் தேஜஸ் இரண்டு பாதங்களாகவும், சூரிய தேஜஸ் பாதங்களின் விரல்களாகவும் சீர்பெற்று விளங்கின.

மேலும் இந்த மகாலட்சுமியின் முகம் சிவப்பாகவும் கைகள் நீலமாகவும் மத்ய பாதம் இவை வெளுப்பாகவும் இருந்தது. பலவிதவண்ணமுடைய மலர்மாலையையும், ஆபரணங்கலையும் துணிகளையும் இவள் அணிந்திருந்தாள் என வைக்கிருதிக ரகசியம் கூறுகிறது.

மகிஷாசுரனை அழிக்கப் புறப்பட்ட கார்த்தியாயினிக்கு அனைத்து தேவர்களும் தத்தம் ஆயுதங்களின்றும் ஆயுதங்களை தோற்றுவித்துக் கொடுத்தனர்.

சிவன் சூலத்தையும், விஷ்ணு சக்கரத்தையும், வருணன் சங்கையும், அக்கினி பகவான் சக்தியையும், வாயு வில்லையும், அம்பராத்துணியையும், இந்திரன் வஜ்ராயுதத்தையும். ஐராவதம் மணியையும், யமன் காலதண்டத்தையும், வருணன் பாசத்தையும், பிரம்மா அட்சய மாலையையும், கமண்டலத்தையும் கொடுத்தனர்.

சூரியன் தனது கிரணங்களையும், காலன் கத்தி கேடயத்தையும், பாற்கடல் ஹாரம் இரண்டு வஸ்திரம் ஆகியவைகளையும், சூடாமணி, குண்டலம், கட்கம், தோள்வளை, நூபுரம், அட்டிகை, மோதிரம், பரசு, அஸ்திரங்கள், கவசம் இவற்றை விசுவகர்மாவும், தாமரை மலர்மாலை, சிரத்தில் அணியும் மணி மார்பணி இவைகளை சாகரமும், சிம்மவாகனம் பல ரத்தினங்கள் இவைகளை இமாவானும் அளித்தனர். குபேரன் மது பாத்திரத்தையும், ஆதி சேஷன் நாக ஆரத்தையும், பல ஆயுதங்களையும் ஆபரணங்களையும் தேவர்கள் மகிழ்வுடன் அளித்தனர்.

இவள் போர்க் கோலம் பூண்டமையினால் பதினெட்டுக் கரத்தவளாக வருணிக்கப்படுகின்றாள். இவள் தனது பதினெட்டு கரங்களிலும் 1. ருத்ராட்ச மாலை, 2. கட்டாரி, 3. கதை, 4. அம்பு, 5. வஜ்ரம், 6. தாமரைப்பூ, 7. வில், 8. கமண்டலம், 9. தடி, 10. சக்தி, 11. கத்தி, 12. கேடயம், 13. சங்கு, 14. மணி, 15. பானபத்திரம், 16. சூலம், 17. பாசம்(கயிறு), 18. சக்கரம் என்ற பதினெட்டு ஆயுதங்களைத் தாங்கியவளாய் தாமரை மலரில் அமர்ந்து அனைவருக்கும் காட்சி கொடுத்தாள்.

இந்த கார்த்தியாயிணிக்கு நான்கு திருக்கரங்கள் உள்ளதாகவும் வலது கரங்கள் அபயமுத்திரை மற்றும் வரத முத்திரைகளைத் தாங்கியும், இடது திருக்கரங்கள் தாமரை மலரும் வாளும் ஏந்தி சிங்க வாகனத்தில் அமர்ந்து அருள்புரிவதாகவும் கூறப்படுகிறது.

அருள் செய்யும் கார்த்தியாணிக்கு சிம்மவாகனமும் போருக்கு புறப்படும் கோலத்திற்கு தாமரை ஆசனமும் கொடுத்தது ஏன் என்று புரியவில்லை.

ஸ்ரீ கிருஷ்ணனைத் தங்களது கணவனாக அடைவதற்கு கோபியர்கள் யமுனை நதிக்கரையில் கார்த்தியாயிணிக்கு பூஜைகள் செய்ததாக ஸ்ரீ கிருஷ்ண புராணம் கூறுகின்றது.

நவராத்திரியின் ஆறாவது நாளில் உபாசனைக்குரிய தேவதையாக கார்த்தியாயிணி பூஜிக்கப்படுகிறாள். இவளை உபாசிக்கும் சாதகனது மனது ஆக்ஞா சக்கரத்தில் லயித்து யோக சாதனைகளை அளிக்கின்றது.

காசியில் ஆத்ம விஸ்வேஸ்வரர் கோயிலின் பின்பக்க நுழைவுவாயிலையடுத்துள்ள சுற்றுச் சுவரில் கார்த்தியாயிணி கோட்டத் தெய்வமாக ஆராதிக்கப்படுகிறாள். நவராத்தியின் ஆறாம் நாள் விழா இங்கு வெகுவிமரிசையாகக் கொண்டாடப்படுகின்றது.

## 12. கால ராத்திரி

பயங்கரமான உருவமும் நீலத்தாமரையையொக்கும் சரீரமும் பேய்ச் சிரிப்பும் உடையவள் இந்த காலராத்திரி துர்க்கை என்று வேதங்கள் இவளை வருணிக்கின்றன.

நவ துர்க்கைகளில் ஏழாவது வடிவம்தான் இந்த கால ராத்திரி. இவளது உடல் இருளுக்குச் சமமான கருப்பு நிறமுடையது. விரித்துப் போட்ட கருப்பு முடியை உடைய இவள் கழுத்தில் மின்னலை மாலையாக அணிந்திருப்பாள். இவளுக்கு மூன்று கண்களும் நான்கு திருக்கரங்களும் அமைந்திருக்கும்.

மூன்று கண்களும் பிரமண்டத்தைப் பார்த்துக் கொண்டிருக்கும். இவளது நாசியிலிருந்து அக்கினியின் சுவாலைகள் வந்து கொண்டேயிருக்கும். இவளது வாகனம் கழுதையாகும்.

இவளது வலது மேல் கையில் அபயமுத்திரையும் கீழ் கையில் வரத முத்திரையும், இடது மேல் கையில் கட்டாரியும், கீழ் கையில் இந்திரனின் வஜ்ராயுதமும், அடையாளங்களாகக் காட்டப்படுகின்றன. இவளுக்கு சுபங்கரி என்ற மற்றொரு பெயரும் உண்டு.

நவராத்திரியின் ஏழாவது நாள் பூஜை இந்த கால ராத்திரி துர்க்கைக்கு உரியது. கால ராத்திரியை வழிபடும் சாதகனின் மனது சகஸ்ராரம் சக்கரத்தில் நிலை கொண்டு யோகியர்க்கு முக்தியை அளிக்கிறது என்று கூறப்படுகிறது.

வட இந்திய காசிநகரின் காளிகா கலியில் காளராத்திரி துர்க்கை கோயில் உள்ளது. நவராத்திரியின் ஏழாம் நாள் விழா இங்கு சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது.

## 13. மகா கௌரி

வெள்ளை வாரணத்தின் மீது வீற்றிருப்பவளும், வெள்ளைச்சேலை உடுத்திருப்பவளும், தூய்மையானவளும், மகா தேவனுக்கு மகிழ்ச்சியளிப்பவளுமான மகா கௌரி என்று இந்த மகா கௌரி துர்க்கை சுட்டப்படுகின்றாள். ஆனால் இவள் சிவாம்சம் நிறைந்த புலித்தோல் போர்த்திய காளையின் மீது அமர்ந்தவளாய் திரிசூலம் ஏந்திக் காட்சியளிக்கின்றாள்.

சாந்த சொரூப வடிவமான இவளது முகத்திற்கு நிலவு ஒப்புமை காட்டப்படுகிறது. இவளது நான்கு திருக்கரங்களில் வலது கரங்களில் அபயமுத்திரையும் திரிசூலமும் காணப்படுகிறது. இடது கரங்களில் மேலே அல்லது கீழே டமருகம்(உடுக்கை) மற்றும் வரமுத்திரை காணப்படுகிறது.

தட்சனின் யாகத்தீயில் மடிந்த தாட்சாயிணி மலை மகளாக அவதாரம் செய்து மீண்டும் சிவபெருமானையே கணவனாகப் பெற கடுமையான தவத்தை மேற் கொள்கிறாள். வருடக்கணக்கில் அன்ன ஆகாரமின்றி அவள் செய்த தவத்தால் சிவனின் பேரருள் கிடைக்கிறது. அவள் சிவனை மணந்து கொள்கிறாள்.

ஆனால் பார்வதி செய்த கடுந்தவத்தின் விளைவாக ஒளி பொருந்திய அவளது தேகம் கறுத்தது. சிவபெருமான்,

இழந்த ஒளியை பார்வதி பெறுவதற்கு கங்கை நதியில் அவளை மூழ்கிவரப் பணித்தார்.

கங்கைநதியில் மூழ்கி எழுந்தவுடன் பார்வதியின் மேனி பழைய நிலையை அடைந்தது. இவ்வாறு இவள் கங்கையில் மூழ்கி ஒளி பெற்றமையால் இவள் கௌரி என்று அழைக்கப்பட்டாள்.

நவராத்திரிகளின் எட்டாவது இரவு இவளுக்குச் சொந்தமானதாகும். அன்றைய தினம் இவளை பூஜிக்கும் பெண்களுக்கு மாங்கல்ய பாக்கியம் அருளுவதாக நம்பப்படுகின்றது.

இந்த எட்டாம் நாள் நவராத்திரி விழா காசியில் உள்ள புகழ் பெற்ற அன்ன பூரணி அம்மன் ஆலயத்தில் சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றது. இவளையே மகா கௌரி துர்க்கையாக வழிபடுகின்றனர்.

## 14. சித்தார்த்திரி துர்க்கை

சித்தர்கள், கந்தர்வர்கள், யட்சர்கள். அசுரர்கள், தேவர்கள் ஆகியோரால் வணங்கப்படுகின்றவளும் சகல சித்திகளை அளிப்பவளுமான துர்க்கையின் ஒன்பதாவது வடிவமே இந்த சித்தார்த்திரி துர்க்கையாகும். இவளை சித்தி தாயினி துர்க்கை என்றும் நூல்கள் குறிப்பிடுகின்றன.

மார்கண்டேய புராணத்தின்படி இவள் அஷ்டமா சித்திகளையும் அளிக்க வல்லவள் என்றும், பிரம்ம வைவத்த புராணத்தின்படி பதினெட்டு சித்திகளையும் அளிக்க வல்லவள் என்றும் குறிப்பிடப் பெறுகின்றாள். எப்படியாயினும் இவள் சித்திகளை அருளக்கூடியவள் என்பது மட்டும் உண்மை. தேவிபுராணத்தின்படி பகவான் சிவபெருமான் இவளுடைய கருணையினால்தான் அனைத்து சித்திகளையும் பெற்றதாகத் தெரிகிறது.

அஷ்டமா சித்திகளாவன

1. அணிமா சித்தி
2. மகிமா சித்தி
3. கரிமா சித்தி
4. லகிமா சித்தி
5. பிராப்தி சித்தி
6. பிராகாமிய சித்தி
7. ஈசித்துவ சித்தி
8. வசித்துவ சித்தி

ஆகியவவைகளாகும்.

பதினென் சித்திகளாவன

1. அணிமா
2. மகிமா
3. லகிமா
4. பிராப்தி
5. பிரசாம்ய
6. ஈசத்துவ
7. சர்வகாம வசாயுதா
8. சர்வஒத்துவ
9. தூர்ஸ்வன்
10. பரகாய பிரவேசம்
11. வாக்கு சித்தி
12. கல்பவிருக்ஷத்துவம்
13. சிருஷ்டி
14. சம்ஹார கரண சாமர்த்திய
15. அமரத்துவ
16 சர்வஞாய தத்துவ
17. பாவன
18. சித்தி

ஆகியவைகளாகும்.

இந்த சித்தாத்திரி தேவியே நவராத்திரி பூஜையின் ஒன்பதாம் நாளுக்கு உரியவளாவாள்.

நான்கு கரத்தவளான இவள் சங்கு சக்கரதாரிணியாகவும் கதாயுதம் தாமரை மலர் கைகள் ஏந்தி முத்தாரமும் மணிமுடியும் தாங்கி தாமரை ஆசனத்தில் அமர்ந்தவளாய் காட்சியளிக்கின்றாள். சில நூல்களில் இவளது வாகனமான சிங்கத்தின் மீது அமர்ந்த வண்ணம் காட்சியளிப்பவளாகவும் சித்தரிக்கப் பட்டுள்ளது.

இவளை தேவர், அசுரர், வேதியர், அரசர், யோகியர் ஞானியர் ஆகியோர் தொழுத வண்ணம் காட்சி தருகின்றாள்.

இந்த சித்தேசுவரி அல்லது சித்திமாதா எனப்படும் சித்தாத்திரி துர்க்கை ஆலயம் சித்தாத்திரி சங்கடா கோயிலுக்கு அருகேயுள்ளது. கோயிலின் ஒரு மாடத்தில் உள்ள இந்த சித்தி மாதாவின் சிற்பத்திற்குக் கீழே வெள்ளித் தொட்டிலில் சிவலிங்கம் ஒன்றும் காணப்படுகிறது. நவராத்திரியின் இறுதி நாளான ஒன்பதாம் நாள் விழா இங்கு வெகு சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது.

## 15. குமாரி பூஜையில் – நவதுர்க்கை

பிரபஞ்சசாரம் என்ற காவியத்தில் குமாரி பூஜையில் துர்க்கையின் ஒன்பது வடிவங்கள் வித்தியாசமான நிலைகளில் கூறப்படுகின்றது.

1. குமாரீ
2. திரிமூர்த்தி
3. கல்யாணி
4. ரோகிணி
5. காளிகா
6. சண்டிகா
7. சாம்பவீ
8. துர்கா
9. சுபத்ரா

என்ற பெயரில் நவதுர்க்கைகளின் வடிவங்கள் குறிப்பிடப் படுகின்றன.

## 16. காரண ஆகமத்தில் – நவதுர்க்கை

காரண ஆகமத்தில் துர்க்கையானவள் கீழ்வரும் ஒன்பது தோற்றங்கள் கொண்டவளாக வருணிக்கப்படுகின்றாள்.

1. ருத்ரா
2. சண்டா
3. சசீ
4. சைலா
5. சண்டி
6. குரூரா
7. அனுகண்டா
8. நவமீ
9. உக்ராசண்டி

என நவ துர்க்கைகளின் வடிவங்கள் பூஜைக்குரியனவாக சுட்டப்படுகின்றன.

## 17. கந்த யாமளம் கூறும் நவ துர்க்கை

சிவனின் மைந்தனான கந்தனின் பெருமைகளை விளக்கும் ஸ்கந்த புராணம் பின்வரும் நவ துர்க்கைகளின் பெயர்களைத் தருகின்றது.

1. திரிபுரா
2. கோலாம்பா
3. கபோலேசி
4. சுவர்ணக்ஷீ
5. சசிகலா
6. திரைலோக்யா
7. விஜயா
8. ஏகவீரா
9. ஹரசித்தி அல்லது சாமுண்டா

ஆகிய வடிவங்கள் அறிமுகப்படுத்தப்படுகின்றன.

இந்த நவ துர்க்கை வடிவங்கள் பல மந்திரசாஸ்திர நூல்களில் பலவிதமாகக் காட்சியளித்தாலும் துர்க்கையைப் பற்றிய கருத்து பொதுவானதாகத்தான் இருக்கிறது.

இந்த நவதுர்க்கைகளைப் போற்றி வழிபடுவர்களுக்கு பயம், பிணி, துக்கம் ஆகியவை அகன்று சாந்தி கிடைக்கும் சம்சார சாகரத்திலிருந்து பக்தர்களையும் உபாசகர்களையும் இந்த நவதுர்க்கைகள் கரையேற்றி காப்பாற்றுவதாகப் புராணங்கள் கூறுகின்றன.

## 18. தசதுர்க்கை

இந்த நவதுர்க்கை எண்ணிக்கையை பத்தாக உயர்த்துகிறது தேவி பாகவதம். ஆதிபராசக்தியின் கைகளிலிருந்தும், கண்களிலிருந்தும், வியர்வையிலிருந்தும் பத்து துர்க்கைகள் உண்டானதாக தேவி பாகவதம் குறிப்பிடுகின்றது.

1. வரேண்யா
2. வரதா
3. வரிஷ்டா
4. வரவரிணினீ
5. கரிஷ்டா
6. வராமோகா
7. நீல ஜங்கா
8. சந்தியா
9. போகமோக்ஷதா
10. உக்ரா சண்டா

போர்க்களத்தில் தனக்கு உதவி புரிவதற்காக இந்த துர்க்கைகள் உருவாக்கப்பட்டன என்றும், இந்த துர்க்கைகளுக்கு எட்டுத் திருக்கரங்களும், கரிய திருமேனிகளும் கோரைப்பற்களும் கொண்டவர்களாக சித்தரிக்கப்படுகின்றாள்.

இந்த வரையறைக்குள் கொண்டு வரப்படாத சில துர்க்கை வடிவங்களும் சில நூல்கள் தென்படுவதாக ஸ்ரீ துர்கா ப்ரபாவம் குறிப்பிடுகின்றது.

நாற்கரங்களுடன் கூடிய நீல கண்டி துர்க்கை, அனல் கக்கும் நான்கு கண்களை உடைய பறவை வடிவிலான பட்சி துர்க்கை, மூன்று கண்களையும் திருமுடியில் சந்திரனை அணிந்த விந்தியா வாசினீ துர்க்கை, வெற்றியை எளிதில் அளிக்க வல்ல ஜெய துர்க்கை, மலைக்குகைகளில் உறையும் கிரிதுர்க்கை, செல்வத்தைத் தரும் கனக துர்க்கை, வெற்றியை மறக்காமல் தரும் விஜய. துர்க்கை. எத்தகைய திருஷ்டிகளையும் போக்கவல்ல திருஷ்டி துர்க்கை போன்ற பலவகை துர்க்கை வடிவங்களையும் ஸ்ரீ துர்க்கா ப்ரபாவம் குறிப்பிடுவதுடன் இவை பற்றிய வடிவங்களையும், பெருமைகளையும் உபாசகர்கள் மூலம் அறிந்து கொள்ளுமாறு கூறப்படுகின்றது.



# 8. துர்க்கை வழிபாடு

துர்க்கை வழிபாடு வட இந்தியாவில் இராமாயணம், மகாபாரதம் நிகழ்ந்த காலந்தொட்டே இருந்து வந்துள்ளதை அந்த மகா காவியங்களில் கூறப்பட்டுள்ள நிகழ்வுகளைக் கொண்டு தெரியலாம்.

ஸ்ரீராமன் சீதையை விட்டுப்பிரிந்து கிஷ்கிந்தை வந்து சுக்ரீவனிடம் நட்புக் கொண்டு வாலி வதம் செய்து, சுக்ரீவனுக்குப் பட்டாபிஷேகம் செய்து வைத்த பின்னர் மழைக்காலம் தொடங்கியதால் இராம லட்சுமணர்கள் இருவரும் மால்யவான் மலையில் தங்கியிருந்தனர். அப்போது நாரதர் ஸ்ரீராமனிடம் வந்து தேவி மகிமையை உபதேசித்து அவரே குருவாய் இருந்து நவராத்திரி பூஜை செய்வித்தார். ஒன்பது இரவுகளும் கண்விழித்து துர்க்கையை வழிபட்டார்.

பிரதமை முதல் தொடங்கப்பட்ட இந்த ஒன்பது இரவு பூஜையில் உள்ளம் மகிழ்ந்த பராசக்தி அஷ்டமி தினத்தன்று நள்ளிரவில் அந்த மலையினுச்சியில் சிம்ம வாகனத்தில் ஸ்ரீராமனுக்குத் தரிசனம் தந்தாள்.

இராமா! நீ செய்த இந்த பூஜையிலும் விரதத்திலும் நான் மகிழ்ந்தேன். உனக்கு வேண்டுவனவற்றைக் கேட்பாயாக. முன்னொரு காலத்தில் நீ மச்சமாகப் பிறந்து கரேனான அரக்கனையழித்து, வேதங்களைக் காத்தாய். கூர்ம அவதாரம் எடுத்து, மந்திர கிரியைத் தூக்கி மத்தாக நாட்டித் தேவர்களைக் காத்தாய். வராக அவதாரம் எடுத்து கோர தந்தத்தால் பூமியைத் தூக்கி நிறுத்தி வைத்தாய். நரசிம்மமாக வெளிப்பட்டு, இரணியனைக் கொன்று உன் பக்தனான பிரகலாதனைக் காத்தாய், இந்திரனுக்குச் சகோதரனாகித் தேவர்களுக்கு நன்மை செய்வதற்காக, வாமனாவதாரம்

எடுத்து மகாபலிச்சக்கரவர்த்தியைப் பாதாளத்தில் அழுத்தி அடக்கினாய். ஜமதக்னி முனிவருக்கு பரசுராமராய்ப் பிறந்து சத்திரியர்களின் பூமியையெல்லாம் காசிப முனிவருக்குத் தானமாகக் கொடுத்தாய், இப்பொழுது தசரதனுக்கு மகனாகப் பிறந்து இராவணனை அழிக்கப்போகிறாய்.

நீ விஷ்ணுவின் அம்சமாக வந்தது போல் இந்த வானரக்கூட்டங்களும் தேவர்களின் அம்சமேயாவார்கள். உனக்கு உதவியாக இருக்க என்னுடைய சக்தியம்சத்தை வழங்குகிறேன். உன் தம்பி லட்சுமணன் ஆதிசேஷனின் அம்சமாகையால் அவன் இந்திஜித்தையும், நீ இராவணனையும் வசந்த காலத்தில் வென்று, சுகமாய் அயோத்திக்குச் சென்று, அநேக ஆண்டுகள் அரசாட்சி செய்து, பரமபதத்தை அடைவாய் என்று அருளினார்.

இராமனும் அகமகிழ்ந்து நவராத்திரி விரதத்தைப் பூர்த்தி செய்து, அநேக தான தர்மங்களை வழங்கினார். நாரதரைப் பணிந்து அவருக்கு நன்றி கூறினார். நாரதரும் மகிழ்ந்து இராமா! உனக்கு வெற்றியும் மங்களமும் உண்டாகட்டும் என்று ஆசி கூறிச் சென்றார்.

இராமனும் விஜயதசமியன்று பயணப்பட்டு தம்பி லட்சுமணனுடனும் வானர சேனைகளுடனும் கடற் கரையையடைந்து சேது பந்தனம் செய்து, இலங்கைக்குச் சென்றார். இராவணனை அழித்துவிட்டு சீதையைச் சிறைமீட்டு அயோத்தியை மகிழ்ச்சியாக அரசாண்டார்.

## I. சத்ருக்கனனுக்கு உதவிய லவன துர்க்கை

காளிந்தி நதியின் ஒரு மணல் திட்டில் ஒரு விசாலமான மதுக்காடு இருந்தது. அந்தக் காட்டில் லவனன் என்னும் அசுரன் அரசாண்டு வந்தான். அவன் மதுகைடபர் என்ற அசுரர்களில் மதுவின் மகன்.

தான் பெற்ற அரிய வரங்களால் அகங்காரம் கொண்டு, முனிவர்களுக்குத் தீங்கு செய்து வந்தான். வனவாசத்தின் போது இராமன் அங்கு வரவே இராமனிடம் முனிவர்கள் தங்கள் குறைகளைச் சொல்லித் தங்களைக் காத்தருளும்படி வேண்டினர். சீதையின் பிரிவால் மனம் கலங்கியிருந்த இராமன் இலட்சமணனைப் பார்த்தான்.

தன் தமையனை ஒரு போதும் பிரிந்திருக்க விரும்பாத இலட்சுமணன் தன் தம்பியான சத்ருக்கனனைப் பார்த்தான். தன் தமையன்மார்களின் உள்ளக்குறிப்பை அறிந்து கொண்ட சத்ருக்கனன்தானே லவனனை சம்காரம் செய்வதாகக் கூறி காட்டினுள் சென்றான்.

காட்டினுள் போருக்கு வெற்றியளிக்கும் துர்க்கா. தேவியைப் பூஜித்து அவளது ஆசியுடன் லவனனை சத்ருக்கனன் போரிட்டு அழித்தான். லவனாசுரனை அழிப்பதற்காக சத்ருக்கனுக்கு அருள் புரிந்த துர்க்கை லவனதுர்க்கை எனப் பெயர் பெற்றாள்.

அசுரனைப் போரிலே வென்று சத்ருக்னன் அந்த மதுக்காட்டை ஒரு பட்டினமாக்கி மதுராபுரி என்று அதற்குப் பெயரிட்டு, தன் இரு புதல்வர்களையும் அங்கு அரசாள வைத்து தன் தமையனின் விருப்பப்படி நாடு திரும்பினான்.

## 2. ஸ்ரீகிருஷ்ணரைக் காப்பாற்றிய துர்க்கை

சத்ருக்கனன் வாரிசுகள் மதுராபுரியை ஆண்டுவரும் காலத்தில் உக்கிரசேனனுக்குப்பின் மணிமுடி சூடிய கம்சன் மதுராபுரி தலைவனானான். அவனது தங்கை வாசுகி. தன் தங்கையிடத்து மிகுந்த பாசம் கொண்டருந்த கம்சன் யாதவத்தலைவனான வாசு தேவருக்குத் திருமணத்தை நடத்தி வைத்தான். அப்போது வானிலே, ஓ கம்சனே! இந்த தேவகியின் எட்டாவது கர்ப்பத்தில் பிறக்கும் குழந்தை உன்னைக் கொல்லப் போகிறது என்று ஒரு அசரீரி எழுந்தது.

இந்த வானொலியில் மனம் குழம்பிய கம்சனை நாரதர் மனம் தேற்றி தேவகிக்குப் பிறக்கும் குழந்தைகளை அழித்து விட்டால் நீ மரணத்தை வெல்லலாமல்லவா என்று ஆலோசனை கூறி தேவகியையும், வாசு தேவரையும் சிறையிலடைக்கச் செய்தார்.

நாரதர் கூறிய யோசனையின்படியே வாசுதேவருக்கும் தேவகிக்கும் பிறந்த ஏழு குழந்தைகளையும் கொன்றொழித்தான் கம்சன்.

எட்டாவது ஜனனன் ஸ்ரீ கிருஷ்ணர் கம்சனை அழிக்கும் சத்ரு. விடுவானா கம்சன். சிறைக்காவல்கள் கடுமை யாக்கப்பட்டன. சிரவண மாத கிருஷ்ண பட்ச அஷ்டமி திதியில் ரோகிணி நட்சத்திரத்தில் எட்டாவது குழந்தை ஜனனம். தேவகி கவலையுடன் வாசுதேவருக்குக் கூறுகின்றாள்.

நாயகரே நந்த கோபனின் மனைவியான யசோதை என்னிடம் வந்து, உனக்கு எட்டாவது குழந்தை பிறந்தவுடன் அதை என்னிடம் அனுப்பிவிடு. அந்தப் பிள்ளையை நான் பாதுகாக்கிறேன், நீ ஒன்றும் கவலைப்படாதே. கம்சனுக்கு நம்பிக்கை உண்டாவதற்கு உனக்கு வேறொரு குழந்யைக் கொடுக்கிறேன் என்று சொல்லிவிட்டுப் போயிருக்கிறாள். இப்போது எனக்குப் பிறக்கும் குழந்தையை நீங்கள் எப்படி அவளிடம் கொண்டு போய் சேர்க்கப் போகிறீர்கள் என்றாள்.

அப்பொழுது பிரசவ வலி ஏற்பட்டதால் மேற்கொண்டு பேசமுடியவில்லை. கிருஷ்ணன் குழந்தை வடிவில் அந்தச் சிறை கூடத்தில் அவதரித்தார்.

அந்த நேரத்தில் ஒரு வானொலி எழுந்தது. வாசு தேவனே! நீ எதற்கும் பயப்பட வேண்டாம். காவற்காரர்கள் என்னால் கவரப்பட்டு உறங்குகின்றனர். இந்தச் சிறைச்சாலையின் பூட்டுகளும் கதவுகளும் திறக்கப்பட்டுக் கிடக்கின்றன. ஆகையால் நீ இப்போதே உன் குழந்தையை

எடுத்துக் கொண்டு வெகு விரைவாகக் கோகுலத்திற்குப் போ. அங்கு நந்த கோபன் வீட்டில் அவனது மனைவி யசோதையின் அருகில் இந்தக் குழந்தையை விட்டு விடு, அங்கே யசோதைக்குப் பிறந்துள்ள பெண் குழந்தையை எடுத்துக் கொண்டு இங்கே வந்து உன் மனைவியின் அருகில் விடு என்று கூறியது.

அதைக் கேட்டதும் வாசுதேவர் மகிழ்ந்தார். குழந்தையை வாரியெடுத்தார். கதவுகளும் பூட்டுகளும் திறந்திருப்பதைக் கண்டார். உடனே அவர் குழந்தையைத் தூக்கிக் கொண்டு காவலாளிகள் கண்விழித்து எழுந்திருப்பதற்கு முன்னதாகச் சிறைக்கு வெளியே வந்து யமுனை நதி வழியாகப் போனார்.

அப்போது வெள்ளப் பெருக்காக இருந்த யமுனை நதியைக் கடக்கத் தயங்கினார். ஆனால் நதியின் வெள்ளம் அடங்கி இவருடைய இடுப்பளவிற்கு வழிவிட்டது. அவர் நதியைத் தாண்டி, மனித நடமாட்டமற்ற வழியாக நந்த கோபனின் வீட்டிற்குப் போய், பசு முற்றத்திலுள்ள பசுக்களைப் பார்த்துக் கொண்டிருந்ததார்.

அந்த நேரத்தில் யசோதைக்கு ஒரு பெண் குழந்தை பிறந்தது. யசோதை ஒரு வேலைக்காரியைப் போல வேடமிட்டு வெளியே வந்து அவள் பெற்ற அந்தப் பெண் குழந்தையை வாசுதேவரிடம் கொடுத்து அவரிடமிருந்த ஆண் குழந்தையை வாங்கிக் கொண்டு அவரை அனுப்பி வைத்தாள்.

வாசுதேவர் அந்தப் பெண்குழந்தையை எடுத்துக் கொண்டு விரைவில் சிறைச்சாலைக்குத் திரும்பினார். குழந்தையைத் தேவகியின் கையில் கொடுத்துவிட்டு இனி என்ன நடக்கப் போகிறதோ என்ற பயத்துடன் காத்திருந்தார்.

குழந்தை வீறிட்டு அழுதது. அந்தக் குரலை கேட்டவுடன் சிறைக் காவலர்கள் கண்விழித்தார்கள்.

உடனே காவலர்கள் கம்சனிடம் ஒடிச் சென்று குழந்தை பிறந்து விட்டது என்று அறிவித்தார்கள். கம்சன் வெகு வேகமாகச் சிறைச் சாலைக்கு ஓடிவந்தான். அவனது மரணத்தை நிச்சயித்த குழந்தையல்லவா?

அவன் வாசுதேவரை அழைத்து, இந்த எட்டாவது குழந்தைதானே விஷ்ணுவின் அம்சம். அதை என்னிடம் கொண்டு வந்த கொடும் என்று சொன்னான். வாசுதேவர் அந்தப் பெண் குழந்தையை வெகுவேகமாக எடுத்துக் கொண்டு வந்து கம்சனிடம் அழுகின்ற பாவணையோடு கொடுத்தார்.

கம்சன் அந்தப் பெண் குழந்தையைப் பார்த்ததும் ஆகா இதென்ன ஆச்சரியம், பெண்ணா பிறந்தது தேவகிக்கு. ஆண் குழந்தையன்றோ பிறக்க வேண்டும், அசீரீரி வாக்கும் நாரதர் வாக்கும் எப்படிப் பொய்த்தன என்று திகைத்தான். ஒரு வேளை வாசு தேவர் குழந்தையை மாற்றியிருப்பாரோ என்று எண்ணினான். சிறைக் காவலர்கள் திறம்படக் காவல்புரியும் போது அவரால் மாற்ற முடியாது என்ற முடிவுக்கு வந்தான்.

காவலர்களிடம் தீர விசாரித்தான். பிறந்தது இந்தப் பெண் குழந்தைதான் என்ற முடிவுக்கு வந்தான். அந்தக் குழந்தையை அவன் வாசுதேவரிடமிருந்து வாங்கி, அதன் கால்களைப் பிடித்து, சிறிதும் இரக்கமின்றி ஓங்கி ஒரு கற்பாறையில் அறைந்தான். அப்போது அந்தப் பெண் குழந்தை அவன் கையிலிருந்த நழுவி ஆகாயத்திற்கு எழும்பிச் சென்று தன் உண்மை வடிவமான துர்க்கை வடிவுடன் தோன்றி கம்சனை நோக்கி,

கம்சனே, நீ என்னைக் கொலை செய்யத் துணிந்தாயே, என்னைக் கொன்றால் மட்டும் நீ மரணம் அடையமலிருக்க முடியுமா, அதனால் மரணம் வருவதோடு உனக்குப் பாவமும் வந்து சேர்ந்திருக்கும், நான் உன்னால் கொல்லப் படுபவளுமல்ல, நீ என்னால் கொல்லப்படுபவனுமல்ல,

உன்னைக் கொல்வோன் வேறொருவன். அவன் ஒருவராலும் வெல்ல முடியாதவன், மரணத்தை நினைத்துப் பயந்திருக்கும் உனக்கு அவன் சிறிதும் பயப்படாமல் மரணத்தை ஏற்படுத்துவான், மனிதர்களில் கீழான உனக்கு அவனே மரணத்தை உண்டாக்கும் பகைவன் என்று தெரிந்து கொள் என்று இனிய குரலில் யாவரும் கேட்கப் பேசிவிட்டு மறைந்தது.

இந்தப் புராண கதையில் ஏழு குழந்தைகளை இழந்து எட்டாவது குழந்தையின் வரவுக்காகக் காத்திருந்த வாசு தேவர் வருத்தத்துடன் ரகசியமாக கர்கரை அழைத்து அவரிடம் பகவானே எனக்கு உயிருடன் இருக்கும் புத்திரன் வேண்டும். அதற்கு உபாயமளியுங்கள் என்று வேண்டினார். கர்காசார்யாரும் வாசு தேவருக்காக நவராத்திரி விரதமிருந்து துர்க்கா தேவியை வழிபட்டார்.

அதனால் கிருஷ்ணன் பிறந்தவுடன் வாசு தேவர் கோகுலத்தில் கிருஷ்ணனை விட்டு அதற்கு முன்பாகவே கிஷ்ணனைக் காப்பதற்கு அவதரித்திருந்த பெண் குழந்தையாய் காட்சி கொடுத்த துர்க்கா தேவியைக் கொண்டு வந்து கிருஷ்ணனுக்குப் பதிலாக வைத்தார்.

கம்சன் அந்தக் குழந்தையைக் கொல்ல வர அவளே ஆகாயத்தில் விந்திய வாசினி துர்க்கையாய் எட்டு ஆயுதங்களை எண் கரங்களிலும் ஏந்தி வெளிப்பட்டாள் என நாராயணியம் தெரிவிக்கின்றது.

கர்காசாரியார் செய்த துர்க்கா வழிபாட்டினால் துர்க்கையானவள் கிருஷ்ணனுடைய இடத்தில் அமர்ந்து அவனது உயிர் போகாமல் பாதுகாத்தாள் என்று கிருஷ்ணனின் லீலைகளைக் குறிப்பிடும் பாகவத நூல் கூறுகின்றது.

## 3. பாண்டவர்களைக் காத்த துர்க்கை

கௌரவர்கள் பாண்டவர்களுக்கு விதித்த நிபந்தனையின் படி பாண்டவர்கள் அஞ்ஞாத வாசம் செய்ய விராட நகருக்குள் செல்லும் போது தங்களை யாரும் அங்கு அறிந்து கொள்ளா திருக்க துர்க்கையை மனத்திற்குள் வேண்டிக் கொண்டே செல்கின்றனர்.

அவர்களின் வேண்டுதல்களை ஏற்று ஆபத்துகளிலிருந்து அவர்களைத் துர்க்கை காக்கிறாள். துர்க்கையின் அருளை முழுவதுமாக பாண்டவர்கள் பெற்ற காரணத்தால் விராட நகரில் உள்ளவர்களும், துரியோதனன் அனுப்பிய ஒற்றர்களும் கூட பஞ்ச பாண்டவர்களை அடையாளம் காண முடியாதிருந்தது. அவர்களும் தங்களின் அஞ்ஞாத வாசத்தை வெற்றிகரமாக முடித்தனர்.

## 4. அர்ச்சுனனுக்கு வெற்றியருளிய தேவி

மகாபாரத யுத்தம் தொடங்குகிறது. மாபெரும் வில்வித்தை வீரனான அர்ச்சுனனுக்குப் போரிடத் தயக்கம். அவனது தயக்கத்தைக் கண்ட ஸ்ரீ கிருஷ்ணர் அர்ச்சுனனை நோக்கி அர்ச்சுனா! நீ மனோ வாக்கு காயங்களால் சுத்தனாய் இருந்து கொண்டு, யுத்தக் களத்தின் முன்பாக நின்று உனது எதிரிகளுக்குத் தோல்வி ஏற்பட வேண்டும் என்று எண்ணி ஸ்ரீ துர்க்கா தேவியை வணங்குவாயாக என்றாள்.

அர்ச்சுனனும் கிருஷ்ணரின் சொல்படியே அன்னை துர்க்கையைத் துதிக்க, வெற்றியை அருளும் துர்க்கா தேவியும் அர்ச்சுனன் முன்பு தோன்றி, அர்ச்சுனா! நீ ஸ்ரீ நாராயனருடன் வந்த நரனாவாய், வெகு சீக்கிரத்தில் உன்னுடைய விரோதிகளை வெற்றி கொள்ளப் போகிறாய். உன்னைப் போரில் இந்திரனால் கூட வெல்ல முடியாது என்று வரமருளி மறைந்தாள்.

அர்ச்சுனனும் மகாபாரதப் போரில் வெற்றி பெற்றான்.

## 5. அனிருத்தன் வணங்கிய துர்க்கை

அனிருத்தன் ஸ்ரீ கிருஷ்ணரின் பேரன். அதாவது பிரத்யூம்னனின் மகன். இவனுக்கு சோணிதபுரத்திலுள்ள பாணாசுரன் மகளான உஷாவின் மீது காதல். உஷாவிற்கும் அனிருத்தன் மேல் கொள்ளை ஆசை. காணாமலே உருவான இந்த காதல் கனிந்து வளர்ந்தது.

இருவரும் ஒருவரை ஒருவர் காணத் துடித்தனர். பரமவிரோதிகளின் மக்களான இவர்கள் சந்தித்து உரையாடுவதென்பது எப்படி சாத்தியமாகும். உஷாவின் தோழியான சித்ரலேகா என்பவள் நாரதரை வேண்டி அவர் மூலமாக தர்மஸி வித்தையைக் கற்று அதனால் துவாரகையிலுள்ள அனிருத்தனை ஒருவருக்கும் தெரியாமல் கட்டிலுடன் சேர்த்து தூக்கிவந்து உஷையின் அந்தப்புரத்தில் சேர்க்கிறாள்.

காதலர் இருவரும் ஒருவரை ஒருவர் காண்கின்றனர். கருத்தொருமிக்கின்றனர். கந்தர்வமணமும் செய்து கொள்கின்றனர். கன்னிப் பெண்ணான தன் மகள் கர்ப்பவதியானதைக் கண்டு அதிர்ச்சியடைகிறான் பாணாசுரன். அவளின் கர்ப்பத்திற்கு யார் காரணம் என்று விசாரிக்கையில் அவனுக்கு உண்மை புரிகிறது. நயவஞ்சகத்தால் கிருஷ்ணனின் பேரன் தன் மகளைக் கெடுத்தது புரிகிறது. பாணாசுரன் அனிருத்தனைக் கொல்ல முற்படுகிறான்.

தன்னைக் கொல்ல வந்த வீரர்களை ஜெயித்து தப்பிவிடுகிறான் அனிருத்தன். அதனால் பாணசுரனே நேரில் வந்து அனிருத்தனுடன் சண்டை செய்து அவனைத் தனது நாகபாசத்தால் பிணைத்துவிடுகிறான்.

இக்கட்டான நிலையில் அகப்பட்டுக் கொண்ட அனிருத்தன் உஷையின் யோசனையின்படி நாகபாசத்திலிருந்து விடுபட ஸ்ரீ துர்க்கையைத் துதித்து அவளைச் சரணடைகிறான். துர்க்கா தேவியும் அவனுக்குக்

காட்சியளித்து அவனை நாகபாசத்தினின்றும் விடுவித்து அனிருத்தா கவலைப்படாதே, ஸ்ரீ கிருஷ்ணர் வந்து இங்கிருந்து உன்னை விடுவிப்பார் என்று கூறி மறைந்து விடுகிறாள்.

இப்படி மகாபாரதத்தில் மூன்று இடங்களில் ஸ்ரீ துர்க்கா தேவி வழிபடப் பெறுகின்றாள். ஆயினும் இவைகள் இடைக்காலத்தில் உரையாசிரியர்களால் சேர்க்கப்பட்டவை யாகவும் இருக்கக் கூடும்.

பண்டைய காலத்தில் இருந்த காளி வழிபாட்டின் எச்சமே இன்று துர்க்கை வழிபாடாகத் தொடர்ந்து கொண்டிருக்கிறது. புதை பொருட்களாய் ஆங்காங்கே கிடைக்கும் தனித்தனி துர்க்கை சிலைகளைக் கூர்ந்து நோக்கின் பண்டைகாலத்தில் காளியைத் தொடர்ந்து துர்க்கையையும் போர்த் தெய்வமாகவே மக்கள் வழிபட்டு வந்துள்ளமையை உணரலாம். துர்க்கை சிலைகளில் காணும் ஆயுதங்கள் சிரபலி கொடுக்கும் வீரர்கள் வடிவங்களால் இக்கருத்து வலுப்பெறுகிறது.

சங்கம் மருவிய காலத்தில் தோன்றிய இலக்கியங்களில் அங்கொன்றும் இங்கொன்றுமாகக் கிடைக்கும் ஆதாரங்களைக் கொண்டு துர்க்கை வழிபாடு பல்லவர் காலந்தொடங்கி செயல்பட்டதை ஒருவாறு யூகிக்க முடிகிறது. இன்றைய தமிழகத்தில் கிராமப்புரங்களில் நடைபெற்று வரும் முளைப்பாலி விழாவும், மதுக்கொடை விழாவும், நகரப்புரங்களில் கொண்டாடப்படும் நவராத்திரி விழாவும், அக்காலத்திய துர்க்கை பூஜையின் தொடர்ச்சி என்றும் கூறப்படுகிறது.

வளமை வழிபாடாகக் கருதப்படும் இந்த முளைப்பாரி மதுக்கொடை விழா கிராமப்புரங்களில் மட்டுமே கொண்டாடப்படுகிறது. இவ்விழாவின் போது திருமண நிகழ்வுகளும் நிகழ்த்தப்பெறுவதுண்டு.

விழாவுக்கு முதல் நாள் அய்யனாருக்கு மண்குதிரைகளைக் காணிக்கை செலுத்தி துர்க்கை அம்மனுக்கு முளை போட்டு முளைப்பாலிகை வளர்த்து காப்புக் கட்டி விழாவினைத் தொடங்குவர். அன்று அம்மனின் படத்தைத் துணியில் எழுதி கொடி ஏற்றுகின்றனர்.

இந்த விழாவில் மதுக்குடம் எடுப்பது முக்கிய நிகழ்ச்சி, அதற்காக யார் மதுக்குடம் தூக்குவது என்பதற்காக திருவுளச் சீட்டுப் போடப்படுகிறது. மதுக்குடம் முக்கிய நபர் ஒருவரின் வீட்டில் வைக்கப்படும். அது மது வீடு அல்லது செவ்வாய் வீடு என்று வழங்கப்படும். இந்த வீட்டில் கொடியேற்றிய நாளிலிருந்து மதுக்குடம் எடுக்கும் எட்டாம் நாள் அல்லது ஒன்பதாம் நாள் வரை தீபமேற்றி மதுக்குடத்திற்கு ஆராதனை நடைபெறும்.

திருவிழாக்களில் உலாவரும் உற்சவர் இந்த செவ்வாய் வீடு முன் நிறுத்தி சிறப்பு வழிபாடு செய்வர். உற்சவர் உற்சவசமயங்களில் காலையும் மாலையும் உலாவரும். உற்சவர் காலை 11 மணியளவில் செவ்வாய் வீட்டிற்குக் கொண்டுவரப்படும். சிறப்பு பூஜைகள் முடிந்தவுடன் மதுவெடுக்கும் மகளிரை நிற்கவைத்து அவர்கள் தலைகளில் மதுக்கலயங்களை வைத்துத் தலைமை மதுக்குடம் ஏந்துபவர் முன்பாக ஒருவர் சிறுபாத்திரத்தில் கறி ஏந்திவர மேளதாளம் முழங்க அம்பலம் நோக்கி அழைத்துவருவர்.

இந்த அம்பலமானது கோயிலுக்கு அருகில் அமைக்கப்படும். அம்பலத்தில் நாவல் மரக்கிளைகளின் பசுந்தழை கொண்டு குடிசை அமைத்து அதனுள் மண்ணைக் குழைத்து துர்க்கை உருவம் செய்து அதற்குப் புதுப்பானை புத்தரிசி கொண்டு வந்து பொங்கலிட்டு படைத்திருப்பர். மது எடுக்கும் மகளிரும் தெய்வ உருவம் ஏந்தியோரும் பச்சைக் குடிசையை மூன்று முறை வலம் வந்து வடக்குப் பார்த்து நிற்பர்.

பின்னர் சூலுடன் உள்ள வெள்ளாட்டைக் குடிசை முன் நிறுத்தி மஞ்சள் ஊற்றி, குறி சொன்ன பின் 12 மணியளவில் பலியிடுகிறார்கள். சில ஊர்களில் பகலில் ஆட்டைப் பலியிட்டு இரவில் மது பூசைக்குச் சூலாடு பலியிடுவது உண்டு. பின்னர் தெய்வம் பழையபடி கோயிலுக்கு எடுத்துச் செல்லப்படுகிறது. மகுக்குடம் ஏந்திய பெண்கள் மீண்டும் இரவு 11.00 மணியளவில் மது எடுக்கும் மகளிரும் உலாத் தெய்வமும் இங்கு வந்து கறி, சூல், சோறு ஆகியவற்றுடன் கோயிலுக்குள் செல்வர். பின் கருவறையில் விக்கிரகத்தை வைத்து முன் மண்டபத்தில் உணவு மதுக்கலையங்களை வைத்து உண்கலம் போட்டபின் ஆட்டுக் குட்டியைப் பலியிட்டு அதன் குருதியைச் சோற்றோடு கலந்து பிடி சோறு எறிவர். விளக்கினை ஏற்றி தலைமை மதுப்பெண்ணின் கையில் தந்து மது பெண்களைச் செவ்வாய் வீட்டிற்குத் திரும்ப அழைத்து வருவர்.

மது எடுக்கும் மகளிர் பொதுவாகப் பதினாறு பேர் எனலாம். தலைமை மது எடுப்பவரே கொற்றவை அல்லது துர்க்கையாகப் பாவிக்கப்படுவார். இவர் மாதவிலக்கு நின்றவராகவும் கணவருடன் சேர்ந்து வாழ்பவராகவும் இருக்க வேண்டும். ஒரு பெண்ணே பல ஆண்டுகள் மதுக்குடம் எடுக்கலாம்.

கரகமது எடுப்பவர் பத்து வயதிற்குட்பட்டவராக இருக்க வேண்டும். சில ஊர்களில் சற்று வேறுபாடுண்டு. மது எடுப்பதற்கு முளை போட்ட கருங்குறுவை நெல்லின் முளையைப் பிரித்துக் காயவைத்து இடித்து மாவாக்கி அத்துடன் அரிசியையும் சேர்த்துக் காய்ச்சிச் சாறு எடுத்து நூல் சுற்றிய கலயங்களில் ஊற்றித் தென்னம்பாளை சொருகி அதன் நுனியில் வெற்றிலை கட்டித் தொங்கவிடுவர் என்று இந்தக் கிராமப்புற துர்க்கை வழிபாட்டை ச. கிருஷ்ணமூர்த்தி தெரிவிக்கின்றார். ★

★ துர்க்கை வழிபாடும் சிற்பங்களும் பக்.178.

இந்த துர்க்கையின் வழிபாடு நகர்புறங்களில் நவராத்திரி விழாவாக இன்று பெருஞ்சிறப்பாகக் கொண்டாடப் படுகிறது.

## 6. நவராத்திரி விழா

நவராத்திரி விழா நாயக்கர் காலம் தொடங்கி வழக்கில் இருந்து வருகிறது. ஆயினும் இது சோழர் காலத்திலும் அரசு விழாவாகக் கொண்டாடப்பட்டதை புகழேந்திப் புலவர் கதையில் தோற்ற புலவர்களின் தலைகளை இரண்டிரண்டாக ஒட்டிப் போட்டு நவராத்திரி விழாவில் அவைகளை ஒட்டக் கூத்தர் வெட்டிப் போடுவது வழக்கம் என்னும் செய்தி வருகிறபடியால் சோழ வேந்தர்கள் இவ்விழாவை நடத்தியதாய் அறியலாம். மற்றபடி பண்டையத் தமிழிலக்கியங்களில் இவ்விழாவைப் பற்றிய குறிப்பே இல்லை.

இக்காலத்தில் இது கலைமகள் விழா என மாற்றியமைக்கப்பட்டிருக்கிறது. விஜய நகரத்தில் நவராத்திரி விழா ஒன்பது நாள்கள் கொண்டாடப்பட்ட பெருவிழாவாய் இருந்தது. இவ்விழாவின் போது சிற்றரசர்கள் வந்து பேரரசருக்குத் திறை செலுத்துவது வழக்கம்.

நவராத்திரிக் காலமான புரட்டாசியிற்றான் குடிகளிடமிருந்து வரிவசூலிக்கும் வழக்கம் இருந்தது. மதுரை நாயக்கர்கள் விஜய நகரத்தைப் பின்பற்றி மதுரையிலும் இவ்விழாவை நடத்தினார்கள்.

திருமலை நாயக்கர் நவராத்திரி விழாவைப் பெருஞ்சிறப்போடு ஒன்பது நாள்கள் நடத்தியதாய்த் தெரிகிறது. இவ்விழாவைப் பேரரசர்கள் அல்லாமல் மற்றைய சிற்றரசர் நடத்தக் கூடாது என்ற முறையும் நாயக்கர் காலத்தில் இருந்து வந்தது.

சேதுபதி செய்த பேருதவிக்காக திருமலை நாயக்கர் அவருக்குப் பொன்னும் பொருளும் பட்டமும் கொடுத்து அவரைப் பாராட்டிதோடு நவராத்திரி விழாவைத் தம்முடைய இராமநாதபுரத்தில் சிறப்பாகக் கொண்டாடும் உரிமையையும் அளித்தார் என்பதால் இந்தச் செய்திப் புலனாகிறது.

விஜய தசமியன்று வீரர்கள் பலவித விளையாட்டுக் களை நடத்துவார்கள். வீரவுணர்ச்சி ஊட்டி மக்களை வீரமுள்ளவர்களாகச் செய்வதற்கு இவ்விழா பயன்பட்டு வந்தது.

இந்த நவராத்திரி விழாவையும் விரதத்தைப் பற்றி தேவிபுராணம் மிக விளக்கமாக எடுத்துரைக்கிறது.

வருடத்தில் இரண்டு நவராத்திரி உண்டென்றும் சித்திரை மாத வளர்பிறைப் பிரதமை முதல் ஒன்பது நாட்கள் கொண்டாடுவது வசந்த நவராத்திரி என்றும், புரட்டாசி மாதத்தில் வளர்பிறை பிரதமை முதல் ஒன்பது நாட்கள் கொண்டாடப்படுவது. சாரதா நவராத்திரியென்றும் கூறப்படுகிறது.

வசந்த காலம், சரத் காலம் என்ற இரண்டு காலங்களும் யமனுடைய இரண்டு கோரைப் பற்களுக்கு ஒப்பானவை. அக்காலங்கள் மனித வர்க்கத்திற்குத் தெய்வத்தின் அருள் கிட்டாதவாறு தடை செய்து நோய்களை உண்டாக்கக் கூடியவை. இவ்வாறு பருவமாற்றங்கள் நிகழும் போது வெப்பத்தினாலும், தட்பத்தினாலும் தோன்றும் நோய்களிலிருந்து மக்களை அம்பிகை காப்பாற்றுவதற்குத் தேவியைப் பூஜிக்க வேண்டும் என்று கூறப்படுகிறது.

இந்த இரண்டு வித நவராத்திரிகளில் விஜய தசமியை உள்ளிட்ட புரட்டாசி மாதத்தில் வரும் சாரதா நவராத்திரியே பலரும் கொண்டாடப்படும் நவராத்திரியாக விளங்குகிறது.

இந்த நவராத்திரியின் முதல் மூன்று நாட்கள் துர்க்கைக்கும், அடுத்த மூன்று நாட்கள் லட்சுமிக்கும், கடைசி மூன்று நாட்கள் சரஸ்வதிக்கும் உரியது என்பார்கள். பத்தாவது நாளான விஜயதசமி அனைவருக்கும் மேலான ஆதிபராசக்திக்கு உரியதாகும்.

நவராத்திரி பூஜைக்குரிய திரவியங்களை அமாவாசையன்று சேகரித்துக்கொண்டு அன்றைய தினம் ஒரு வேளை உணவோடு உபவாசம் இருந்து, மறுநாள் பிரதமை முதல் பூஜையை ஆரம்பிக்க வேண்டும். அப்பூஜைக்குரிய மண்டப வேதிகைகளின் அளவுகளையும் அமைப்புகளையும் சிறப்பாக அமைக்க வேண்டும்.

இந்த வேதிகை மண்டபம் அமைக்கப்பட வேண்டிய இடம் சமதளமாகவும், பசுவின் கோமயத்தினால் மெழுகிச் செம்மண்ணிட்டதாகவும் இருக்க வேண்டும். நான்கு மூலைகளிலும் பதினாறு முழமுள்ள நான்கு தூண்களை நிறுத்தி, அவற்றில் தோரணங்கள் கட்ட வேண்டும். அதன் நடுவில் நான்கு முழ நீளமும் ஒரு முழம் உயரமுள்ள சமமான வேதிகை ஒன்றை அமைக்க வேண்டும்.

வேதிகையை அமைத்த பிறகு, பராசக்தி தேவியின் பூஜைக்குரிய மந்திரங்களையும் தத்வார்த்தங்களையும் உண்மையாக உணர்ந்தவர்களாகவும், ஆசாரசீலர்களாகவும், சாதுக்களாகவும், வேதமந்திரங்களை விதி முறையாகச் சொல்லத் தெரிந்தவர்களாகவுள்ள அந்தணர்கள் ஒன்பது பேர்களையாவது, அல்லது ஐந்து பேர், மூன்று பேர் என்றும் இவையும் சாத்தியப்படாத பட்சத்தில் ஒருவராகவும் இயன்றவரை அழைத்து முடிந்தவரை அவர்களுக்குப் பொன், பொருள், ஆடைகள் முதலியவற்றை வழங்கி, அவர்களை மகிழ்ச்சியுடன் வந்திருக்கச் செய்ய வேண்டும்.

பிரதமை முதல் சாஸ்திர முறைப்படி, அதிகாலையில் ஐந்து நாழிகைப்பொழுதில் எழுந்து, காலைக்கடன்களை

முடித்துக் கொண்டு, நதியிலாவது, கிணற்றிலாவது, வீட்டிலாவது குளித்து பூஜைக்காக நியமித்துக் கொண்ட அந்தணர்களோடு பூஜா மண்டபத்தினுள் சென்று, அவர்கள் வேதபாராயணஞ் செய்ய, வேதிகையின் மேல் வெண்பட்டு போர்த்திய சிங்காதனத்தை ஸ்தாபித்து, அதன் மீது சங்கு, சக்கரம், கதை, பத்மம் தரித்திருக்கும் நான்கு கரங்களுள்ள தேவியின் வடிவத்தையாவது பதினென் கரத்தையுடைய தேவியின் வடிவத்தையாவது சிறந்த ஆடைகள், ஆபரணங்கள், மலர்மாலைகள் ஆகியவற்றால் அலங்கரித்து எழுந்தருளச் செய்ய வேண்டும்.

பிறகு கும்ப பூஜைக்காக சிங்காதனத்தின் பக்கத்தில் கலசஸ்தானம் செய்து, அதில் புனித நீரை நிரப்பி தங்கம், இரத்தினம் முதலியவற்றையிட்டு மாவிலை முதலிய ஐவகைத் தளிர்களை மேலே வைத்து வேதமந்திரங்களால் மந்திரித்து, மங்கள வாத்தியங்கள் முழங்க, பூஜைப் பொருள்களைக் கொண்டு பூஜிக்க வேண்டும்.

அதன் பிறகு தாயே அம்பிகை சிறப்பான நவராத்திரி விரதத்தை நான் செய்கிறேன். யாதொரு தடங்களும் வராமல் துணைபுரிய வேண்டும். இந்த பூஜையை என் சக்திக்கு இயன்றவாறு செய்கிறேன் என்று தீர்மானித்துக் கொண்டு அகில், சந்தனம், பச்சைக் கற்பூரம், கஸ்தூரி முதலிய நறுமணப் பொருள்களாலும் வில்வ இலைகளாலும் தூப தீபங்களோடு மந்திர பூர்வமாகத் தேவியைப் பூஜீத்து, நவாரண பூஜை செய்து, பலவகைப் பழரசங்களால் அர்க்கியங் கொடுத்து. இளநீர், மாதுளை, மா, பலா, வாழை முதலிய கனிகளைப் படைத்து அன்போடு சாத நிவேதனம் செய்யவேண்டும்.

இந்த நவராத்திரி விரதம் இருப்பவர் இறைச்சியுண்பவராக இருந்தால் ஆடு, எருமை, பன்றி ஆகியவற்றைப் பலியிட்டு★, அதன் பின்னர்

★ தற்காலத்தில் இவ்வித உயிர்ப்பலிகள் பெரும்பாலும் நிறுத்தப்பட்டுவிட்டன

தஹாயார்த்தமாய் ஒரு முழ நீளமும், அகலமுள்ள திரி செய்ய வேண்டும்.

நவராத்திரி பூஜையை அநேகப் பொருட்களால், முன் சொன்ன விதத்தில் ஆடல் பாடல் வாத்தியங்களோடு மூன்று காலமும் சிறப்பாகச் செய்ய வேண்டும்.

நவராத்தியின் ஒன்பது நாட்களும் விரதமிருப்பவர்கள், உபவாசியாக இருந்து பூஜித்த பிறகே உணவருந்தி பஞ்சனை மற்றும் பாயில் படுக்காமல் தரையில் விரிப்புகளில் படுக்க வேண்டும். பிரதமைத் திதியில் ஹஸ்த நட்சத்திரம் கூடுமானால் அது உன்னதமான நாளாகும். அந்த நாளில் தேவி தன்னைப் பூஜித்தவருக்கு வேண்டியவற்றையெல்லாம் கொடுப்பாள் என்று சொல்வார்கள்.

தேவியை உத்தேசித்து பலி கொடுக்கப்படும் மிருகங்கள் சுவர்க்கத்தை அடைகின்றன. எதையும் தன் ஜீவனை முன்னிட்டுச் செய்தாலும் பாவம் விளையும் என்றும், தெய்வத்திற்கு அர்ப்பணம் செய்வதற்காக எதைச் செய்தாலும் அஃது புண்ணியத்தை விளைவிக்கும் என்றும் கூறப்பட்டுள்ளது.

கும்ப பூஜை முதல் ஹோம பூஜை வரை செய்ய வேண்டியவற்றையெல்லாம் செய்து முடித்த பிறகு, கன்னியர்களைப் பூஜிக்க வேண்டும். இந்த பூஜைக்குரிய கன்னியர்கள் நறுமணம் முதலியவற்றை அறியக் கூடியவர்களாய், இரண்டு வயதிலிருந்து பத்து வயதுள்ள கன்னிகைகளாவார்கள்.

இந்தக் கன்னியர்களுக்கு முறையே குமாரி, திருமூர்த்தி, கல்யாணி, ரோகிணி, காளி, சண்டிகா, சாம்பவி, துர்க்கா, சுபத்திரா என்று பெயர்கள். அந்தந்தப் பெயருடைய கன்னியை அந்தந்தப் பெயரால், ஸ்ரீரஸ்து, ஸ்ரீயுத்தம் என்ற சொற்களை முதலாகக் கொண்டுள்ள வேதமந்திரங்களால்

பூஜிக்க வேண்டும். அது அறியாதவர்கள் பீஜ மந்திரங்களால் பூஜிக்க வேண்டும்.

ஒரு வயதுள்ள பெண்ணும் பத்து வயதுக்கு மேற்பட்ட கன்னிகையும் பூஜைக்குத் தகுதியற்றவர்கள். இந்த ஒன்பது கன்னியரையும் தினம் ஒவ்வொரு கன்னிகையையாவது அல்லது முதல் நாள் ஒரு கன்னி, இரண்டாம் நாள் இருவர் என்று ஒவ்வொருநாளும் ஒவ்வொரு கன்னிகையை அதிகரித்து வரும்படியாகவாவது வரவழைத்துப் பூஜை செய்யலாம். இந்தக் கன்னி பூஜையைத் தன் செல்வவசதிக்கு ஏற்பச் சிறப்பாக செய்ய வேண்டும்.

முதல் நாள் குமாரியை

குமாரஸ்யச தத்வானி யாஸ்ருஜத்யபி லீலயா
காதீநபீச தேவாம்ஸ்தாத் குமாரீம் பூஜாயாம்யஹம்

என்று தியான சுலோகங்கள் சொல்லி பூஜிப்பதால் வறுமை நீக்கமும், பகைவர் வெற்றியும், ஆயுள் விருத்தியும், செல்வவளர்ச்சியும் ஏற்படும்.

இரண்டாம் நாள் திரிமூர்த்தியை

சாத்வாதிபிஸ்திரிமூர்த்தி யர்த்திரியா தௌர் ஹிநா
நாஸ்வரூபிணி

தரிகாலவ்யாபிநீ சக்தி ஸ்திரி மூர்த்திம் பூஜயாம்யஹாம் என்ற சுலோகம் சொல்லி பூஜிக்க வேண்டும்.

முன்றாம் நாள் கல்யாணியைப் பூஜிப்பதால், வித்தை வெற்றி, ராஜ்ய சுகம் உண்டாகும். அதற்கான சுலோகம்

கல்யாண காரிணீ நித்யம் பக்த்தானாம்
பூஜயா மிசதாம்பக்த்யா கல்யாணீம் ஸர்வகாமதாம்
நான்காம் நாள் தேவியை

ரோஹயந்தீச பீஜாநி பிராக்ஜன்ம ஸஞ்சிதாநிவ
யாதேவி ஸர்வ பூதானாம் ரோஹிணீம் பூஜயாம்யஹம் என்ற சுலோகம் சொல்லி பூஜித்தால் வியாதிகள் நிவர்த்தியாகும்.

ஐந்தாம் நாள் காளியை

காளீ காலயதே ஸர்வம் பிரஹ்மாண்டம் ஸசரசரம்
கல்பாந்த ஸமயேயாதாம் காளிகாம் பூஜயாம்யஹம்

என்ற தியான சுலோகம் சொல்லி பூஜிப்பதால் பகைவர்க்கு அழிவு உண்டாகும்.

ஆறாம் நாள் சண்டிகையை கீழ்காணும் தியான சுலோகம் சொல்லி பூஜிப்பதால் ஐஸ்வர்யம் உண்டாகும்.

சண்டிகாம் சண்டரூபாஞ்ச சண்ட முண்ட விநாஸிநீம்
தாம் சண்ட பாசஹரிணீம் சண்டிகாம் பூஜயாம்யஹம்
ஏழாம் நாள் சாம்பவி தேவியை

அகாரணாத் ஸ்முத்பத்திர் யஞ்மயை பரிகீத்திதா
யஸ்யாஸ்தாம் ஸுகதாந்தேவீம் ஸாம்பவீம்
பூஜயாம்யஹம்

என்ற சுலோகம் சொல்லி பூஜிப்பதால் போரில் வெற்றியும் கவலைக்கிடமான வறுமையின் நீக்கமும், ராஜசம் யோகமும் உண்டாகும்.

எட்டாம் நாள் துர்க்கை பூஜை. இந்த பூஜையின் போது

துர்க்காத்ராயதி பக்தம்யாஸதா துர்க்கார்த்த நாயினீ
துர்ஞ்ஞேயா ஸர்வதேவானம்தாம் துர்க்காம்
பூஜயாம்யஹம்

என்ற தியான சுலோகங்களை உபயோகித்து கொடிய பகைவர் நாசமடையவும் செய்ய முடியாதவற்றைச் செய்யக் கூடிய ஆற்றலும் பரலோக சுகத்தையும் அடையலாம்.

ஒன்பதாம் நாள் சுபத்திரையை

ஸுபத்திராணிச பக்தானாம் குருதே பூஜிதாஸதா
அபத்ர நாசிநீம் தேவீம் ஸுபத்ராம் பூஜபாம்யஹம்

என்ற சுலோகம் சொல்லி பூஜை செய்தால் மங்களங்களோடு மனோரதசித்தியும் கிடைக்கும் என்று நவராத்திரி பூஜையை தேவி புராணம் கூறுகிறது. மேலும் அது அங்க ஹீனமுடைய பெண்ணையும், தொழுநோய் பிடித்தவளையும்,

துர்நாற்றமுடையவளையும், புண்ணுள்ளவளையும், கட்டுப்பாடற்ற குலத்தில் பிறந்தவளையும், பிறவிக் குருடியையும் குரூபியையும், உடலெங்கும் முடிமுளைத் தவளையும், சிவந்த மலர்களை அணிந்தவளையும், குண்டகியையும், கோளகியையும் இந்தப் பூஜைகளில் இருந்து விலக்கி விட வேண்டும் என்று கூறுகிறது.

மேலும் ஒரே வமிசத்தில் பிறந்தவளாகவும், நோயற்றவளாகவும், நல்ல அழகுடையவளாகவும், அங்கலட்சணமுடையவளாகவும் இருக்கும் கன்னிகையே பூஜைக்குரியவள். எந்தவிதமான இஷ்ட சித்திக்கும் பிராமண கன்னிகையே சிறந்தவள்.

வெற்றியை விரும்புவோர் சத்திரிய கன்னிகையையும், இலாபத்தை விரும்புவோர் வைசிய கன்னிகையையும், சூத்திரகன்னிகையையும் பூஜித்தல் சிறப்பாகும். யார் யார் எதை விரும்புகிறார்களோ அதற்குரிய கன்னிகையைப் பூஜித்தல் வேண்டும். ஒவ்வோர் இனத்தவரும் அவரவர் இனத்தைச் சேர்ந்த கன்னிகையையோ அல்லது தன் இனத்திற்கு மேம்பட்ட இனத்துக் கன்னிகையையோ பூஜிக்க வேண்டும்.

இதில் குறிப்பிட்ட வரிசைபடிதான் நவராத்திரி அனுஷ்டிக்கப்பட வேண்டுமென்பதில்லை. நவராத்திரியில் முதல் மூன்று நாட்கள் துர்க்கையையும், அடுத்த மூன்று நாட்கள் லெட்சுமியையும் கடைசி மூன்று நாட்கள் சரஸ்வதியையும், பூஜித்து பத்தாவது நாளான விஜயதசமியில் ஆதிபராசக்தியைப் பூஜை செய்ய வேண்டுமென்று நியதி இருந்தும் கூட முதல்நாள் மகேஸ்வரி, இரண்டாம் நாள் கவுமாரி, மூன்றாம் நாள் வாராகி கன்யா, நான்காம் நாள் மகாலட்சுமி, ஐந்தாம் நாள் வைஷ்ணவி, ஆறாம் நாள் இந்திராணி, ஏழாம் நாள் மகா சரஸ்வதி, எட்டாம் நாள் நரசிம்மி, ஒன்பதாம் நாள் சாமுண்டி என்ற

வரிசைப்படியும் நவராத்திரியைக் கொண்டாடலாம். ஆனால் ஒன்பது இரவுகளும் தேவி பூஜைகளாக இருப்பதுதான் முக்கியம்.

ஒருவனுக்கு நவராத்திரி நாட்களில் நியமமாகப் பூஜை நடத்துவதற்குப் போதிய வசதி இல்லாமலிருந்தால் அவன் அஷ்டமி தினம் அவசியம் பூஜிக்க வேண்டும். ஏனென்றால் தட்சனின் யாகத்தை அழித்த பத்ரகாளியானவள் அநேக கோடி யோகினிகளோடு தோன்றிய தினமாகையால் அன்று பூஜைகளை விசேஷமாகச் செய்யவேண்டும். அதுமட்டுமல்ல கம்சனை அழிக்க கிருஷ்ணன் அவதரித்த அதே அஷ்டமி தினத்தன்றுதான் மகாமாயையான துர்க்கையும் நந்தகோபன் இல்லத்தில் அவதரித்தாள். ஆகவே துர்க்காஷ்டமி மிகுந்த விசேஷமுடையது.

சக்தியற்றவர்களாக இருப்போர் நவராத்திரி விரதத்தில் பூஜை செய்வதற்கு மிகவும் முக்கியமான நாட்கள் சப்தமி, அஷ்டமி, நவமி தினங்களாகும். இந்த மூன்று நாட்களும் உபவாசத்தோடு பூஜித்தால் ஒன்பது நாட்கள் பூஜித்த பலன் கிடைக்கும்.

நவராத்திரி விரதத்தை அனுஷ்டிப்பவர்கள் இம்மையிலும் மறுமையிலும் நற்பயனடைவார்கள். செந்நிறமுடைய சந்தனத்தில் தோய்த்த மெதுவான வில்வ இலைகளில் யார் ஒருவன் மகேஸ்வரியைப் பூஜிக்கிறானோ அவன் பூமியில் அரசனாக வாழ்ந்திருப்பான். இதற்கு பாகவதத்தில் கதை ஒன்றும் கூறப்படுகிறது.

கோசல தேசத்தில் சுசீலன் என்ற வைசியன் ஒருவன் மிகவும் ஏழையாக வறுமையில் வாடி வருந்திக் கொண்டிருந்தான். குழந்தைகள் நிறைந்த குடும்பத்தோடு துக்க சாகரத்தில் மூழ்கியிருந்தான்.

அவனது பிள்ளைகள் உணவு இல்லாமல் பசியால் வாடி வதங்கி அந்தி நேரங்களில் பிறரால் கிடைக்கும்

ஏதேனும் உணவைப் பெற்றுப் பசியாறி வந்தார்கள். சுசீலன் இவ்வளவு ஏழ்மையிலும் தருமம், நல்ல ஆசாரம், வாய்மை, கோபமின்மை, விரோதமின்மை, பொறாமையில்லாமை முதலிய நற்பண்புகளுடன் விளங்கி வந்தான்.

ஒரு நாள் சுசீலனும் அவனது குடும்பமும் உணவு ஒன்றும் கிடைக்காமல் பட்டினியால் தவித்து வாடியது. அந்தச் சமயத்தில் ஒரு பிராமணர் அங்கு வந்தார். அவரைக் கண்டதும் சுசீலன் அவரை வணங்கி, அந்தணரே இந்தத் தரித்திரம் என்னைவிட்டு எப்போது போகும்? அந்த உண்மையை எனக்குச் சொல்லும். ஆனாலும் நான் பணக்காரனாக இருக்க வேண்டும் என்று ஆசைப் பட்டவனல்ல! குடும்ப போஷனைக்கே பொருள் வேண்டுகிறேன்.

என் பிள்ளைகள் சாப்பிடுவதற்கு ஒன்றுமில்லையே என்று அழுகிறார்கள். ஒரு பெண் கல்யாண வயதை அடைந்திருக்கிறாள். எங்கள் குலத்தில் பத்து வயதுக்கு மேற்பட்டால் கல்யாணம் செய்ய யோக்கியதை இல்லை: காலமோ கடந்து போகிறது. ஆகையால் இந்தத் தரித்திரம் ஒழிய எந்தத் தவத்தையும் விரதத்தையும் நான் செய்யத் தயாராக இருக்கிறேன் என்றான்.

அதற்கு அந்தப் பிராமணர் சுசீலனே! நீ எந்தவிதத் தவமும் செய்ய வேண்டாம். மங்கள முதன்மையான நவராத்திரி விரதத்தை அனுஷ்டித்து, தேவி பூஜையும், ஹோமமும் பிராமண போஜனமும், தேவி மந்திர ஜபமும் அந்த ஜபம் சித்தியாவதற்கு ஹோமமும், தர்ப்பணமும் உன் சக்திக்கு இயன்றவாறு செய்தால் நீ வேண்டிய செல்வபாக்கியம் கிடைக்கும்.

முன்பு ஸ்ரீ ராமபிரான் இராஜ்யம் இழந்து, கிஷ்கிந்தையையடைந்து காமாக்கினியில் மகாதுக்கம் அடைந்திருந்த போது நவராத்திரி விரத்தை யனுஷ்டித்து,

விதிமுறையாகத் தேவியைப் பூஜித்து அவளுடைய அருளைப் பெற்று வீர மிகுந்தவராக சேது பந்தனஞ் செய்தார். பகைவர்கள் ராவணனையும் கும்பகர்ணனையும் அவர்களுடைய பிள்ளைகளையும் சங்காரித்து விபீடணனை ரட்சித்தார். அத்தகைய பயன் தருவது இந்த நவராத்திரி விரதமாகும் என்று கதையை முடித்தார் அந்தணர்.

சுசீலனும் அந்த அந்தணரையே தம் குருவாகக் கொண்டு தேவி மந்திரத்தை உபதேசம் பெற்று, நவராத்திரி பூஜையை முறைப்படிச் செய்து அதற்குரிய பயன்களைப் பெற்று தன் வறுமை நீங்கி சுபீட்சமான வாழ்வு வாழ்ந்தான் என்று கதை முடிகிறது.

நவராத்திரியின் பெருமையை விளக்க இன்னொரு கதையும் புராணங்களில் கூறப்படுகிறது.

கிருதாயுகத்தில் சுகேதன் என்ற மன்னன் இருந்தான். அவன் மனைவியின் பெயர் சுவேதினி. இவனது நல்லாட்சியால் நாடு சுபீட்சமாக இருப்பதைக் காணப் பெறாத அவனது பங்காளிகள் சமயம் பார்த்து நாட்டை அபகரித்து இருவரையும் ராஜ்யத்தை விட்டே துரத்தினர்.

சுவேதனும், சுவேதினியும் அடர்ந்த காட்டிற்குள் சென்று ஒளிந்து கொண்டனர். தன் பங்காளியின் சூழ்ச்சியினால் நாட்டை இழந்த சுவேதன் மனமொடிந்து வருந்தினான். அதனால் படுத்த படுக்கையுமானான். மன்னன் நிலை கண்ட அவனது மனைவி செய்வது அறியாது அழுது கொண்டிருந்தாள்.

அந்தக் காட்டில் தவம் செய்து கொண்டிருந்த ஆங்கீரஸ மகரிஷி அவ்வழியே வந்தார். நடுக்காட்டில் ஒரு பெண் தனியாக அழுது கொண்டிருப்பதும் அவளின் மடியில் தலைவைத்து ஆண் ஒருவன் படுத்தபடுக்கையாக இருப்பதையும் பார்த்த அவர் மனமிறங்கினார்.

சுகேதினி நடந்த விஷயங்களைக் கூறினார். தங்களை ஆசீர்வதித்து துன்பம் நீங்க வழிகாட்ட வேண்டும் என்று வேண்டினாள். மகரிஷி அவளை ஆசீர்வதித்து அவளது கோரிக்கையைக் கேட்டார். சுவேதினி தன்னுடைய கணவருக்குப் பூரணமாகக் குணமாகி மீண்டும் மன்னன் ஆக வேண்டும் என்றும், தனக்கு வாரிசுகள் யாரும் இல்லாததால் வாரிசாக ஒரு குழந்தை வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டாள்.

உடனே மகரிஷி பஞ்சவடி தீரத்தில் எழுந்தருளியிருக்கும் மகாதேவியைப் பயபக்தியுடன் விரதமிருந்து பூஜைகள் செய்து வணங்கில் இழந்த நாடும் குழந்தை பாக்கியமும் கிடைக்கும் என்றார். திரிசக்திகள் எனப்படும் மூன்று சக்திகளான துர்க்கா, லட்சுமி, சரஸ்வதி ஆகிய தேவிகளின் பூஜைகளைத் துவக்கி வைத்தார். இந்த பூஜைகள் புரட்டாசி மாதம் பிரதமை திதியில் ஆரம்பித்து நவமி திதி வரையில் 9 நாட்கள் நடந்தன.

முனிவரின் நவராத்திரி பூஜையில் கொஞ்சம் கொஞ்சமாகக் குணமடைந்த மன்னன் பத்தாவது நாளில் பரிபூரண்மாகத் தனது வியாதி நீங்கி சுகமடைந்தான்.

பத்தாவது நாள் அதிகாலையில் எழுந்து குளித்து உடை மாற்றி, பாயாசம், அன்னம் போன்றவற்றைத் தயாரித்து தேவியின் மந்திரங்களை உச்சரித்துக் கொண்டு துர்க்கை, லட்சுமி, சரஸ்வதி ஆகிய தெய்வங்களுக்கு ஹோமங்கள் நடத்தி தம்பதி பூஜை செய்து விரதம் முடித்தனர். இதன் பிறகு கணவனும் மனைவியும் ஆசிரமத்தில் உள்ள ஒரு குடிலில் தங்கி பூஜை செய்பவர்களுக்குத் தங்களால் இயன்ற உதவிகளைச் செய்து வந்தனர். இந்த பூஜையின் பயனாக சுவேதினி கர்ப்பம் தரித்து பத்தாவது மாதத்தில் அழகிய ஆண் குழந்தைக்குத் தாயானாள்.

சுவேதியின் மகனுக்கு ஆங்கீரஸ மகரிஷி, சூரியப் பிரதாபன் என்று பெயர் சூட்டினார்.

சூரியப் பிரதாபனுக்கு ஆங்கிரஸ மகரிஷி வில்வித்தை மற்றும் போர்முறைகளைக் கற்றுத் தந்தார். சகல சாஸ்திரங்களையும் அவனுக்குக் கற்றுத் தந்தார். சூரியப் பிரதாபனின் பதினெட்டாவது வயதில் அனைத்து வகையான கல்வி, போர் பயிற்சிகள் மற்றும் ராஜ தந்திரங்களையும் முற்றிலுமாகக் கற்றுத் தேர்ந்தான்.

பிறகு ஆங்கிரஸ மகரிஷியின் வாயிலாக தனது தாய் தந்தையர் ஏமாற்றம் அடைந்ததை அறிந்து தனது தந்தையின் பங்காளிகளுடன் போரிட்டு நாட்டை மீட்டான்.

நவராத்திரி பூஜை மகிமையால் சுகேதனுக்கு இழந்த அரச பதவி மீண்டும் கிடைத்தது. பிறகு மூவரும் ஆங்கிரஸ மகரிஷியை வணங்கி அவருடைய நல்லாசிகளுடன் மீண்டும் அரண்மனை வாசம் செய்து நல்லமுறையில் ஆண்டு வரலானான். அது முதல் சுவேதினி தொடர்ந்து நவராத்திரி காலங்களில் துர்க்கை, லட்சுமி, சரஸ்வதி ஆகிய தேவியரை பூஜித்தாள்.

இந்த நவராத்திரி விரதத்தை கன்யா பூஜை என்ற பெயரில் ஸ்ரீ துர்க்கா ப்ரபாவம் விவரிக்கின்றது. புரட்டாசி மாதத்திற்கு கன்யா மாதம் என்று பெயர். கன்யா மாதத்தில் கன்னியைப் பூஜிப்பது வழக்கமாக இருந்தது.

வளர்பிறை பிரதமை முதல் திருதியை வரை ருத்ரி(ரௌத்திரி) எனப்படும் துர்க்கையையும், சதுர்த்தி முதல் சஷ்டி வரை லட்சுமியையும், சப்தமி முதல் நவமி வரை சரஸ்வதியையும் பூஜித்து தேவி பராசக்தியின் வெற்றியை விஜய தசமியாகக் கொண்டாடுகின்றனர்.

கன்யா பூஜைக்குரிய அனைத்துப் பொருட்களையும் அமாவாசை தினத்திலேயே சேகரித்துக் கொள்ள வேண்டும். அமாவாசை அன்று ஒரு வேளை மட்டும் சாப்பிட்டு விரதம்

இருக்க வேண்டும், மறு நாள் பிரதமை அன்று பூஜையைத் தொடங்க வேண்டும்.

நான்கு முழ உயரமுள்ள மூன்று அடுக்கான மேடை போன்ற வேதிகையை அமைக்க வேண்டும். இந்த வேதிகையை அலங்கரித்த மண்டபத்தின் மையத்தில் வைக்க வேண்டும். அதில் சிம்மாசனம் இட வேண்டும். சதுர்வேதம் உணர்ந்த ஒன்பது, ஐந்து அல்லது மூவர் மண்டப பிரவேசம் செய்ய வேண்டும். சதுர்வேத முழக்கங்கள் செய்யப்பட வேண்டும், சங்கு, சக்கரம், பதுமம், கதை என்ற ஆயுதங்களுடன் கூடிய சதுர்புஜங்கள் அல்லது 18 கரங்கள் கொண்ட தேவியின் திருவடிவை ஸ்தாபிக்க வேண்டும்.

ஆபரணங்கள், மலர் மாலைகள், வஸ்திரங்கள் சார்த்த வேண்டும், கஸ்தூரி திலகமிட்டு பூரண அலங்காரம் செய்து வைக்க வேண்டும்.

சுத்திகரிக்கப்பட்ட கும்பங்களில் நூல் சுற்றி பின் அந்தக் கும்பங்களுக்கு அலங்காரம் செய்ய வேண்டும். மஞ்சள் குங்குமம் இட்டு கங்கை, யமுனை, சரஸ்வதி, கோதாவரி, நர்மதை, சிந்து, காவேரி ஆகிய ஏழு புண்ணிய நதிகளின் தீர்த்தமாக நினைத்து தண்ணீரை அதில் நிரப்பி மாவிலை முதலிய ஐந்து வகை தளிர்களை மேலே வைத்து தேங்காய்க்குத் திலகமிட்டு கும்பத்தின் மீது வைத்து மலர்களால் அலங்கரிக்க வேண்டும். பின்பு தீபம் காட்டி பூஜிக்க வேண்டும்.

இதன்பிறகு கன்னியர்களைப் பூஜிக்க வேண்டும். இரண்டு வயது முதல் பத்து வயதிற்குட்பட்ட சிறுமிகளைத் தேர்வு செய்து அலங்கரித்து, பிரதமை அன்று ஒரு கன்னியையும் அடுத்த நாள் இருவர் இப்படியே தொடர்ந்து அஷ்டமியில் எட்டு கன்னியரைப் பூஜிக்க வேண்டும். பருவம் எய்யாத கன்னியரையே இந்தப் பூஜையில் சேர்க்க வேண்டும்.

இந்தக் கன்யா பூஜையால் மங்களம் பெருகும். சகல செல்வங்களும் தானே வந்தடையும். பெண்களுக்குத் தைரியமும் வளரும்.

இந்தப் பூஜை முடிந்ததும் வீட்டிற்கு வரும் சுமங்கலிகளுக்கு மஞ்சள் குங்குமத்துடன் ஆடை ஒன்றும் தானமாகக் கொடுக்க வேண்டும். இதற்கும் கும்பம் அமைத்து துர்க்கையை வழிபட வேண்டும்.

அன்னை புவனேஸ்வரி துர்க்கையாய் அவதரித்து மகிஷனைவென்று வெற்றிசூடிய நாளே விஜய தசமி.

விஜயதசமியன்று விஷ்ணு கோயில்களில் வன்னி மரக்கிளையை வைத்து பெருமாளை எழுந்தருளச் செய்து பாணம் போடும் நிகழ்ச்சியை நடத்துகின்றார்.

## 7. கொலு விழா

புராணங்களில் கூறியபடி கோயிலில் நடத்துவதைவிட சில வீடுகளில் கொலுவைத்து இந்த நவராத்திரி விழாவைக் கொண்டாடுகின்றனர். காவிரிக் கடை மாவட்டங்களில் இந்தக் கொலு பூஜை மிகப் பிரபலமாக இருந்து வருகிறது.

இந்தக் கொலு பூஜை பொம்மைகளால் படிகளை அலங்கரிப்பது ஆகும். ஒவ்வொரு கொலுவும் ஐந்து அல்லது ஏழு அல்லது ஒன்பது ஆகிய படிகளைக் கொண்டது. அவரவர் வசதிக்குத் தகுந்தபடியான படிகளை அதிகரித்தோ குறைத்தோ அமைத்துக் கொள்ளலாம். இந்தப் படிகள் என்பது மனிதனின் படிப்படியான வாழ்க்கை நிலை அல்லது வளர்ச்சி நிலை என்று சொல்லுவார்கள்.

கொலு என்றால் அழகு என்று பொருள். தேவியானவள் பலவித வடிவங்களில் வீற்றிருக்கும் அழகு என்பது விளக்கம். இந்தப் பொம்மைக் கொலுவை 'சிவை ஜோடிப்பு' என்றும் குறிப்பிடுவர். 'சிவை' என்ற சக்தியின் அம்சம். பல

விதங்களில் அலங்கரிக்கப்படுகிறது என்பது இதன் பொருள்.

வீட்டில் கொலு வைப்பவர்கள் புரட்டாசியில் வரும் அமாவாசை தினத்தன்று கொலு வைத்து விட வேண்டும். கொலு வைப்பதற்கு முன்பு வீட்டைச் சுத்தமாக்கி, வர்ணக் கோலமிட்டு மேடை அமைத்து பொம்மைகளை அதனதன் வகைக்குத் தகுந்தவாறு வரிசைப்படுத்த வேண்டும்.

முதல் படியில் புல், செடி, கொடி, மரம் முதலிய தாவர வகை பொம்மைகள் அமைக்க வேண்டும். இயற்கையோடு இயைந்த வாழ்க்கையையும் உயிர் தோற்றத்தின் முதல் நிலையையும் இது குறிக்கிறது.

இரண்டாம்படியில் சங்கு வகை சிப்பி பொம்மைகளை வைக்க வேண்டும். நத்தை, ஆமை முதலிய பொம்மைகள் வைப்பது நலம் பயக்கும். வாழ்க்கையில் நிதானமாகச் சென்று உயர் நிலையை எட்ட வேண்டும் என்ற தத்துவம் உணர்த்தப்படுகிறது.

மூன்றாம்படியில் எறும்பு கரையான் புற்று பொம்மைகளை வைக்க வேண்டும். மனிதனின் விடாமுயற்சியைச் சித்தரிக்கும் இச்சிலைகள் திட சிந்தனையையும் தெளிவாக்குகின்றன.

நான்காம் படியில் நண்டு, வண்டு பொம்மைகள் பெரும்பாலும் இடம் பெறல் வேண்டும். இவற்றின் குணம் ஆழமாக ஊடுருவிப் பார்ப்பது எந்த விஷயத்தையும் ஆழமாகச் சிந்தித்து செயலாற்றுவதை இந்தப் பொம்மைகள் குறிக்கும்.

ஐந்தாம் படியில் மிருகங்கள், பறவைகள், பொம்மைகள் வைக்க வேண்டும். மிகை குணத்தைக் கைவிடல் வேண்டும் என்பது இதன் தத்துவம்.

ஆறாம் படியில் மனிதப் பொம்மைகள் வைக்க வேண்டும். இஃது மனித நிலையின் ம்முழுமையை உணர்த்தும். ஐந்து படிகளில் உள்ளது போன்ற குணங்களைக்

கடைபிடித்தால் முழு மனிதன் என்ற அந்தஸ்தைப் பெறலாம்.

ஏழாவது படியில் முனிவர்கள், மகான்கள் பொம்மைகளை வைக்க வேண்டும். மனிதன் உயரிய பக்தி மார்க்கத்தைக் கடைபிடித்தல் வேண்டும் என்பது இதன் பொருள்.

எட்டாவது படியில் தெய்வ நிலைக்குக் கீழே இருக்கும் தேவர்கள், நாயன்மார்கள், ஆழ்வார்கள், நவக்கிரகங்களின் பொம்மைகளை வைத்தல் வேண்டும். தெய்வ நிலைக்கு மிக சமீபத்திய நிலையை இஃது குறிக்கிறது.

ஒன்பதாவது படியில் பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆகியோர் தங்கள் தேவியரான சரஸ்வதி, லட்சுமி, பார்வதியுடன் இருத்தல் வேண்டும். பராசக்தி அல்லது தேவியின் தனித்த பெரிய பொம்மை ஒன்று நடுவில் உரிய அலங்காரத்துடன் வைத்தல் வேண்டும்.

"புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றஇத் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்து இளைத்தேன் எம்பெருமான்.

என்ற மணிவாசகரின் வாசகத்திற்கேற்ப இந்த ஒன்பது வகை பிறவி நிலைகளையும் குறிப்பிட்டு தெய்வ நிலைக்கு உயர்ந்த பெருமைமிகு தத்துவத்தை உரைப்பதே இந்தக் கொலு தத்துவமாகும்.

பொம்மைகள் கிடைக்காத சூழ்நிலையில் அல்லது தெய்வபொம்மைகளே அதிக எண்ணிக்கையில் இருக்கும் பட்சத்தில் நிலைமைக்குத் தகுந்தவாறும் கொலு அமைக்கப்படுகின்றது. அதாவது தெய்வப்பொம்மைகள் இந்த ஒன்பது படிகளிலும் வைத்து அலங்கரிக்கப்படுகிறது.

துர்க்கை தேவி அல்லது பராசக்தியின் இந்த நவராத்திரி விழா தமிழகத்திலேயன்றி பாரதம் முழுவதுமே சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது.

இந்தியாவின் வடக்கே இமயத்தில் வைஷ்ணவி தேவி, தெற்கே குமரிக்கடலில் குமரியன்னை, மேற்கே அரபிக்கடலில் மும்பை தேவி, கிழக்கே வங்கக்கடலோரம் கல்கத்தா காளி இப்படி பாரதத்தைக் காவல்புரியும் அன்னையின் ஆலயங்களும் திருவிழாக்களும் அகில இந்தியாவிலும் இருப்பதில் ஆச்சரியமென்ன இருக்க முடியும்?

கேரள மாநிலத்தில் மீன்குளத்து பகவதி அம்மன் கோயிலில் நவராத்திரி விழா மிகவும் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது.

கர்நாடக மாநிலம் மைசூரில் தசரா என்ற பெயரில் இந்த நவராத்திரி விழா கொண்டாடப்படுகின்றது. விழாவில் சாமுண்டேஸ்வரி வழிபடப்படுகிறாள். சண்ட முண்டரை அழித்ததால் இவள் சாமுண்டா தேவி என்று அழைக்கப்படுகிறாள்.

வங்காளத்தில் கல்கத்தா நகரில் துர்க்கா பூஜை அன்று பிரபலமாக உள்ள நவராத்திரி நாட்களில் மக்கள் துர்க்கை மற்றும் காளியை வழிபடுகின்றனர்.

உத்திரப்பிரதேசம், பஞ்சாப், ஹரியானா ஆகிய மாநிலங்களில் கூட இந்த நவராத்திரி (துர்க்கா பூஜா) பெரும் சிறப்புடன் கொண்டாடப்படுகிறது. இறுதி நாளான விஜயதசமிகளில் ராம்லீலா கொண்டாடப்படுகிறது.

ஸ்ரீ ராமனின் முன்னோர்கள் தேவியை வழிபட்ட வரலாறுகள் பல உள்ளன. அவர்கள் தேவியைப் பல்வேறு வடிவங்களில் பிரதிஷ்டை செய்து அவற்றுக்கு நவராத்திரி நாட்களில் ஒன்பது புண்ணிய நதிகளின் நீரைக் கொண்டுவந்து அபிஷேகம் செய்வார்களாம்.

திருவனந்தபுரத்தில் பத்மனாப சுவாமி ஆலயத்தில் நடைபெறும் நவராத்திரி பூஜைக்காக ஆண்டுதோறும் குமரி மாவட்டத்தில் பத்மநாபபுரம் தேவாரகட்டு சரஸ்வதி அம்மன் சிலை. வேலிமலை குமார கோயில் முருகன் சிலை மற்றும் சுசீந்திரம் முன்னுதித்த நங்கை சாமி சிலைகள் அலங்கரிக்கப்பட்டு பல்லக்குகளில் வைத்து எடுத்துச் சென்று அங்கு நவராத்திரி கொலு மண்டபத்தில் வைக்கப்படும், நவராத்திரி முடிந்தவுடன் அந்தந்தக் கோவில்களில் சிலைகள் திரும்ப வைக்கப்படும்.

புராணங்களில் ஆலயங்களில் மற்றும் மிகப்பிரமாண்ட அளவில் வீடுகளில் கொண்டாடப்படும் நவராத்திரி விழாவை ஏழை மற்றும் நடுத்தர மக்கள் கொண்டாட முடியுமா என்ன? என்று மனம் சோர்பவர்க்கு எளிதான நவராத்திரி விழா ஒன்றும் கூறப்படுகிறது.

மரப்பலகை அல்லது அட்டைகளில் ஒரு சிறு மண்டபம் கட்டி அதில் ஒரு மரப்பலகை அல்லது கல் மேடை அமைத்து அந்த மேடையில் ஒரு நாற்காலியைச் சிம்மாசனமாக வைக்க வேண்டும்.

அந்தச் சிம்மாசனத்தில் ஒரு பட்டுப்புடவையை வைத்து அதன் மேல் சிங்கத்தை வாகனமாகக் கொண்ட அம்பிகையை அமரச் செய்ய வேண்டும். மண் அல்லது உலாகச் சிலைகளை வைக்கலாம். இரண்டுமே கிடைக்காத நிலையில் சட்டமிடப்பட்ட அம்பிகை படத்தையும் பயன்படுத்தலாம்.

சிம்மாசனத்தின் வலது பக்கத்தில் ஓர் அலங்கரித்த கலசத்தை வைக்க வேண்டும். பிறகு கலசத்தையும் அம்பிகையையும் வில்வம் மற்றும் மாதுளை இலைகளால் அர்ச்சிக்க வேண்டும்.

அம்பிகையைக் குறித்த பாடல்களைப் பாட வேண்டும், ஒன்பது நாட்களும், ஒன்பது பெண்கள் கூடி, ஒன்பது

சிறுமியாக மகேசுவரி, கௌமாரி, வாராகி, மகாலட்சுமி, வைஷ்ணவி, இந்திராணி, சரஸ்வதி, நரசிம்மா, சாமுண்டி வேடமிட்டு அவர்களை மகிழ்ச்சிபடுத்தும் விதமாக கலைநிகழ்ச்சிகளை நிகழ்த்த வேண்டும்.

இவ்விதம் ஒரே வீட்டில் ஒன்பது ராத்திரிகளும் செய்ய இயலாதவர்கள் ஒவ்வொருவர் வீட்டில் ஒரு நாளாகக் கொண்டாடலாம், அதுவும் இயலாவிடின் ஊர் பொது இடத்தில் ஒன்பது இரவுகளையும் பொது விழாவாகக் கொண்டாடலாம். செலவுக்குச் செலவு மிச்சம், நவராத்திரிக்கு நவராத்திரியுமாயிற்று.

நவராத்திரி நாட்களில் அன்னையின் அருள்பெற ஒன்பது நாட்களும் விரதமிருந்து பூஜிக்க இயலாதவர்கள் சரஸ்வதி பூஜையன்று மட்டும் அம்மனைப் பூஜித்து வணங்கினால் போதும்.

அன்னை ஆதிபராசக்தி துர்க்கையாக வடிவெடுத்து மகிஷன் என்ற எருமை முகம் கொண்ட அசுரனின் கர்வத்தை ஒடுக்கி அவனை அழித்தாள். இதனால் அன்னையை அனைவரும் புகழ்ந்தனர். பராசக்தியும் மகிழ்ந்து சாமரன், உதக்கிரன், தாம்ரன், அந்தகன், பாஷ்கலன், சுராளன் ஆகிய அசுரர்களை அழித்தார். இதையடுத்து தேவர்கள் தங்களுக்கு எப்போது ஆபத்து வந்தாலும் நீயே இருந்து பாதுகாக்க வேண்டும் என துர்க்கையிடம் வேண்டிக் கொண்டனர். அப்போது அவர்கள் பல துதிப்பாடல்களைப் பாடினர். இந்தப் பாடல்களை எந்த உலகத்தில் இருப்பவர் பாடினாலும் அவர்களுக்குச் சகல நலன்களையும் சொல்லாற்றலையும் உடல் நலத்தையும் மனைவி மக்களுக்கு நல்வாழ்க்கையையும் கொடுத்தருள வேண்டும் என வேண்டிக் கொண்டனர். அவர்களின் வேண்டுகோளுக்கு இணங்கித் தோன்றிய வடிவமே இந்த மகாசரஸ்வதி.

தேவர்களும், அசுரர்களும் இறவாநிலையளிக்கும் அமிர்தம் வேண்டி பாற்கடலைக் கடைந்தபோது அக்கடலிருந்து கற்பக விருட்சம், காமதேனு, ஐராவதம், உச்சை சிரவசு என்றும் தெய்வக்குதிரை போன்ற அரிய பொருட்கள் தோன்றின, இதனைத் தொடர்ந்து இந்தப் பாற்கடலில் இருந்தே திருமகள், இந்திராணி, கலைமகள் ஆகியோர் தோன்றியதாகப் புராணங்கள் குறிப்பிடுகின்றன.

கலைமகளாம் சரஸ்வதி சந்திரனைப் போன்ற ஒளியை உடையவள் எட்டு வகை கருவிகளைக் கொண்டிருப்பவள். வெள்ளை நிறமுடையவள். தாமரைப்பூவில் காட்சியளிப்பவள், சத்திய லோகத்தில் பிரம்மனுடன் சேர்ந்து வேத நாதமாய்த் திகழ்பவள். பாரத நாட்டில் நதியாக ஓடுகின்றாள்.

சரஸ்வதி நதி என்பது நாம் தேசப்படத்தில் காணமுடியாத நதி. இந்த நதி பற்றி வேதங்களில் கூறப்பட்டுள்ளது. சரஸ்வதி என்ற சொல்லுக்கே தண்ணீர் என்று பொருள் உண்டு. இந்த நதியின் கரையில் வேதகாலத்தில் பல யாகங்கள் செய்யப்பட்டிருக்கின்றன. தான் ஓடிவரும் இடங்களிலெல்லாம் பல நிலைகளை ஏற்படுத்தித் தந்திருப்பதால் இந்த நதிக்கு சரஸ்வதி என்ற பெயர் ஏற்பட்டதாகவும் கூறப்படுகிறது.

படைப்புக் கடவுளான பிரம்மா ஐந்து முகங்கள் கொண்டிருந்தமையால் தான் முதல்கடவுள் என்ற கர்வம் கொண்டிருந்தார். பிரம்மனின் இந்த ஆணவத்தைக் கண்ட சிவபெருமான் அவரது ஒரு தலையை தம் சுண்டுவிரலால் கிள்ளி எறிந்தார். இதனால் பிரம்மஹத்தி தோஷம் ஏற்பட்டது. இந்தத் தோஷம் நெருப்புக் கோளமாக மாறியது. இதை ஏந்திச் சென்று கடலில் சேர்க்கும்படி தேவர்கள் சரஸ்வதியிடம் கேட்டனர்.

சிவபெருமான் பிரம்மஹத்தி தோஷத்திலிருந்து விடுபட சரஸ்வதியில் நீராட முயன்றார். ஆனால் தனது கணவரான பிரம்மா தலையைக் கொய்த பிரம்மஹத்தி தோஷத்தை சுமக்க விரும்பாத சரஸ்வதி சிவபெருமானுக்குப் பயந்து பூமிக்கு அடியில் சென்று மறைந்ததாகக் கூறப்படுகிறது.

கங்கை, யமுனை, சரஸ்வதி ஆகிய மூன்று நதிகளின் சங்கமமான திரிவேணியில் பக்தர்கள் புனித நீராடுகின்றனர். இந்த இடத்தில் தான் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை கும்பமேளா (மகாமகம்) நடக்கிறது. கங்கையும், யமுனையும் கண்முன்னே சங்கமமாவதைப் பார்க்க முடிகிறது. ஆனால் சரஸ்வதி மட்டும் பூமிக்குள்ளேயே அமைதியாக ஓடிவந்து இந்த இவ்விரு நதிகளுடன் கலந்துவிடுவதால் சரஸ்வதி சங்கமமாவதை மட்டும் நம்மால் காண முடிவதில்லை.

கங்கைக் கரையில் சிவ ஆலயங்களும், யமுனைக் கரையில் விஷ்ணு ஆலயங்களும் இருக்கின்றன. சரஸ்வதி நதி பற்றி புராணங்களில் மட்டுமே கூறப்படுவதால் பிரம்மாவின் ஆலயம் பற்றி எந்தத் தகவலும் இல்லை.

சரஸ்வதி நதி சிவனுக்குப் பயந்தே ஒளிந்து, ஒளிந்து செல்வதாகப் புராணங்களிலும் வேதங்களிலும் கூறப்பட்டிருந்தாலும் இதை ஒரு கற்பனை நதியாகத் தள்ளிவிட முடியாது. சரஸ்வதி நதி என்ற ஒரு நதி இருந்ததும் அந்த நதிக்கரையில் சிறந்த நகர நாகரீகம் தோன்றி வளர்ந்ததும் சமீபத்திய அகழ்வாராய்ச்சிகளால் புலனாகிறது. இந்த நதி பற்றியும் அதன் நாகரீகம் பற்றியும் விரிவான அகழ்வாராய்ச்சி நடத்த செயற்கைக்கோள் மூலம் தகவல் திரட்டப்படுகின்றது.

கல்விக்கு நாயகியாம் இந்த சரஸ்வதி தேவியைப் பூஜித்தால் கல்வியையும் செல்வத்தையும் கடலளவுப் பெறலாம் என்று தமது சௌந்தரியலகரியில் ஆதி சங்கரர் கூறுகின்றார்.

நவராத்திரியில் ஒன்பது நாட்களும் விரதமிருந்து தேவியைப் பூஜிக்க இயலாதவர்கள் விஜய தசமிக்கு முன்தினம் வரும் சரஸ்வதி பூஜையன்று அன்னையை வணங்கினால் போதும் ஒன்பது நாட்கள் வழிப்பட்ட பலனை அடைந்து விடலாம்.

சரஸ்வதி பூஜையின் மறுநாள் விஜயதசமி வெற்றித் திருநாளான இது அன்னை பராசக்தி துர்க்கையாய் அவதரித்து மகிஷனை வென்று வெற்றி சூடிய நாளாகக் கருதப்படுகிறது. இந்த விஜய தசமியன்று விஷ்ணு கோயில்களில் வன்னிமரக்கிளையை வைத்து பெருமாளை எழுந்தருளச் செய்து பாணம் போடும் நிகழ்ச்சியை நடத்துகின்றனர். பாண்டவர்கள் ஒரு வருடம் யாருக்கும் இனங்காட்டாமல் மறைந்திருந்து வாழ்க்கை நடத்திய காலத்தில் தமது போராயுதங்களைக் காடுகளில் மறைத்து வைத்தனர். அவர்களது ஆயுதங்களுக்கு வன்னிமரமே காவலாக இருந்தது. அதனால் பாண்டவர்கள் வன்னி மரத்தை விஜய தசமியன்று பூஜித்து போரில் வெற்றி பெற்றனர் விஜயதசமியன்று. அதனால் வன்னி மரத்தை வழிபட்டால் சத்ருநாசம் ஏற்படும் என்று நம்பப்படுகிறது.

மகாபாரத நிகழ்ச்சி மட்டுமல்லாது இராமாயண நிகழ்ச்சியாகவும், விஜயதசமி உருவகித்துக் கொண்டாடப்படுகிறது. இராமன் இராவணன் மீது இலங்கைக்குப் படையெடுத்துச் சென்ற நாள் விஜயதசமி. இந்த வெற்றித் திருநாளில் படையெடுத்துச் சென்றதால் மாபெரும் வீரனான இராவணனை வெற்றி கொள்ள முடிந்தது. இதை டெல்லியில் விஜயதசமியன்று இராவணன் பொம்மைகளைத் தீயிட்டு இராவண சம்ஹரமாகக் கொண்டாடுகின்றனர்.

அன்னை அசுர வதத்தை முடித்த விஜயதசமி தினத்தைக் கர்நாடக மாநிலம் மைசூரில் தசரா பண்டிகையாகக்

கொண்டாடுகின்றனர். தமிழகத்திலும் இந்தத் தசரா பண்டிகை தூத்துக்குடி மாவட்டம் குலசேகரன்பட்டினம் முத்தாரம்மன் கோயிலில் மிகச் சிறப்பாகக் கொண்டாடப் படுகிறது. இவ்விழாவைக் காண தமிழகத்திலிருந்து ஏராளமான பக்தர்கள் கூடுவார்கள்.

## 8. மங்கள சண்டிகா பூஜை

இந்த நவராத்திரி விழாவேயன்றி துர்க்கைக்காக கோயில்களில் மகா சண்டியாகம் என்ற பெயரில் சிறப்பு வழிபாடும் செய்யப்படுகின்றது.

அதிகச் சாமர்த்தியமும் அதிக கோபமும் உள்ளவளாகவும், கல்யாணக் காரியங்களில் மங்களந் தருபவளாகவும் இருக்கும் தேவிதான் மங்கள சண்டிகை என்று வழங்கப்படுகின்றாள்.

மின்னல் ஒளியையுடையவள், சிங்க ஊர்தியினள், ஒன்பது மாதர்களால் சூழப்பட்டவள், முக்கண்ணும் பிறை முடியும் உடையவள். சண்டன் என்ற அசுரனைக் கொன்றவள். தனது எட்டுக்கரங்களில் முறையே சங்கு, சக்கரம், கதை, வாள், கேடயம், அம்பு, வில், பாசம் ஆகியவற்றைக் கொண்டிருப்பாள் என்று ஆகமங்கள் இவரை அறிமுகப்படுத்துகின்றன.

மனு வம்சத்திற் பிறந்த மங்களன் என்பவன் ஏழு கண்டங்களை காக்கும் அரசனாக இருந்தான். அவன் இந்த சண்டிகையை வணங்கியதாலேயே ஏழு கண்டங்களையும் வெற்றிக் கொள்ள முடிந்தது. இவ்விதம் மங்களன் பூஜித்து வெற்றியடைந்ததால் அந்த துர்க்கை தேவி மங்கள சண்டிகை என்று வழங்கப்பட்டாள்.

விஷ்ணு முதலான எல்லா தேவர்களும் திரிபுரங்களிலும் வெற்றியுண்டாவதற்காக சகல திரவியங்களாலும் பூஜித்து இந்தத் தேவியைப் போற்றினர். அப்போது மங்கள சண்டி

துர்க்கை வடிவினளாய்த் தோன்றி தேவர்களை நோக்கி, நீங்கள் பயப்பட வேண்டாம் ருத்திர மூர்த்தியால் திரிபுர வெற்றியுண்டாகும் என்று கூறி மறைந்தாள்.

துர்க்கையின் வாக்குப்படியே சிவபெருமான் திரிபுரங்களையும் அழித்தார். திரிபுர வெற்றிக்குத் துணை நின்ற மங்கள சண்டிகையை தேவர்கள் அருக்கியாதிகளோடும் தேன், பால், பழங்களோடும் திருப்தி செய்து ஆடல்பாடல் வாத்யங்களாலும், போற்றிசைப் பாடல்களாலும் தியானங்களாலும் வழிபட்டு பூஜித்து

"ஓம் ஹ்ரீம் ஸ்ரீம் க்லீம்
ஸர்வ பூஜ்யே தேவி மங்கள சண்டிகே
ஹூம் ஹூம் பட்ஸ்வாஹா"

என்னும் இருபத்தொன்று அட்சரங்களாலான மூல மந்திரத்தைக் கொண்டு பூஜைகளைச் செய்து முடித்தார்கள்.

எல்லாவிதமான விருப்பங்களையும் பூர்த்தி செய்யும் இந்தத் தோத்திரத்தைப் பத்து லட்சம் தடவை ஜபித்தால் மந்திர சித்தியாகும்.

இந்த மங்கள சண்டிகா ஸ்தோத்திரத்தைச் செவ்வாய்க் கிழமை தோறும் சொல்லியே ருத்திர மூர்த்தியானவர் சகல மங்களத்தையும் பெற்றார் என்று சொல்லப்படுகின்றது.

இது போலவே அங்காரகனும், மங்களன் என்ற மன்னனும் மங்கையரும், மங்களத்தை விரும்பும் ஆடவரும், தேவர், முனிவர், மனுக்கள், மனிதர்கள் முதலிய யாவரும் மங்கள சண்டிகையைப் பூஜை செய்து அவரவர் விரும்பி மங்களத்தையடைந்தனர்.

இந்த மங்கள சண்டிகை சுலோகத்தைச் சொல்பவர் மட்டுமல்லாது காதால் கேட்பவருங்கூட சகல சௌபாக்கியங்களையும் பெறுவர் என்று பாகவதத்தில் கூறப்படுகிறது.

ஸாரேச மங்களா தாரே!
பா ரேச ஸர்வ கர்மணாம்!
பிரதி மங்களவாரே சபூன்யே,
மங்கல சுகப்ரதே!

பதினாறு வயது நிரம்பியவளாகவும், கோவைப்பழம் போன்ற உதடுகளும், அழகான பற்களும் சரத் காலத் தாமரை போன்ற வதனமும், வெண் செண்பகப் பூ போன்ற நிறமும் கருநெய்தல் போன்ற விழிகளும் கொண்டு அகில உலகங்களையும் தாங்கி எல்லோருக்கும் எல்லாச் சம்பத்துக்களையும் தருபவளாகவும் விளங்கும் தேவியை வணங்குகிறேன் என்பதுதான் இந்தத் தியான ஸ்தோத்திரம்.

## 9. மங்கள சண்டிகா ஸ்தோத்திரம்

1. தேவீம் ஷோடஸ வர்ஷியாம் ஸுஸ்திர யௌவனாம்,
பிம்போஷ்பீம் ஸுதீம் சுத்தாம் ஸரத்பத்ம நிபாநநாம்.

2. ஸ்வேத சம்பக வர்ணாம் ஸுநீலோத்பல லோசநாம்
ஜகதாத்ரீம் சதாத் ரீம் ச ஸர்வேப்ய: ஸர்வ சம்பதாம்

3. ஸம்ஸார ஸாகரே கோரே ஜ்யோதி ரூபாம் ஸதா பஜே
தெவ்யாஸ ச த்யான மித்யேவம் ஸ்தவநம் ஸருயதாம்
முனே

4. ரக்ஷரக்ஷ ஜகன்மாத தேவி மங்கள சண்டிகே!
ஹாரிகே விபதாம் ராஸே: ஸர்வமங்கள காரிகே

5. ஹர்ஷ மங்கள தக்ஷேச ஹர்ஷ மங்கள தாயிகே!
சுபே மங்களே தக்ஷச, சுபே மங்கள சண்டிகே!

6. மங்கள மங்களார் ஹேச, ஸர்வமங்கள மங்களே!
ஸதாம் மங்களதே தேவி, ஸர்வேஷாம் மங்களாலயே!

7. பூஸ்யே மங்கள வாரே மங்களா பீஷ்டதேவதே!
பூஜ்யே மங்கள பூபஸ்ய மநுவம்சஸ்ய ஸந்ததம்

8. மங்களா திஷ்டாத்ரு தேவி மங்களாநாம் ச மங்களே!
ஸம்ஸார மங்களா தாரே! மோட்ச மங்கள தாயிணி

9. ஸாரேச மங்களா தாரே பாரேச ஸர்வ கர்மணாம்
பிரதி மங்களவாரே ச பூன்யே மங்கல சுகப்பிரதே

பலஸ்ருதி

10. ஸ்தோத்ரேனா நேந சம்பிஸ்ச ஸ்துத்வா மங்கள சண்டிகாம்
பிரதி மங்கள வாரே பூஜாம் தத்வா கத: சிவ.

11. தேவயாஸ்ச மங்கள ஸ்தோத்திரம் யஸருணோதி ஸமாஹிதா
தத் மங்களம் பவேத் தஸ்ய நபவேத் தத் மங்களம்
வர்த்ததே புத்ர பௌத்ரஸ்ச மங்களம் சதிநேதிநே.

12. பவானி த்வம் தாஸே மயீ விதர த்ருஷ்டியும் ஸகருனாம்
இதி ஸ்தோகும் வாஞ்சன் கதயதி பவானி த்வமிதிய
தனவத் த்வம் தஸ்மை திசஸீ நிஜ ஸாயுஜ்ய பதவீம
முகுந்த பரய்மேந்தர ஸ்புட மகுட நீராஜித பதாம்"

தேவியாகிய துர்க்கையைப் பதினாறு வயது நிரம்பியவளாகவும், நித்ய யௌவன வடிவினளாகவும், கோவைப்பழம் போன்ற அழகிய உதடுகளில் அருள் வழியும் புன்னகையுடன் சரத் காலத்து நிலவொளியில் தாமரை மலர் மீது அமர்ந்திருப்பவளைத் துதிக்கிறேன்.

தாமரை போன்ற வதனமும், வெண் செண்பகப்பூப் போன்ற நிறமும் கரு நெய்தல் போன்ற விழிகளும் கொண்டு, அகில உலகங்களையும் தாங்கி, எல்லோருக்கும் எல்லாச் சம்பத்துக்களையும் தருபவளாகவும் விளங்கும் தேவியை வணங்குகிறேன்.

பயங்கரமான பிறவிப் பெருங்கடலைக் கடக்க, மணி விளக்காய் வழிகாட்டும் தேவியின் பாதங்களை நினைப்பதே சிறந்த பூஜையாகும்

ஹே! ஜகன் மாதா! ஆபத்துகளின்றும் காப்பாற்று! மங்களத்தைத் தரும் சண்டிகையே, துன்பத்தைத் துடைத் தெரியும் துர்க்கையே உன்னை வணங்குகிறேன்.

மங்கள சண்டிகை தேவியே! சந்தோஷத்தையும், மங்களத்தையும் திறமையும் அளிப்பவளே. மங்களத்தையும் நல்வாழ்வையும் அருள்வாயே!

மங்களத்தைத் தரும் மங்கள நாயகியே மங்கள வாழ்வை அளிப்பாயே!

பூஜிக்கத் தக்க மங்கள நாயகியே சுபத்தை அளிக்கும் தேவியே! மனித வர்க்கத்திற்கு என்றும் நல்வாழ்வை அருள்வாயே!

மங்களத்தைத் தரும் அருள் நோக்கு உடையவளே மங்களமே உருவானவளே, உலகில் நல்வாழ்வுக்கு ஆதாரமானவளே! மாந்தருக்கு மோட்சத்தை அளிப்பவளே!

மங்களத்திற்கு ஆதாரமானவளே! மங்கள வாரம் தோறும் அதாவது செவ்வாய்க் கிழமைத்தோறும் பூஜிக்கத்

தக்கவளே! மங்களத்தை அருளும் அன்னையே உன்னுடைய தாளைப் பணிகிறேன்.

மங்கள சண்டிகையான அன்னையை மங்கள வாரம் தோறும் ராகுகாலத்தில் பூஜித்துத் துதித்தால் சகல நன்மைகளையும் அருளுவாள்.

தேவியைப் போற்றும் இந்த மங்கள ஸ்ருதியை ஓதுவதால் உலகில் கிடைக்காத பாக்கியமே இல்லை. சகல சம்பத்துக்களும் வம்ச விருத்தியும் எண்ணற்ற பாக்கியங்களும் நாளுக்கு நாள் பெருகும் என்பதில் சந்தேகமே இல்லை.

பவானி தாயே! அடிமையாகிய என்னிடம் கருணையுடன் கூடிய பார்வையை நீ செலுத்தி அருள்வாயாக என்று எவனொருவன் துதி செய்ய விரும்பி பவானி, நீ, என்று இரண்டு வார்த்தைகளைச் சொன்ன உடனேயே விஷ்ணு, பிரம்மா, இந்திரன் ஆகியவர்களின் கிரீட ஒளியால் நீராஜனம் செய்யப் பெற்ற திருவடிகளையுடைய உனது சாயுஜ்ய பதவியை அவனுக்கு அளிக்கின்றாய்! மங்களத்தை அருளும் அன்னையே உன் தாள் பணிகிறேன் என்பது இந்த மங்கள சண்டிகா ஸ்தோத்திரத்தின் பொருளாகும்.

இவ்விதம் சமஸ்கிருதத்தில் இந்த சண்டிகை சுலோகத்தைச் சொல்ல இயலாதவர்கள் தமிழில் உள்ள மங்கள சண்டிகா துதிப் பாடலைப் பாடினாலே போதும் அவள் அருள் நிச்சயமாக உங்களுக்குக் கிடைக்கும்.

## 10. மங்கள சண்டிகை துதிப்பாடல்

ரக்ஷ ரக்ஷ ஜகன் மாதா
சர்வ சக்தி ஜெய துர்கா
ரக்ஷ ரக்ஷ ஜகன் மாதா
சர்வ சக்தி ஜெய துர்கா

மங்கள வாரம் சொல்லிட வேண்டும்
மங்கள கன்னிகை ஸ்லோகம் இதை
ஒன்பது வாரம் சொல்லுவதாலே
உமையவள் திருவருள் சேரும் [ரக்ஷ ரக்ஷ]
படைப்பவள் அவளே
காப்பவள் அவளே
அழிப்பவள் அவளே சக்தி – அபயம்
என்று அவளை சரண் புகுந்தாலே
அடைக்கலம் அவளே, சக்தி – ஜயஜய
சங்கரி கௌரி மனோகரி அபயம் அளிப்பவள்
அம்பிகை பைரவி சிவ சிவ சிவ சங்கரி
சக்தி மகேஸ்வரி திருவருள் தருவாள் தேவி
[ரக்ஷ ரக்ஷ]

கருணையில் கங்கை கண்ணனின் தங்கை
கடைக்கண் திறந்தால் போதும்
வல்வினை ஓடும், பலவினை ஓடும்
அருள் மழை பொழிபவள் – நாளும்
நீலநிறத்தோடு ஞாலம் அளந்தவள்
காளி எனத் திரிசூலம் எடுத்தவள்
பக்தருக்கெல்லாம் பாதை கொடுத்தவள்
நாமம் சொன்னால் நன்மை தருபவள்
நாமம் சொன்னால் நன்மை தருபவள்
[ரக்ஷ ரக்ஷ]

## 11. இராகு கால பூஜைகள்

தற்போது ஒவ்வொரு ஆலயத்திலுமுள்ள துர்க்கை சந்நிதிகளில் இராகு கால பூஜை பிரபலம் அடைந்து வருகின்றது. இராகு காலத்தில் ராகுபகவான் துர்க்கையை வழிபடுகின்றார். ஆகவே இந்த இராகு காலத்தில் நாமும் துர்க்கையை வழிபட்டால் அளவிட முடியாத நன்மைகளை அடையலாம் என்று கூறப்படுகின்றது.

தடைப்பட்ட திருமணங்கள், கணவனின் வியாதிகள் குணமடையவும், குடும்பத்தில் நிகழும் சண்டைச் சச்சரவுகள் நீங்கவும், எண்ணிய காரியங்கள் எண்ணியபடி நடந்தேறவும், கிரஹகங்களால் உண்டாகும் தோஷங்கள் யாவும் நிவர்த்தியாக இந்த இராகு கால பூஜையே சிறந்தது என்று புராணங்கள் பரிந்துரை செய்கின்றன.

ஜாதக ரீதியில் ராகுவானது நிழல் கிரகம். ராகுவும் செவ்வாயும் நட்புக்கிரகம். ராகுவும் சூரியனும் பகைக் கிரகங்கள். ஆனால் இராகுகாலத்தில் மட்டும் ராகுவுக்கும் சூரியனுக்கும் நட்பு ஏற்படுகிறது. ராகுதோஷமோ, சூரியதோஷமோ இருக்கும் பக்தர்கள் இந்த இரு கிரகங்களுக்கும் அதிதேவதையான துர்க்கையை வணங்கினால் தோஷ நிவாரணம் பெறலாம்.

இதே போன்று செவ்வாய்க் கிழமை இராகு காலத்தில் வழிபட தோஷம் நிவர்த்தியாகும்.

இராகு காலத்தில் பொதுவாக எந்தக் காரியத்தையும் செய்ய கூடாது என்பார்கள். காரியம் விக்கினம் செய்வதற்காக இராகு பகவான் மிகவும் விழிப்பாக இருக்கும் நேரம் அது. ஆனால் இந்த நேரத்திலும் அவர் தமது அதிதேவதையான துர்க்கைக்கு கட்டுப்பட்டவர். ஆகையால் இராகு காலத்தில் குறிப்பாக ஞாயிறு, செவ்வாய், வெள்ளிக்கிழமைகளில் வரும் இராகு காலத்தில் வழிபட நன்மையடையலாம் என்று கூறப்படுகிறது. அதிலும் அஷ்டமி திதியுடன் கூடிய இராகு கால பூஜை வெகு சிறப்பானது என்று கூறப்படுகிறது.

ஞாயிற்றுக் கிழமை வியாதி கடன் தொல்லைகளினால் பாதிக்கப்பட்டவர்களும், செவ்வாய்கிழமை தோஷ நிவர்த்தி வேண்டுபவர்களும், வெள்ளிக்கிழமை திருமணம் வேண்டுபவர்களும், மகப்பேறு வேண்டுபவர்களும், வறுமை தீர செல்வம் வேண்டுபவர்களும் இராகுகால பூஜை செய்ய வேண்டுமென்று சாஸ்திரங்கள் கூறுகின்றன.

இந்த இராகுகால பூஜையை ஆண்கள் செய்வதை விட பெண்கள் அதுவும் கன்னிப் பெண்கள் மற்றும் சுமங்கலிப் பெண்கள் ஒன்பது வாரங்கள் தொடர்ந்து செய்தால் ஒன்பதாவது கிழமைக்குள் நினைத்த காரியம் கை கூடும் என்பது அனுபவம் கண்ட உண்மை.

இந்த இராகு கால பூஜையை விரதமாக மேற்கொள்ளும் பெண்கள் மஞ்சள், சிவப்பு நிற புடவையை அவரவர் குடும்ப வழக்கப்படி மடிசாராகவோ வழக்கமான நிலையிலோ அணிந்து கொண்டு நெற்றியில் திலகம் தரித்து, கன்னிப் பெண்களாயின் மஞ்சள், சிவப்பு நிற தாவணியை அணிந்து கருஞ்சாந்துமை நீண்டவாக்கில் அணிந்து தலையில் நல்ல மணமுள்ள பூவைச் சூடி சன்னதிக்குச் சென்று எலுமிச்சம்பழத்தைப் பிழிந்துவிட்டு அதன் மேற்பகுதியில் நெய் அல்லது எள்ளெண்ணெய் விட்டு தீபமேற்றி வழிபடுதல் வேண்டும்.

இந்த வழிபாட்டிற்குச் செல்லும் போது சுமங்கலிப் பெண்கள் தங்கள் கணவரின் துண்டையும் கன்னிப் பெண்கள் தங்கள் தந்தையின் கைத்துண்டையும் எடுத்துச் செல்ல வேண்டும் என்று விதி கூறுகின்றது. இந்த வரிசையில் விதவைத் தாய்மார்களும் தங்கள் மகன் அல்லது மகள் நலனை வேண்டி தங்கள் மகன் கைத்துண்டை எடுத்துச் செல்வது வழக்கமாகி வருகின்றது.

இந்த இராகுகால வழிபாட்டின் போது துர்க்கைக்குப் பிடித்த ஸ்ரீ துர்க்கா ஸ்துதி, ஸ்ரீ மங்கள சண்டிகை ஸ்லோகம், நவதுர்க்கா மந்திரங்கள், ஸ்ரீ துர்க்கை அஷ்டோத்தர சதநாமாவளி, ராகுகால துர்க்கா அஷ்டகம், துர்க்கா ஸூக்தம், துக்க நிவாரண அஷ்டகம், மகிஷாசுர மர்த்தினி தோத்திரம் மற்றும் துர்க்கை துதிகளை வாய்விட்டுத் தனியாகவோ கூட்டமாகவோ சொல்லிப் பிரார்த்தனை செய்ய வேண்டும் என்று வேத நூல்கள் மொழிகின்றன. இந்த

துதிப்பாடல்களைச் சொல்ல நேரமில்லாதவர்கள் பின்வரும் துர்க்கை காயத்ரீயையாவது கூறி வழிபட வேண்டும் என்று சொல்லப்படுகிறது.

## 12. துர்க்கை காயத்திரீ

"காத்யாய நாய வித்மஹே கன்யாகுமரி சதீமஹி
தந்தோ துர்க்க. ப்ரசோதயாத்"

கன்னியாகவும் குமரியாகவும் உள்ள தேவியை வணங்குகிறோம். ஈசுவரனுக்காகவே தோன்றி ஈசனையே அடைந்த அவளை வழிபடுகிறோம். அந்த துர்க்கா தேவியானவள் எங்களை நல்வழியில் செலுத்தி ஆட்கொள்ள வேண்டும் என்பது இதன் பொருள். இந்த காயத்திரீயை நேரமில்லாதவர்கள் ஒரு தடவையேனும் கூற வேண்டும் என்பதும் சந்தர்ப்பம் வாய்க்கப் பெற்றவர்கள் 108 தடவைக்குக் குறையாமல் ஜெபிக்க வேண்டும் என்று காயத்ரீ மந்த்ர மகார்ணவம் கூறுகின்றது.

இந்த காயத்ரீயைப் போலவே துர்க்கையின் நாவாக்ஷரீ மந்திரத்தையும் கூறி இராகுகால பூஜை செய்ய வேண்டும் என்று நீவாக்ஷரீ தியானம் கூறுகின்றது.

## 13. நவாக்ஷரீ தியான சுலோகம்

"மாதர்மே மதுகைடபக்னி மஹிச ப்ராணாப
ஹாரோத்யயே
ஹேலா நிர்மித தூம்ரலோசன வநேஹேசண்ட
முண்டார்த்தினீ
நீ: சேஷி க்ருத – ரத்தபீஜ –தனுக்கே நித்யே –
நிசும்பாபஹே சும்பத்வம் ஸினி
ஸம்ஹராஸூதுரிதம் துர்க்கே நமஸ்தேம்பிகே"

தாயே! மதுகைடபர்களை வதம் செய்தவளே! மகிஷனுடைய உயிரைப் போக்கியவளே! விளையாட்டாக தூம்ரலோசனை வதைத்தவளே! சண்ட முண்டர்களை அழித்தவளே! ரத்த பீஜாசுரனை நிர்மூலமாக்கியவளே! துர்க்காம்பிகையே உன்னை வணங்குகின்றேன். விரைவில் என் பாவங்களைப் போக்கி என்னைக் காத்தருள்வாய் என்பது இந்த நவாக்ஷரீ மந்திரத்தின் பொருளாகும்.

## 14. சண்டி ஹோமம்

எந்தக் காரியம் செய்தால் கடவுள் அனுக்கிரகம் கிடைக்குமோ அதைச் செய்வதுதான் பக்தி, நம்மால் கோயிலுக்குச் சென்று வழிபட நேரம் ஒதுக்க முடியாத பட்சத்தில் இராகு கால பூஜையில் கலந்து கொள்ள முடியாத நிலையில் துர்க்கைக்காக நடத்தப்படும் இந்த சண்டிஹோமத்திலாவது கலந்து கொள்ள வேண்டும் என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன.

"யதாவேதோ ஹ்யனாதா ஸ்ரீதத்வத்
ஸப்த சதி ஸம்ருதா!"

வேதம் எப்படி அனாதியோ அப்படி சப்தசதியும் அனாதியானது என்று புவனேஸ்வர சம்ஹிதை கூறுகின்றது. நவாஹரி மந்திரத்தை 100 தடவை சப்த சதீ பாராயணம் செய்தால் ஒரு சண்டி ஹோமம் பூர்த்தியாகும். இதனால் பாராணம் செய்யாமல் வெறும் அஷ்டோத்தர நாமாவளியுடன் சண்டி ஹோமம் செய்தாலும் தவறில்லை. இந்த சண்டி ஹோமத்தின் ஆவர்த்திகளை அதிகரித்து 1000மாக செய்வது சதசண்டி ஹோமம். இதில் துர்க்கா ஸூக்தத்தை மகா மந்திரமாக ஜெபித்து ஆவர்த்தி கணக்கிட்டு ஹோமம் செய்வதும் உண்டு.

ஸ்ரீஜெயஜெய துர்க்கா மந்திரத்தை முதலிலும் பிறகு வனதுர்க்கை மந்திரத்தையும் ஸ்ரீதுர்க்கா ஸ்ரீஜெய துர்க்கா

மந்திரத்தையும் ஜெபித்து ஹோமத்தை முடிக்க வேண்டும் என்று சப்த சதி கூறுகின்றது.

இந்த துர்க்கை வழிபாடு மகா பாரதம் காலம் தொடங்கி வடக்கே சிறப்புப் பெற்று பல்லவர் காலத்தில் தெற்கே நுழைந்து இன்று பாரத தேசமெங்கும் இந்திய வழி பாடுகளுள் ஒன்றாகப் போற்றப்பட்டு வழிபடப்படுகின்றது.



## 9. துர்க்கை கோயில்கள்

**பா**ரத தேசம் முழுவதுமுள்ள துர்க்கை ஆலயங்களை மூன்று வகையாகப் பிரிக்கலாம். ஒன்று துர்க்கை சன்னதிகள் இரண்டு சண்டி சன்னிதிகள் மூன்று காளி சன்னதிகள் என்பவைகள். இந்த மூன்றுமே கோவ வடிவமானவைதான்.

முற்காலத்தில் காளி, துர்க்கை, சண்டி வழிபாடுகளில் உயிர்ப்பலி என்பது அனுஷ்டிக்கப்பட்டு வந்தது. பின்னர் ஆதிசங்கரர் பல தேவி சன்னதிகளுக்கும் யாத்திரை செய்து ஸ்ரீ சக்கரப் பிரதிஷ்டை செய்து உக்கிரதேவதைகளைச் சாந்த நாயகியாக்கி உயிர்பலியைத் தடுத்து நிறுத்தினார்.

தேவி ஆலயங்கள் பாரதமெங்கும் பெரும் வழிபாட்டுக்கேந்திரங்களாக உருமாறின. உயிர்ப் பலி என்பது இல்லாத நிலையில் அன்பின் வடிவமான இறைதரிசனத்தை அங்கு காணமுடிந்தது.

காசியில் உள்ள துர்க்கை சன்னதியில் முன்பு ஒரு காலத்தில் நரபலி கொடுக்கப்பட்டு வந்தது. ஆதி சங்கரர் அதை நிறுத்தி ஸ்ரீ சக்கரமேடு பிரதிஷ்டை செய்து அம்மனை சாந்த சொரூபினியாக்கினார்.

விஜயவாடாவில் உள்ள குன்று ஒன்றிலுள்ள கனக துர்க்கைக்கு ஆதி சங்கரர் ஸ்ரீசக்கரம் பிரதிஷ்டை செய்து சாந்த துர்க்கையாக்கினார்.

இன்னும் இந்த துர்க்கையின் எழில் மிகுந்த இருப்பிடங்களைத் தேடிச் செல்வோம்.

மைசூர் ராஜ்யத்தில் பாதாமிக்கு வடக்கே 18 மைல் ஜசோளே என்ற ஊர் உள்ளது. இங்குள்ள கோயில்களில் மிக அழகானது துர்க்கை கோயில்தான்.

மங்களூரிலிருந்து 25 மைல் தூரத்தில் நந்தினி நதிக்கரையில் உள்ள கடில் நகரில் துர்க்கதேவி லிங்க வடிவில் காட்சி தருகின்றாள். அபிஷேகக் காலத்தில் மட்டுமே தேவி லிங்கரூபினியாகக் காட்சி தருகின்றாள். ஏனைய நேரங்களில் துர்க்கை கவசமாகக் காட்சியளிப்பாள்.

பண்டாசுரனை வதம் செய்த இந்தத் தலத்தில் துர்க்கை சிவலிங்க வடிவில் பக்தர்களுக்குக் காட்சி தந்து கொண்டிருக்கிறாள்.

திருநெல்வேலி தாழையூத்துப் பாதையில் கங்கை கொண்டானுக்கு அருகிலுள்ள பாரஞ்சேரியில் சயனதுர்க்கை என்ற அபூர்வ கோலத்தைக் காணலாம்.

வைத்தீஸ்வரன் கோயிலிருந்து மணமேடு செல்லும் பாதையிலுள்ள திருவாளப்புத்தூரில் துர்க்கை சந்நிதி புகழ்பெற்று விளங்குகிறது.

கடலூர் மாவட்டம் நெல்லிக்குப்பத்திற்கு அருகிலுள்ள எய்தனூர் சிவாலயத்தின் துர்க்கை மிகவும் எழிலுடன் காணப்படுகிறது.

ஹரியானா மாநிலத்தின் தலைநகர் சண்டிகர். அருகிலுள்ள ஒரு குன்றில் சண்டி இருக்கின்றாள். அவள் பெயரால்தான் சண்டிகார் ஏற்பட்டதாம்.

கடலூர் மாவட்டம் சத்தியமங்கலம் கிராமத்தில் சாமுண்டிக்குத் தனி ஆலயம் உள்ளது. சாமுண்டியின் சிரசின் மீது சீறும் நாகம் படமெடுத்தாடுகிறது. நான்கு கரங்கள் ஒன்றில் தீச்சட்டி, ஒன்றில் காட்டாரி ஒரு கை ஓங்கிய

நிலையிலும் மற்றொரு கை தொடையைத் தொட்டவாறும் உக்கிர சண்டியாக காட்சியளிக்கின்றாள்.

தஞ்சை மாவட்டத்திலுள்ள பூவனூரில் சாமுண்டீஸ்வரிக்கு தனி ஆலயம் உள்ளது. இங்கு ஒவ்வொரு ஞாயிறும் விஷக்கடிக்கு மந்தரித்து தாயத்துவேர் கட்டுகிறார்கள்.

நந்தப் பிரயாகையில் மிகப் பழமையான சண்டிகா கோயில் உள்ளது. ரிஷிகேஷத்தில் ஒரு குன்றில் சண்டியும் மற்றொரு குன்றில் மானசா தேவியும் கோயில் கொண்டுள்ளனர்.

இமயத்தில் அலக நந்தா நதிக்கரையில் ஸ்ரீ கிருஷ்ண பரகின்மாயா, சக்தாயகம்மர்த்தினி கோயில் உள்ளது. இங்கு துர்க்கைக்கு சிலை ஏதுமில்லை. ஒரு குண்டத்தை துர்க்கையாகப் பாவித்து பூஜை செய்கின்றனர்.

இந்த துர்க்கை ஆலயங்கள் எல்லாமே ஞானிகளால் வழிபாடு செய்யப்பட்ட பெருமை கொண்டவைகள்.

இவையேயன்றி இன்றும் சற்று புகழ்பெற்ற அளவிலும் பெரிய துர்க்கை சந்நிதிகள் இந்தப் பாரத தேசமெங்கும் பரவியிருக்கின்றன.

## 1. விந்தியவாசினி

'மகாபாரதம்' விராடபருவத்தில் துர்க்கை விந்திய மலையில் நித்திய வாசம் புரிவதாகக் கூறப்பட்டுள்ளது. இந்த விந்தியவாசினிக்கு மதுவும் இறைச்சியும் படைத்து வழிப்பட்டதாகவும் நரபலி இடப்பட்டதாவும் இலக்கியங்களில் கூறப்படும் செய்தியாகும்.

சிவபெருமான் தட்சயாகத்தில் விழுந்து மடிந்த தாட்சாயிணியின் உடலைச் சுமந்து திரிகையில் விஷ்ணு தன் சக்ராயுதத்தை விட்டு அவ்வுடலைத் துணிக்க அந்த உடலின் முதுகுப்பகுதி விந்திய மலையில் வீழ்ந்தது. அதுவே விந்திய வாசினியின் ஆலயமாக உருமாறியது.

இந்த விந்தியாசலம், காசியிலிருந்து மிர்சாப்பூர் வழியே 86 கி.மீ தொலைவில் உள்ளது.

அன்னை விந்தியா வாசினியின் ஆலயம் வட நாட்டுபாணியில் அமைந்துள்ளது. ஆலய நுழைவுவாயிலில் தலவிருட்சம் அதனையடுத்த சிறு மண்டபம்.

கருவறையில் விந்தியாவாசினியின் முக தரிசனம் மட்டுமே நமக்குத் தெரிகிறது.

இதே கோயில் பளிங்குப் பின்னணியில் சரஸ்வதி தனி சன்னதியில் அருள்பாவிக்கிறாள். கழுத்து வரை பட்டாடை உடுத்தி மணிமாலைகளும் மலர்களும் சூட்டி சரஸ்வதி திவ்விய தரிசனம் தருகின்றாள்.

அன்னை அன்னபூர்னேஸ்வரிக்கும் அங்கே தனி சன்னதி உள்ளது.

அன்னை விந்தியவாசினியின் ஆணைப்படி துர்க்காசுரனிடம் தூது சென்ற காளராத்ரி இங்கே காளியாகக் கொண்டாடப்படுகின்றாள். அவளுக்கென்று அமையப் பெற்ற சந்நிதியில் காளியின் அருகில் அச்சுறும் வண்ணம் ஒரு போர் வாள் உள்ளது.

அன்னை விந்தியவாசினி போர் முனைக்கு வந்த போது அவளைச் சுமந்து வந்த சிம்மத்துக்கும் தனிப்பெருமை தரப்படுகின்றது.

தீயவன் துர்க்கனின் அசரீயை ஒழிக்க விந்திய வாசினியைப் போருக்குப் புறப்படச் சொன்ன ஈசன் இங்கு இரண்டு இலிங்கங்களாக எழுந்தருளியிருக்கின்றார்.

## 2. மைசூர் சாமுண்டி

மின்னல் ஒளியுடையவள், சிம்ம ஊர்தியினுள் நவ மாதர்களால் சூழப்பட்டவள். முக்கண்ணும் பிறை முடியும் உடையவள். சண்டன் என்ற அசுரனைக் கொன்றவள். தனது

எட்டுக் கரங்களில் முறையே கதை, வாள், கேடயம், வில் அம்பு, பாசம், கண்டனம், சக்கரம், சங்கு ஆகிய ஆயுதங்களைக் கொண்டிருப்பாள் என்று சண்டியை அறிமுகம் செய்து வைக்கிறது தேஷபுராணம்,

இந்த சண்டியின் தனிப்பெருங்கோயிலாகத் திகழ்வது மைசூர் சாமுண்டி மலையிலுள்ள சாமுண்டிஸ்வரிகோயில். மலை மீது செல்ல படிக்கட்டுகளும் காரில் செல்ல தனிப்பாதையும் உள்ளது.

மேல்பக்கம் செல்லும் பாதைவழியே சென்றால் பெரிய நந்தி யொன்று படுத்திருக்கும் நிலையில் காணப்படும் நல்ல கருங்கல் சிற்பம் உள்ளது. தஞ்சை பெருவுடையார் நந்தி இதனினும் பெரியதுதான் என்றாலும் அழகிலே இந்த நந்தி சிறப்பானதாகவே இருக்கின்றது. கீழ்ப்பக்கம் செல்லும் பாதை வழியாகச் சென்றால் நந்தியைக் காணமுடியாது.

மேற்கு நோக்கிச் செல்லும் பாதையில் தெற்கு சந்திப்பில் மகிஷாசுரனின் நெடிய தோற்றம் நம்மை வரவேற்கின்றது. ஒரு கையில் பெரிய கத்தியும் மற்றொரு கையில் நாகபாசமாக ஓங்கி உயர்ந்த நிலையில் சுதையால் செய்த நெடிய உருவம்.

கோயில் வாயிலை சிறிய கோபுரம் ஒன்று அழகு செய்கின்றது. கோபுரம், திறந்த வெளி பிரகாரம் இவைகளைக் கடந்தால் மகா மண்டபம் காணப்படுகிறது. மகா மண்டபத்திலிருந்து சாமுண்டிஸ்வரியைத் தரிசனம் செய்யலாம். இந்த சாமுண்டிஸ்வரியை மகிஷாசுரமர்த்தினி என்றும் குறிப்பிடுகின்றனர்.

இந்த துர்க்காம்பிகை தங்கக் கவசத்தில் மின் விளக்கில் அலங்கார தாரிணியாகக் காணப்படுகிறாள். தங்க மயமான மேனியும் இளமை எழில் கொஞ்சம் வடிவினளாய் சிம்மத்தின் மேல் உக்கிரமாகக் காட்சி தரும் இவள் இருபது

கரங்களுடன் காலின் கீழ் எருமை உடலும் அசுரத் தலையும் கொண்ட மகிஷன் விழி பிதுங்கிக் கொண்டிருப்பான்.

அவனைத் தன் கையில் ஏந்திய திரிசூலத்தால் அழுத்திப் பிடித்துக் கொண்டிருப்பாள் இந்த சிம்மவாகினி என்று விஷ்ணு தர்மோத்திரத்தில் இந்த தேவியின் வர்ணனை விளக்கம் பெறுகிறது. இந்த விளக்கத்தின் வடிவமாக சாமுண்டிஸ்வரி இங்கு காட்சி தருகின்றாள்.

இந்த சாமுண்டிஸ்வரி மைசூர் மகாராஜாக்களின் குல தெய்வம் ஆகும். பழைய கோயிலாக இருந்த இதனை 1827ல் மூன்றாம் கிருஷ்ண ராஜ உடையார் புதுப்பித்திருக்கிறார். கோயிலுக்கு அழகான தங்கச் சிங்க வாகனம் ஒன்றை அன்பளிப்பாக வழங்கியுள்ளார்.

அது மட்டுமல்லாது மைசூரை ஆண்ட ஹைதர் அலியும் அவன் மகன் திப்பு சுல்தானும் நிறைய அணிகலன்களை இந்த சாமுண்டிக்கு அன்பளிப்பு செய்திருக்கின்றனர். மைசூர் நகருக்கே இந்த சாமுண்டிஸ்வரி காவல் தெய்வமாக அருள் பாலித்துக் கொண்டிருக்கிறாள்.

## 3. பட்டீஸ்வரம் துர்க்கைக் கோயில்

கும்பகோணத்திற்கு தென்மேற்கே 6 கி.மீ தூரத்திலுள்ளது பட்டீஸ்வரம். இவ்வூரில் உள்ள தேவாரப் பாடல் பெற்ற சிவ தலம் தேனுபுரீஸ்வரர் ஆலயம்.

காமதேனுவின் பெண்கள் நால்வரில் பட்டி என்பவள் வழிபட்டதால் பட்டீச்சுரம் என்ற பெயர் ஏற்பட்டது. இத்தலத்தை திருஞான சம்பந்தர் பாடி வருகையில் வெய்யிலினால் மிகவும் கஷ்டப்பட்டார். அதனால் வெய்யில் கொடுமையைத் தணிப்பதற்காக பூதங்களைக் கொண்டு முத்துப் பந்தல் போடப்பட்ட பெருமையுடையது இந்த பட்டீசுவரம்.



இந்தப் பட்டீசுவர் தேனுபுரீஸ்வரர் ஆலய வளாகத்தில் வடக்குக் கோபுரத்தினருகே உள்ள தனிச் சந்நிதியே துர்க்கையம்மன் கோயிலாகத் திகழ்கின்றது.

கருவறையின் வாயிலின் இருபுறமும் துவாரபாலகியர் காவல் காக்கின்றனர்.

நான்கு கரங்களிலும் ஆயுதங்கள் ஏந்தியுள்ள இப்பெண்கள் வாயில் கோரைப் பற்களுடன் பயங்கரமாகக் காட்சி தருகின்றனர்.

கருவறையில் துர்க்கை சாந்த சொரூபினியாகக் காட்சி தருகின்றாள். மகிஷன் தலைமீது நின்ற அழகான திருக்கோலம், சிம்மவாகனத்துடன் கூடிய திரிபங்க நிலையில் எட்டுத்திருங்கரங்களிலும் எட்டு வகையான ஆயுதங்களுடன் அபய வரத தாட்சினியாக ஒயிலாகக் காட்சியளிக்கின்றாள். அம்மனின் விழிகளில் அருள் வெள்ளம் பளிச்சிடுகின்றது.

ஆரம்ப காலத்தில் இந்த துர்க்கையம்மன் பட்டீசுவரத்தின் வடபுறத்தில் அமைந்திருந்த சோழர்களின் மாளிகையில் சோழர்களின் காவல் தெய்வமாக அமைக்கப்பட்டிருந்தது. பின்னர் தஞ்சை நாயக்கர் காலத்தில் தனிக் கோயிலாக இந்த சிவாலய வளாகத்தில் அமைக்கப்பட்டது.

துர்க்கைக் கோயிலின் கருவறைக்கு முன் சிற்பக் கலைச் செல்வம் நிறைந்த நாயக்கர்கள் கால யாளி தூண்கள் தாங்கிய முன் மண்டபம் அமைக்கப்பட்டு கோயில் புத்தம் புதியனவாகக் காட்சியளிக்கிறது.

*1.7.1999* அன்று கும்பாபிஷேகம் செய்யப்பட்ட இத்திருக்கோயிலில் வீற்றிருக்கும் துர்க்கையம்மனை

தரிசிக்கப் பெண்கள் கூட்டம் அலை மோதுகின்றது. இராகுகால பூஜைகள் செவ்வாய், வெள்ளி, ஞாயிற்றுக் கிழமைகளில் வெகு சிறப்பாக நடைபெறுகின்றது.

இந்த அஷ்ட புஜ துர்க்கையேயன்றி மற்றொரு அழகான எண் கர துர்க்கை சிலையொன்று இக்கோயில் வளாக சுற்றுச்சுவர் தண்டபாணி கோயிலின் வடக்கே காணப்படுகிறது. இது இக்கோயில் சிற்பமன்று. வெளியில் புதைந்திருந்த இந்தச் சிலையை இங்கே மதிலமைக்கும் போது கோட்ட தெய்வமாக பிரதிஷ்டை செய்துள்ளனர்.

மகிஷன் மீது திரிபங்க நிலையில் எட்டுத்திருக் கரத்தினளாக சங்கு, சக்கரம், வில், அம்பு, வாள், கேடயம், அபயம், ஹஸ்தம் பூண்டு அலங்கார பூஷிதையாக அழகுற காட்சி தருகின்றாள். தேனுபுரீஸ்வரர் ஆலய அர்த்த மண்டபத்தின் வடக்குக் கோட்டத்தில் ஷட்புஜ துர்க்கையொன்று கோட்ட தெய்வமாகக் காட்சி தருகின்றது.

நான்கு திருக்கரங்களிலும் சங்கு, சக்கரம், கேடயம், வாள் என்ற ஆயுதங்கள் ஏந்தியும் தொடைமீது ஒரு கையை ஊன்றி மற்றொரு கை அபயமளிக்கும் நிலையில் ஆறு திருக்கரத்தினளாக துர்க்கைக் காட்சி தருகின்றாள்.

வாளை மேலே ஏந்தியும் கேடயத்தை கீழே தாங்கியும் மகிஷனின் மீது ஒய்யாரமாக நிமிர்ந்து நிற்கிறாள்.

இந்த ஆறு கர துர்க்கையைப் போன்றே நான்கு கர துர்க்கையொன்று அம்மன் சன்னதியின் வடக்கு புறத்தில் கோட்ட தெய்வமாக புறத்தில் கோட்ட தெய்வமாகக் காட்சி தருகின்றாள். சங்கு சக்கரதாரிணியாக திரிபங்க நிலையில் காட்சி தரும் இந்தத் துர்க்கையின் அழகு இறைவன் கோட்ட தெய்வ துர்க்கைக்குச் சற்றும் குறைந்ததல்ல.

*தங்கத் தாமரை மலரின் நடுவில் இருப்பவளும், மூன்று கண்களையுடையவளும். மின்னல் கொடி போன்ற திருமேனி அமைந்தவளும், நான்கு திருக்கரத்தையும் கொண்டவளாகக்*

காட்சியளிப்பாள் விந்தியா வாசனீ துர்க்கை என்று சிற்ப நூல்களால் வருணிக்கப்பட்ட் விந்தியா வாசனீ துர்க்கையொன்று இக்கோயில் திருச்சுற்று மண்டபத்தின் ஒரு ஓரமாக பழுதுபட்ட நிலையில் காணப்படுகின்றது.

சங்கு, சக்கரம், அபயம், ஹஸ்தம் என்னும் நான்கு திருக்கரத்தினளாக அழகிய அணிகலன்களைப் பூண்டுள்ள முற்காலச் சோழர் காலத்தைச் சேர்ந்த இத்துர்க்கையின் பாதத்தில் மகிஷன் தலை அமைக்கப்படவில்லை. மாறாக தாமரைப்பீடம் வடிவமைக்கபட்டுள்ளது.

பட்டீஸ்வரம் திருக்கோயிலின் வடக்கு வாசல் வெற்றி நாயகியாய் விளங்கும் இந்தத் துர்க்கை ஆலயம் 1.7.1999 அன்று மகாகும்பாபிஷேகம் செய்யப்பட்டு பொலிவு பெற்று விளங்குகிறது.

## 4. கதிராமங்கலம் வனதுர்க்கை

கும்பகோணத்திற்குக் கிழக்கே 23வது கி.மீ. தூரத்திலும், மயிலாடுதுறையிலிருந்து 24வது கி.மீ. தூரத்திலும் அமைந்துள்ளது கதிராமங்கலம். இவ்வூரிலுள்ள வனதுர்க்கை கோயில் மிகப்பிரலமானது.

புராணங்களாலும், வரலாற்று ஏடுகளாலும் பெரும்புகழ் பெற்றது இந்தக் கதிராமங்கலம் துர்க்கைக் கோயில்.

சிவன் பார்வதி திருமணத்தைக் காண இமயத்தில் சித்தர்கள், யட்சர்கள், கந்தர்வர், முனிவர்கள், பூதகணங்கள், நாகர்கள், பர்வதங்கள், நதிகள், தேவர்கள் எல்லாம் ஒருங்கே கூடினர். பிரம்மாவும், வாயுவும் சிவனுக்குக் கவரி வீச, விஷ்ணுவும் சந்திரனும் ஆளுக்கொரு குடைபிடிக்க, சூரியன் விளக்குத் தாங்கிவர, இந்திரன் தாம்பூல வட்டில் தாங்கி நடக்க, வருணன் பன்னீர் தெளிக்க, ஊர்வசி, மேனகை போன்றோர் நாட்டியமாட, கின்னர்கள் கீதம்பாட, நாரதர் வீணை வாசிக்க, ஈசன் திருமண ஊர்வலம் துவங்கியது.

இந்த நேரத்தில் பூமி பாரம் தாங்காமல் ஒரு பக்கமாய்ச் சரிந்தது. தேவர்கள் பயந்தனர். திருமணம் அவ்வளவுதானா? என்ற கேள்வியுடன் அனைவரும் ஈசனை நோக்க அவரோ அகத்திய முனிவரை அழைத்து பூமி சமமாக நீர் தெற்கே பொதிகை மலையில் போய் இரும் என்றார். அகத்தியருக்கோ வருத்தமான வருத்தம். அனைத்து தேவர்களும் ரிஷிகளும் ஈசனின் திருமணத்தைக் கண்டு களிக்க தான்மட்டும் தெற்கே செல்வதா? அவ்வளவு பாவியா நான் என்று இறைவனின் கட்டளையை ஏற்று கண்ணீருடன் புறப்பட்டார்.

இறைவன் அகத்தியரை அழைத்து அகத்தியரே உனது பெருமையை நீர் அறிய மாட்டீர். சமுத்திரத்தையே குடித்தவர் நீர், காவிரியைக் கமண்டலத்தில் அடைத்தவர் நீர். விந்தியமலையின் கர்வத்தை அடைத்தவர் நீர்! மாபெரும் அசுரனான வாதாபியை அழித்தவரும் நீர். இப்படி மாபெரும் பலசாலியான நீர் தெற்கே செல்வதால் மட்டுமே பூமி சமநிலை அடையும். ஆகவே, நீர் வருத்தப்படாமல் தெற்கே செல்லும். உமக்கு எனது கல்யாண காட்சியை பாபநாச நதிக்கரையில் காட்டுகின்றேன் என்று சமாதானம் கூறினார்.

அகத்தியர் தெற்கு நோக்கிச் சென்றார். பூமியும் சமமானது. அப்படி அகத்தியர் பொதிகை மலையை நோக்கிச் சென்றபோது வழியில் விந்தியன் என்ற அசுரன் அவரைத் தடுத்தான். மாபெரும் பலம் வாய்ந்த அந்த அசுரனின் வலிமையின் முன்னால் தன்னுடைய மகாசக்திகள் பயன்தராது என்று சக்திக்கு நாயகியாம் அன்னை பார்வதியை மனதில் துதித்தார். அவளின் ஆணையின்படியே கதிரா மங்கலத்தில் உள்ள துர்க்கையை உபாசித்து அவளருளில் அசுரனை வென்றார். தனக்கு வெற்றியளித்த துர்க்கைக்கு அகத்தியரால் சூட்டப்பட்ட பெயரே 'வனதுர்க்கா' வாகும்.

இறைவன் திருவருளில் பிறந்த புத்திசாலியான குழந்தை மார்க்கண்டேயன். அவனுக்குப் பதினாறு வயது தொடங்கியபோது அவனுடைய தந்தை 'மிருகண்டு' முனிவர் கவலைப்பட ஆரம்பித்தார். மார்க்கண்டேயனுக்கு இறைவனின் வரத்தின்படி மரணம் சம்பவிக்க கெடுவந்துவிட்டதை உணர்ந்தார்.

தன் மகனின் உயிரைக் காப்பாற்ற ஏதேனும் வழியிருக்கிறதா என்று யோசித்தார். வரம் கொடுத்த ஈசனிடமே மண்டியிட்டுப் பார்த்து விட்டார். அவரோ மவுனமாகி விட்டார். தாயுள்ளம் கொண்ட அன்னை தனது கோரிக்கையை நிச்சயம் நிறைவேற்றுவார் என்று அன்னையிடம் முறையிட்டார். அவளோ கதிராமங்கலம் சென்றால் வழி கிடைக்கும் என்று அருள் கூறினார்.

கதிராமங்கலம் சென்ற மிருகண்ட முனிவர், அகத்தியர் வழிபட்ட துர்க்கையை வணங்கினார். வன துர்க்கையும் அவர்மேல் இரக்கம் கொண்டு 'திருக்கடவூர் அமிர்தகடேசுவரரை வணங்கி அவரையே நின் மகன் பற்றிக் கொண்டால் சிரஞ்சீவியாக இருப்பான்' என்று வனதுர்க்கை அருள் வாக்கு கூறினாள்.

வனதுர்க்கையின் வாக்குப் படியே திருக்கடவூர் அமிர்தகடேசரை வழிபட்ட மார்க்கண்டேயன் அவனது வாழ்நாள் முடிந்தமைக்காக உயிரைப் பறிக்க வந்த எமனிடமிருந்து தப்பிக்க இறைவனைப் பயத்தில் கட்டிபிடிக்க, இறைவனும் காலனைக் காலால் உதைத்து மார்க்கண்டேயனுக்குப் பூரண ஆயுளை வழங்கினார்.

இப்படி அகத்தியர், மிருகண்டு முனிவரால் பூஜிக்கப்பட்ட கதிராமங்கலம் வனதுர்க்கையை கம்பர் நாளும் வழிபட்டு வந்தார். ஒரு நாள் பெருமழை பெய்து கம்பர் வசித்த வீட்டுக் கூரையின் கீற்றுகள் காற்றில் பறந்து விடவே உள்ளே ஒழுகலாயிற்று. இரவு நேரம், இருட்டு. புயலில் இனி எங்கே செல்வது?

கம்பர் திடுக்கிட்டார். இனிஎன்ன செய்வது. அப்போது வனதுர்க்கையின் நினைவு வரவே வனதுர்க்கையினை பிரார்த்தித்து துர்க்கையின் அருள்மழை தன்னைக் காக்கும் என்று கூறி கண்ணயர்ந்து விட்டார். காலையில் எழுந்து பார்த்த போது வீட்டுக் கூரை நெற்கதிர்களால் வேயப்பட்டு இருப்பது கண்டு ஆச்சர்யப்பட்டு கதிர்வேய்ந்த மங்கலம் என்று சிறப்பித்துப் பாடினார். இதற்கு சிவமல்லிகாவனம் என்ற பெயரும் உண்டு.

**"பொன்னியின் வயலோங்கி பூசுரர் நிலைத்து வாழும்**
**தன்னிகர் கம்பன் வாழ்ந்த தனி நகராகும் வெண்ணெய்**
**பொன்னகரமமர்ந்த துர்க்காதேவி பொற்பாதம் போற்றிப்**
**பன்னரும் புகழும் பொன்னும் பதவியும் பெற்று வாழ்வோம்"**

பொதுவாகத் துர்க்கை வடிவங்கள் வடக்கு நோக்கியே அமைக்கப்பட்டிருக்கும். விதிவிலக்காக இங்கு கிழக்கு நோக்கி அம்பிகையின் வடிவம் அமைக்கப்பட்டிருக்கிறது. அது மட்டுமன்று. பிற தலங்களில் மகிஷன் தலை மீது இருப்பது போன்றோ சிங்க வாகினியாகவோ காட்டப்படும் துர்க்கை இங்கு இலட்சுமின் அம்சமாகத் தாமரைப்பூவில் எழுந்தருளியிருக்கின்றாள் இந்த வனதுர்க்கை.

வலது மேற்கரத்தில் பிரயோகச் சக்கரமும், இடது மேற்கரத்தில் சங்கும், வலது கீழ்க்கரத்தில் அபய ஹஸ்தமும், இடது கீழ்கரத்தை இடுப்பில் வைத்த படி தாமரைப் பீடத்தில் தாள் வைத்தபடி அடியார்களுக்கு அருள்புரியும் நிலையில் வனதுர்க்கை காட்சியளிக்கின்றாள்.

வனதுர்க்கையின் கருவறை விமானத்தில் அம்மனுக்கு நேராக ஆறு அங்குலம் சதுர அளவில் ஒரு துவாரம் உள்ளது. இதன் வழியாக இந்த வனதுர்க்கையானவள் தினமும் வான்வழியாகக் காசிக்குச் சென்று காசியில் விசாலாட்சி, அன்னபூரணி ஆகியோருடன் உரையாடிவிட்டு வருவதாகக் கூறப்படுகிறது. இதன் காரணமாகவே இந்த வனதுர்க்கை

ஆகாய துர்க்கை என்றும் கூறப்படுகின்றாள்.

இந்தக் கதிராமங்கலம் வனதுர்க்கை 'இராகு கால துர்க்கை' என்றும் அழைக்கப்படுகின்றாள். இராகுவிற்கு அதி தேவதை துர்க்கை. இந்த வனதுர்க்கையின் முன்பக்கத் தோற்றம் அம்மன் உருவமும் பின் பக்கம் பாம்பு படம் எடுப்பது போல் சர்ப்பாகாரமாயும் உள்ளது. இத்தல முறைப்படி நான்கு முறை கோயிலை வலம் வர வேண்டும். இராகு தோஷம் உள்ளவர்கள் செவ்வாய்க்கிழமை விரதமிருந்து இராகு காலத்தில் இந்த துர்க்கையை வழிபட இராகுதேவனின் அருளுக்கு இலக்காகி தனது தோஷத்தை நீக்கிக் கொள்வர்.

## 5. சீவலப்பேரி துர்க்காம்பிகை

திருநெல்வேலி மாவட்டம் சீவலப்பேரியில் தாமிரபரணி நதியருகே அமைந்துள்ள துர்க்காம்பிகைக் கோயில் மிகவும் பிரசித்து பெற்றது.

மிகச் சமீபத்திய கட்டடக் கலையைக் கொண்டுள்ள இக்கோயிலின் துர்க்கை மட்டும் பழமை வாய்ந்தவளாகத் தென்படுகின்றாள். இவளை யோக மாயையின் வடிவமென்று இவ்வூர் மக்கள் கொண்டாடுகின்றனர்.

இப்பெயருக்கு ஏற்றார் போல இங்கு மகா விஷ்ணுவும், மகா கணபதியும் கோயில் கொண்டு துர்க்கையம்மனுக்குத் துணை சேர்க்கின்றனர்.

17 அடி உயரத்தில் அழகான கருவறை. அதற்கேற்ற அர்த்தமண்டபம், அதனையடுத்து மணி மண்டபம் என கோயில் உறுப்புகளைக் கொண்டுள்ள இந்த துர்க்கையம்மனுக்கு ஒவ்வொரு பௌர்ணமியிலும் சிறப்பு பூஜை செய்யப்படுகிறது. பௌர்ணமி நள்ளிரவிலும் ஞாயிறு செவ்வாய், வெள்ளிகளில் இராகு கால பூஜைகளும் இக்கோயிலில் விசேஷமாகச் செய்யப்படுகின்றது.

## 6. சேந்த மங்கலம் துர்க்கை

கெடில நதிக்கரையில் அமைந்திருக்கும் சிற்றூர் சேந்த மங்கலம். பிற்கால பல்லவ குல தோன்றலான கோப்பெருஞ்சிங்கனின் தலைநகராக விளங்கிய இவ்வூர் விழுப்புரம்- உளுந்தூர்பேட்டை பெருஞ்சாலைக்கிடையில் கெடில நதி மேம்பாலத்தின் தென்கரைக்கு அருகில் ஒரு கி.மீ., தொலைவில் அமைந்துள்ளது.

சேந்தமங்கலம் நுழைவு வாயிலில் கோட்டை கொத்தளங்களைச் சுற்றி அகழி இருந்த அடையாளங்கள் காணப்படுகின்றது. இங்கிருந்த பல்லவ அரண்மனை பகை மன்னர்களால் அழிக்கப்பட்டது. அந்த இடிபாடுகளும் சிதைவுகளும் காணப்படுகின்றன. இங்குள்ள வானிலை கண்டீச்சரம் ஒரளவு நல்ல நிலையில் காணப்பட்டாலும் சுற்றிலும் இடிபாடுகள் குவிந்திருப்பதால் வழிபாடற்றுக் காணப்படுகின்றது.

இந்த வானிலைக் கண் டீச்சரத்தின் தெற்கில் துர்க்கைக்கு ஒரு தனி கோயில் காணப்படுகிறது. கி.பி. 1430ல் வீரபிரதாப மகாராய மன்னரால் புதுப்பிக்கப்பட்டதாக கல்வெட்டு கூறப்பட்டாலும் கருவறையில் உள்ள துர்க்கை அம்மன் கோப்பெருஞ்சிங்கனால் எழுப்பிக்கப்பட்டது என கல்வெட்டு கூறுகிறது. கி.பி.13ம் நூற்றாண்டைச் சேர்ந்த இக்கோயில் வழிபாடற்று இன்று வெறும் காட்சிப் பொருளாகக் காட்சி தந்து கொண்டிருக்கிறது.

## 7. திருவாரூர் துர்க்கை

திருவாரூரில் பிறந்தவர்கட்கு முக்தி கிடைக்கும் சிறந்த சிவப்பதி. திருமகள் வழிப்பட்ட பதியாகையால் திருவாரூர் என்று பெயர் பெற்றது என்பர். மூவரின் தேவாரமும் பெற்ற இத்திருக்கோயிலில் திருமகளால் உண்டாக்கப்பட்ட

கமலாலயம் என்றும் பெரிய தடாகம் அழகு செய்கின்றது. திருமாலின் மார்பிலே இருந்த சோமாஸ்கந்த மூர்த்தியாகிய தியாகராசரை முசுகுந்தச் சக்கரவர்த்தி இந்திரனிடமிருந்து பெற்று வந்து எழுந்தருளச் செய்த பதி. இப்படி சிறப்புகளெல்லாம் ஒருவாய் கொண்ட இந்தத் திருவாரூர் கோயிலின் பெருமையை அப்பரடிகளே சொல்லி முடிக்க முடியாமல் தவிக்கும் போது நாம் எம்மாத்திரம்?

இந்த திருவாரூர் பூங்கோயிலுக்குத் தெற்கில் வடக்குப் பார்த்த திசையில் ரௌத்ர துர்க்கை என வழங்கப்படும் 'எரிசினக் கொற்றவை' தனிக் கோயில் அமைந்துள்ளது.

இந்த ரௌத்திர துர்க்கைக் கோயிலுள் காட்சியளிக்கும் கருவறை துர்க்கை சிற்பம் சோழர் காலத்தது என்றாலும் இதன் தனிச் சந்நிதி தற்காலத்திய கட்டிட வகையைச் சார்ந்தது ஆகும்.

எட்டு திருக்கரங்களிலும் எட்டு வித ஆயுதங்களை ஏந்தியுள்ள இந்தக் காளி தேவி கி.பி 13ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகக் கருதப்படுகிறது.

வேண்டுவார்க்கு வேண்டும் வரமருளும் இந்தத் துர்க்கையை வெள்ளிக்கிழமைகளில் இராகு காலத்தின் போது திருமணமாகாத கன்னிப் பெண்கள் எலுமிச்சம்பழம் தீபமேற்றி வழிபடுகின்றனர். இந்த வேண்டுதலின் பலனை திருமணம் முடிந்ததும் நன்றிக் கடனாகத் திரும்பவும் வந்து வழிபட்டுத் தங்கள் காணிக்கைகளைச் செலுத்துகின்றனர்.

திருமணமாகா கன்னிப் பெண்களின் தாயாக இருந்து இந்த துர்க்கை மணவினை கூட்டுவிப்பதாகச் சொல்லப் படுகின்றது.

## 8. காஞ்சிபுரம் துர்க்கை

கோயில் நகரமான காஞ்சியில் துர்க்கைக்குரிய கோயில்கள் எட்டு இருப்பதாகக் காஞ்சிப் புராணம்

கூறுகிறது. ஆனால் இப்போது தனிக் கோயில்களாக நமக்குத் தென்படுபவை இரண்டு மட்டுமே.

### அ. கருக்கினில் அமர்ந்தாள் கோயில்

காஞ்சிபுரம் பேருந்து நிலையத்திற்கு தெற்கேயுள்ள பச்சையப்பன் மேனிலைப் பள்ளிக்குத் தென்மேற்கே கருக்கினில் அமர்ந்தாள் என்னும் துர்க்கைக் கோயில் காணப்படுகின்றது.

கருக்கினில் அமர்ந்தாள் கோயில் கருவறை, அர்த்த மண்டபம், முகமண்டபம் எனும் பகுதிகளைக் கொண்டுள்ளது. கருவறை சதுர வடிவிலும், அர்த்த மண்டபம் நீள் சதுர வடிவிலும், முகமண்டபம் நீள் சதுர வடிவிலும் அமைந்துள்ளன. முக மண்டபம் ஆறு தூண்களைக் கொண்டுள்ளது. முகமண்டபத்தையடுத்துள்ளது மிகப் பெரிய மண்டபமாகும். இது பிற்காலக் கட்டடமாகும். இங்கே துர்க்கையின் ஊர்தியாகிய சிம்மமும் அதற்குப் பின்னால் பலி பீடமும் காணப்படுகின்றன.

அர்த்த மண்டபத்தின் மேற்கு தேவ கோட்டத்தில் சூலத்துடன் கூடிய சிவனின் உருவம் காணப்படுகிறது. இவரது மேற்புற வலக்கை சூலமும் மேற்புற இடதுகை பாசமும் காட்டப்பட்டுள்ளது. முன்புறக்கைகளில் வலக்கை அட்ச மாலையும் இடதுகை தொடை மீது வைத்த நிலையிலும் உள்ளன.

மேற்கு பக்க தேவ கோட்டத்தில் துர்க்கை மகிஷன் மீது நின்றபடி உள்ளனர். சங்கு, சக்கரம், அபயம், வரதம் என நான்கு திருக்கரங்கள் கொண்டுள்ளாள்.

கருவறையின் கிழக்கு தேவ கோட்டத்தில் காளி சிலை காணப்படுகின்றது. காளியின் காலடியில் அசுரனின் தலை காணப்படுகின்றது. கால்கள் அகன்ற நிலையில் உள்ள காளியின் வலக்கை சூலத்தை தலைகீழாகப் பிடித்தபடி

உள்ளாள். இடது மேல் கையில் பாசமும் கீழ்கையில் கபாலமும் கொண்டு மண்டையோட்டு மாலையணிந்து காதுகளில் பத்ர, பிரேத குண்டலங்களும் அணிந்து கோபாவேசத்துடன் காணப்படுகின்றாள்.

மூன்று தளங்களமைந்த இக்கோயில் விமானத்தில் துர்க்கை வடிவத்துடன் அம்மன் அவதாரத்தின் பல்வேறு வடிவங்களும் சிற்பங்களாகக் காணப்படுகின்றன.

கருவறையில் ஐந்தடி உயரமுடைய துர்க்கை காணப்படுகின்றாள். எட்டுத் திருக்கரங்களிலும் எண்வகை ஆயுதங்கள் அணி செய்ய கீழே விழுந்து கிடக்கும் மகிஷனின் மீது நின்றபடி கோபமாகக் காட்சியளிக்கின்றாள் இந்த கருக்கினில் அமர்ந்தாள்.

ஆகம நூல்களில் குறிப்பிடப்படும் காலராத்ரி துர்க்கை என்பவளுக்கு இந்த கருக்கினில் அமர்ந்தாள் சிற்பமே சிறந்த எடுத்துக்காட்டாகக் கொள்வர்.

இந்த கருக்கினில் அமர்ந்தாள் கோயிலைப் போலவே வேறொரு கருக்கினில் அமர்ந்தாள் கோயில் திருவாடுதுறை ஆதின மடத்துத் தெருவில் அமைந்துள்ளது.

கருக்கினில் அமர்ந்தாள் துர்க்கைக்கு ஒவ்வொரு பௌர்ணமி மற்றும் இராகு கால பூஜைகள் சிறப்பாகச் செய்யப்படுகின்றன.

### ஆ. ஐஞ்சந்தி துர்க்கை

சின்னக் காஞ்சிபுரத்தில் உள்ள கச்சபேஸ்வரர் சிவன் கோயில் வளாகத்தில் துர்க்கைக்கு எனத் தனிச் சந்நிதி அமைந்துள்ளது.

இந்த துர்க்கைக் கோயில் முதலாம் இராசராசனுடைய ஆறாம் ஆட்சியாண்டில் கட்டப்பட்டதாக அங்குள்ள கல்வெட்டு தெரிவிக்கின்றது. இக்கோயிலில் தீபம்



எரிப்பதற்கு 900 ஆடுகள் வழங்கிய செய்தியையும் இந்த துர்க்கை ஐஞ்சந்தி துர்க்கை என வழங்கப்பட்டதாகவும் கல் வெட்டுகளிலிருந்து அறிந்து கொள்ளலாம்.

இந்த துர்க்கை கோயிலில் ஐந்து வேளைகளிலும் பூஜைகள் நடைபெற்றதை கல்வெட்டுச் செய்திகள் உறுதிப் படுத்துகின்றன.

ஐஞ்சந்தி துர்க்கா தேவி சமணக் கோயிலாகும் என்று மயிலை சீனி வேங்கடசாமி தெரிவிக்ன்றார்.

## 9. விஜயவாடா கனக துர்க்கை

ஆந்திர மாநிலம் விஜயவாடாவில் உள்ள இந்திர கிலபர்வதத்தில் அருள்பாலிக்கும் அன்னை கனக துர்க்கையாவள். இறைவன் பெயர் மல்லேஸ்வரர். ஆந்திர மாநிலத்தின் காவல் தெய்வமாகப் போற்றப்படும் இந்த விஜயவாடா கனக துர்க்கை ஆலயம் ஒரு சக்தி பீடமாகும்.

இந்த விஜயவாடா ஒரு காலத்தில் கற்களும் மலைகளும் நிறைந்த பகுதியாக இருந்தது. இந்தக் கற்குவியல்கள் கிருஷ்ணா நதியின் போக்கைத் தடுத்துக் கொண்டிருந்தன. எங்கு நதி நீர் தேவையோ அங்கு பாயாமல் மக்கள் குடியிருப்பு பகுதிகளையெல்லாம் வெள்ளம் புகுந்து அழித்துக் கொண்டிருந்தது. மழைக் காலங்களில் எப்போது வெள்ளம் வரும் என்ற அச்சத்துடனே காலம் தள்ள வேண்டியிருந்தது. இந்த மலைமட்டும் தடுப்பாக



இல்லாவிட்டால் நீர் ஒரு ஒழுங்கு முறைக்குட்பட்டு ஆறாகச் செல்லக் கூடும். மனித முயற்சியால் ஆகக் கூடிய காரியமா இது. மக்கள் தங்கள் மனக்குறையை மகேசனிடம் முறையிட்டனர்.

இறைவன் அந்த மலையை கிருஷ்ணா நதிக்கு வழிவிடும்படி ஆணையிட்டார். அதன்படி மலைகுடையப்பட்டு நதி செல்வதற்கு இடமளிக்கப்பட்டது. நதி சீராக ஓட ஆரம்பித்தது.

பெஜ்ஜம் என்ற தெலுங்குச் சொல்லுக்கு குகை என்பது பொருள். இறைவன் மலையைக் குடைந்து கிருஷ்ணா நதிக்கு வழிவிட்டதால் இந்தப் பகுதி பெஜ்ஜவாடா என அழைக்கப்பட்டது. பெஜ்ஜவாடா பின்னாளில் விஜய வாடா ஆகியது.

இந்த துர்க்கையை வழிபடுவோர் இல்லத்தில் தங்க மழை பொழிவதால் இவள் கனக துர்க்கா என்று அழைக்கப்படுகிறாள்.

இந்திரகில முனிவர் பார்வதியே தனக்கு மகளாகப் பிறக்க வேண்டும் என்று கடுமையான தவமிருந்தார். அவரது தவத்துக்கு மகிழ்ந்த பார்வதியும் அவர் முன் தோன்றி இந்திரகிலர் ஒரு குன்றாக வடிவெடுத்தால் அக்குன்றில் தான் அவரது மகளாக வீற்றிருப்பதாக வரமளித்தாள்.

தேவியின் பாதங்கள் படுவதற்காக இந்திரகிலர் குன்றாக மாறி நின்றார். பார்வதி தேவியும் ஒரு மழலையாக உருவெடுத்து அந்தக் குன்றில் வந்து கொலுவீற்றிருந்தார் என கந்தபுராணத்தில் கூறப்படுகிறது.

தாட்சாயிணியின் தந்தை தட்சன் சிவபெருமானுக்கு எதிராக ஒரு பெரிய யாகம் செய்தான். தன்னை அழைக்காமல் பெரிய யாகமொன்று தட்சன் செய்யத் தொடங்கியது சிவபெருமானுக்கு வருத்தமாயிருந்தாலும் அது குறித்து கவலைப்படாமல் வாளாயிருந்தார்.

ஆனால் தாட்சாயிணி சும்மா இருக்கவில்லை. தன் தந்தையின் அகங்கார நிலையைத் தட்டிக் கேட்டாள். ஆயினும் தட்சனால் அவமானமடைந்தாள். அதனால் அவன் வளர்த்த வேள்வித்தீயிலே விழுந்து உயிரை விட்டாள்.

சிவபெருமான் தாட்சாயிணியின் சடலத்தைக் கையில் ஏந்தி, தாண்டவம் ஆடினார். அப்போது விஷ்ணு சிவனின் கோபத்தை அடக்க தாட்சாயிணியின் உடல் மீது தனது சக்ராயுதத்தை எறிந்தார். அது உடலைத் துண்டு துண்டாக்கியது. அந்த துண்டுகள் விழுந்த இடங்களெல்லாம் சக்தி பீடங்களாகின. அதில் ஒரு துண்டு விழுந்த இடமே இந்த விஜயவாடா என்று கூறப்படுகிறது. இங்கே கனக துர்க்கா தேவி மகிஷாசுரமர்த்தினியாகக் காட்சி யளிக்கின்றாள்.

சிறப்பு மிக்க இந்த கனக துர்க்கா ஆலயத்தை மகாபாரத காலத்தில் தர்மர் அமைத்ததாகவும், இங்குள்ள மல்லேஸ்வரராகிய சிவலிங்கத்தை அகத்தியர் பிரதிஷ்டை செய்ததாகவும் கூறப்படுகிறது. ஆயினும் இந்த கனக துர்க்கை கோயிலை கி.பி பத்தாம் நூற்றாண்டில் திரிபுவனன் என்ற சாணக்கிய மன்னன் கட்டியதாகக் கல்வெட்டுக்கள் கூறுகின்றன.

இந்தக் கனக துர்க்கை ஆலயத்தில் நவராத்திரி விழா சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு விதமான அலங்காரத்துடன் தேவி பக்தர்களுக்குக் காட்சியளித்து, அருளை வாரி வழங்கிக் கொண்டிருப்பாள்.

பாலா திரிபுர சுந்தரி, காயத்ரி, அன்னபூரணி, மகாலட்சுமி, சரஸ்வதி, லலிதா திரிபுரசுந்தரி, துர்க்கா தேவி, மகிஷாசுரமர்த்தினி, ராஜராஜேஸ்வரி ஆகிய அலங்காரங்களில் தேவி விதவிதமாகக் காட்சியளிப்பாள். விஜயதசமியன்று துர்க்கையை அன்னப்படகில் கிருஷ்ணா

நதியில் பவனி வரச் செய்வார்கள். நம்மவூர் தெப்போற்சவம் போன்று மின் அலங்கார ஒளியுடன் கூடிய அலங்காரத்தில் தேவி அழகு பொங்க வீற்றிருப்பாள். இந்த தெப்போற்சவ விழாவுக்கு நௌகக விஹாரம் என்று பெயர்.

விஜயதசமியன்று தேவியை இந்தக் கோலத்தில் தரிசிப்பவர்களுக்கு வெற்றி மழை நிச்சயம் என்று கூறப்படுகின்றது.

## 10. மத்தூர் துர்க்கை

திருத்தணியிலிருந்து திருப்பதி செல்லும் பெருஞ்சாலையில் பொன்பாடி ரயில் நிலையத்திற்கு மேற்கே மத்தூர் என்னும் கிராமத்தில் அமைந்துள்ளது இந்த துர்க்கையம்மன் ஆலயம். இதனை மகிஷாசுரமர்த்தினி கோயில் என்றும் அழைக்கின்றனர்.



சுமார் ஐம்பது அண்டுகளுக்கு முன்னர் சக்திமேடு என்று அழைக்கப்பட்ட இந்த இடத்தை 'அரக்கோணம் - ரேணிகுண்டா' இரயில்பார்தை போடும் பணியின் போது சமன்படுத்த மண்ணைத் தோண்டி மேட்டைக் கரைத்த போது கடப்பாறையில் ஏதோ பொருள் தட்டுப்படுவது போல உணர்ந்தமையால் மேட்டை அகழ்ந்து பார்த்தனர். அங்கே அன்னை மகிஷாசுரமர்த்தினியின் அழகுத் திருவுருவம் சிலா வடிவமாகக் காட்சியளித்தது. அம்மன் பக்தர்களின் ஆனந்தத்திற்குக் கேட்கவா வேண்டும். ரயில் பாதையை மறைக்காத அளவு அருகிலேயே கோயில் ஒன்றையும் அமைத்தனர்.

மகிஷாசுரன் என்ற அரக்கன் எருமைத் தலையும் மனித உடலும் கொண்டவன். பல காலம் தவமிருந்து பெண்ணால் மட்டுமே தனக்கு மரண மேற்பட வேண்டும் என்று பெற்ற வரத்தால் தேவர்களைக் கொடுமை செய்ய ஆரம்பித்தான்.

அவனது கொடுமைக்கு முடிவு கட்ட அன்னை புறப்பட்டாள். எட்டுக்கரங்களுடன் சிம்மவாகினியாய் வந்து திரிசூலத்தால் மகிஷனை வதைத்த தேவி கோபம் தணிந்தவளாய் தவறை உணர்ந்த மகிஷனை மன்னித்து அவன் மீதே நின்று ஆனந்தத் தாண்டவமும் புரிந்தாள்.

காண்பதற்கரிய அந்தத் துர்க்கையின் அனந்த நடனக் காட்சியை மத்தூர் துர்க்கை ஆலயத்தின் கருவறையில் காணலாம். வழக்கமாக எருமைத்தலை மட்டும் இல்லாமல் முழு உடலுமே எருமை வடிவத்தில் தேவியின் காலடியில் காணப்படுகிறது.

இந்தத் துர்க்கையம்மன் ஆலயத்தில் நவராத்திரி விழா சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றது.

இந்தத் தேவி மகிஷனை வதைப்பதற்கு முன் தவமிருந்த ஒன்பது நாட்களே நவராத்திரியாய் கொண்டாடப்படுகிறது.

தமிழ்ப்புத்தாண்டு அன்று 1008 பால்குட அபிஷேமும் அதன் பின்னர் அம்மனுக்குச் செய்யப்படும் செம்பு கவச அலங்காரமும் மிகச் சிறப்பானது. அதுமட்டுமல்லாது ஒவ்வொரு பௌர்ணமி தினத்தன்றும் இந்த அம்மனுக்கு நன்பகல் பன்னிரண்டு மணிக்கு நூற்றியெட்டு பால்குட அபிஷேகமும் நடைபெறுகிறது. இஃது பல சமயங்களில் உபயதாரர்களின் விருப்பத்தின் பேரில் அமாவாசைத் தினங்களிலும் செய்யப்படுகின்றது.

ஒவ்வொரு ஞாயிறு, செவ்வாய், வெள்ளிக் கிழமைகளில் இராகு கால பூஜை சிறப்பாக நடத்தப்படுகின்றது. அன்றைய தினத்தில் எலுமிச்சை தீபம் ஏற்றி வழிபாடு செய்யப்படுகிறது.

இந்தத் துர்க்கையின் ஆலயத்திற்கு ஒரு மண்டலம் வந்து விளக்கேற்றி அம்மனை வழிபட்டால். எண்ணிய காரியம் யாவும் நிறைவேறிடும். அதுமட்டுமல்ல. கல்யாணமாகாத கன்னிப் பெண்களுக்கு விரைவிலேயே திருமணம் கைக்கூடும்.

துர்க்கையின் பார்வை படுமிடத்தில் ஒரு பெரிய வேப்பமரம் இருக்கிறது. இந்த மரத்தின் இலை கசப்பதில்லை. இதன் கசப்பையெல்லாம் மகிஷாசுரமர்த்தினி எடுத்துக் கொள்கிறாள் என்று கூறப்படுகின்றது. எவ்வளவு கடுமையான நோய்வாய்ப்பட்டவரும் இந்த மரத்தின் வேப்பிலையை உட்கொண்டால் மூன்றே நாட்களுக்குள் நோய் தீர்ந்து விடுமாம். இது இப்பகுதி மக்களின் முழு நம்பிக்கையாக உருபெற்றுள்ளது.

## 11. ஹைதராபாத் விஜய துர்க்கை

ஆந்திர மாநிலத் தலைநகர் ஹைதராபாத்தில் உள்ள மெஹ்தி பட்டினத்தில் உள்ளது விஜய துர்க்கை ஆலயம்.



இன்று இந்த துர்க்கை கோயில் இருக்குமிடத்தில் ஒரு காலத்தில் 'திகுடு பாவி' என்ற ஒரு பெருங்கிணறு இருந்தது. அந்த கிணற்று நீர்தான் சுற்றியுள்ள கிராமங்களுக்குக் குடி நீர் அளித்து வந்தது. இந்தக் குடிநீரின் புனிதம் கருதி கிணற்றுக்குப் பக்கத்தில் ஒரு சிறிய கற்சிலையொன்றை ஸ்தாபித்து அதனை மைசம்மா (மகிஹம்மா?) என்று வணங்கி வந்தனர்.

இந்த கிணற்றுக்குச் சொந்தக்காரர்களான ஆக்குலவாரு, குருஜாலவாரு என்ற இரு நிலச்சுவான்தாரர்கள் தலைமையில் இப்பகுதி மக்கள் கிணற்றைச் சுற்றியுள்ள விளை நிலங்களில் விவசாயம் செய்து வந்தனர். அறுவடை சமயத்தில் கிடைக்கும் முதல் நெல்மணிகளை இந்த தேவதைக்குப் படைத்து வயல்களில் இறைத்து விடுவர்.

இந்தக் கிராமத்தின் பக்கத்து கிராமமான குடிமல்சா புரத்தில் வசித்து வந்த சலவைத் தொழிலாளர்கள் தாங்கள் ஏதேனும் விழா எடுத்தால் ஹைதராபாத் நிஜாமுடைய அரண்மனை யானையைக் கூட்டிவந்து திகுடுபாவி கிணற்று நீரால் நீராட்டி விழாவைத் துவங்குவார்கள்.

புனிதம் நிறைந்த இந்தக் கிணற்று நீர் நோய்வாய்ப் பட்டவர்களுக்கும் அருமருந்தாக அளிக்கப்பட்டது. 1930ல் இப்பகுதியைத் தாக்கிய பயங்கர பிளேக் நோயில் பாதிக்கப்பட்டவர்கள் இங்கு வந்து தங்கி திகுடுபாவி கிணற்று நீரைப் பருகி குணமடைந்ததாக கூறுகின்றனர்.

1940ம் ஆண்டு கிணற்றுக்குப் பக்கத்தில் மனிதக் கைவிரல்கள் போன்று காளான்கள் முளைத்தது. அதனைப் பிடுங்கிக் களைய முற்பட்ட போது ரத்தம் பீறிட்டதாம். மகிஷம்மாவே அங்கு காளான் வடிவில் தோன்றி காட்சியளிப்பதாகக் கருதிய மக்கள் நிற்காமல் பீறிட்டு அடிக்கும் குருதியை நிறுத்த உப்பைக் கொட்டி கூடையால் மூடிவிட்டனர். பின்னர் அந்தக் கூடையின் மீது ஓர் அம்மன் சிலையைப் பிரதிஷ்டை செய்து உப்பலம்மா என்று வணங்கத் தலைப்பட்டனர்.

இரவு நேரத்தில் இந்த உப்பலம்மா ஊரைக்காவல் செய்வதாக ஊர்மக்கள் நம்பினர். வெள்ளைச் சேலை அணிந்து கொண்டு இந்த தேவதை கிராமத்தை வலம் வரும் காட்சியைப் பலர் கண்டதாகத் தெரிவித்தனர். ஆகுலுக்காரு வம்சத்தைச் சேர்ந்த சுதேஷ்வன் கனவில் இந்த தேவதை

தோன்றி தனக்கு ஒரு கோயில் கட்டித்தரக் கேட்க அவரும் இந்த உப்புலம்மாவுக்கு ஒரு சிறு கோயிலைக் கட்டினார்.

உப்புலம்மாவையும் மையம்மாவையும் அக்கிராம மக்கள் வணங்கி வளமான வாழ்க்கை வாழ்ந்தனர். விளை நிலங்கள் கொஞ்சம் கொஞ்சமாக காலனிகளாக உருவாயிற்று. கோயிலை மையமாக வைத்து மூன்று காலனிகள் உருவாயின. மக்களின் வழிபாடு பெருகப் பெருக கோயிலை பெரிய அளவில் கட்ட வேண்டிய தேவை ஏற்பட்டது.

மூன்று காலனிவாசிகளும் நிதி திரட்டி 1998ல் பெரிய அளவில் கோயிலைக் கட்டினர். திருடுபாவி கிணறு மூடப் பட்டு அதன் மேல் துர்க்கை சிலை 'பிரதிஷ்டை' செய்யப் பட்டது. இந்தத் துர்க்கைக்குப் பரிவார ஆலயங்கள் அமைக் கப்பட்டு விநாயகர், சந்திர மௌலீஸ்வரர், கோதண்டராமன், நாகதேவதை, ஆஞ்சநேயர் சிலைகள் காசி மற்றும் காஞ்சியி லிருந்து கொண்டுவரப்பட்டு பிரதிஷ்டை செய்யப்பட்டன.

இந்தக் கோயிலில் நவராத்திரி விழா சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. ஒன்பது நாட்களும் ஒன்பது வகை அலங்காரங்களுடன் துர்க்கை அலங்கரிக்கப்படுவார். விழா நிறைவில் சண்டிஹோமம் நடைபெறும்.

ஸ்ரீராமநவமியன்று ஆஞ்சநேயருக்கும் கோதண்ட ராமருக்கும் சிறப்பு அபிஷேக அலங்காரங்களும் சிவராத்திரி அன்று சந்திர மௌலீசுரருக்குச் சிறப்பு அபிஷேக அலங்காரங்களும் நடைபெறும். அன்றைய தினங்களில் சிறப்பு அன்னதானமும் நடைபெறும்.

இத்தனை சிறப்பு ஒன்பது நாட்களும் ஒன்பது வகை அலங்காரங்களுடன் துர்க்கை அலங்கரிக்கப்படுவாள். விழா நிறைவில் சண்டி ஹோமம் நடைபெறும்.

இத்தனை சிறப்பு மிக்க விஜய துர்க்கையை இவ்வூர் மக்கள் தங்கள் குல தெய்வமாகவே போற்றி வழிபடுகின்றனர்.

## 12. மருதங்குழி – உதயனூர் தேவி

கேரள மாநிலம் திருவனந்தபுரத்திலிருந்து 8 கி.மீ தூரத்திலுள்ள மருதங்குழி என்னுமிடத்தில் உதய தேவி ஆலயம் உள்ளது. இந்த உதயனூர் தேவி இங்கு கோயில் கொண்டமைக்கு ஒரு கதையும் கூறப்படுகிறது.



ஆற்றில் குளிக்கச் சென்ற சிறுவன் ஒருவன் கையில் சிலை ஒன்று தட்டுப்படவே சிரமப்பட்டு எடுத்து வந்து தன் வீட்டில் விளையாட்டுப் பொருளாக வைத்து வழிபடத் தொடங்கினான். வீட்டில் ஓர் இடத்தினை சுத்தம் செய்து பலாமரப்பெட்டி ஒன்றின் மீது ஒரு சுத்தமான வெள்ளை வேஷ்டியை விரித்து தான் கொண்டு வந்த விக்கிரகத்தை அதன் மேல் வைத்து பூஜை செய்ய ஆரம்பித்தான்.

வெறும் பூஜை மட்டும் போதுமா தேவி சிலைக்கு அன்னநிவேதனம் தரப்பட வேண்டுமே என்ன செய்வது.?

வீட்டில் இருந்த அரிசி மாவுடன் தேங்காய், வாழைப்பழம் இவைகளைச் சேர்த்து அடை மாதிரி ஒரு பொருளைச் சமைத்தான். படையலாக அம்மன் முன் வைத்து அதனை சாப்பிடுமாறு வற்புறுத்தினான். தான் முதன் முதலாகப் படைக்கும் அந்த நைவேத்தியத்தியத்தை அம்மன் அவசியம் சாப்பிட்டே ஆக வேண்டும் என்று கெஞ்சினான்.

தேவி சாப்பிட்டால்தான் தான் சாப்பிடுவேன் என்று பிடிவாதமாக இருந்து அப்படியே கண்ணயர்ந்து விட்டான். கனவில் அன்னை அவன் அன்புடன் அளித்த அடையைச் சாப்பிட்டாள். கண்விழித்துப்பார்த்த சிறுவன் தேவின் முன் வைக்கப்பட்டிருந்த அடை காணாமல் போயிருப்பதைக் கண்டான். அந்த அடையை தேவி தான் சாப்பிட்டாள் என்று கருதிய அச்சிறுவன் அந்த செய்தியைத் தன் அன்னையிடம் கூறினான்.

அதே சமயம் ஊர் பெரியவர் ஒருவரின் கனவில் அம்மன் தோன்றி தான் அந்த சிறுவன் வீட்டில் தங்கியிருப்பதையும் அச்சிறுவன் தனக்கு அளித்த அடையே நிவேதனமாக உகந்தது என்றும் தெரிவித்தாள்.

மறுநாள் ஊரே திரண்டு வந்து அச்சிறுவன் வீட்டிலுள்ள தேவியை வணங்கியது. அந்தச் சிறுவன் இல்லமே அன்னைக்கு உகந்த கோயிலாக மாறியது.

அன்று சிறிய ஓட்டு வீட்டில் குடியிருந்த அம்மன் இன்று கருவறை மண்டபம் என வளர்ச்சியடைந்த பெரிய கோயிலாகக் காட்சியளித்துக் கொண்டிருக்கிறது.

முகப்பு கோபுரத்தில் சங்கு, சக்கரம், நாந்தகம், வாள், திரிசூலம் ஏந்தி நான்கு கரத்துடன் சுதை சிற்பமாக காட்சியளிக்கிறாள்.

. இதனையடுத்து அலங்கார ஒடு வேயப்பட்ட மண்டபமும் அதனையடுத்து கருவறையும் அமைந்துள்ளது. கருவறையில் உதயனார் தேவி காட்சித் தருகிறாள். துர்க்கையின் அம்சமும் பத்ரகாளியின் அம்சமும் கலந்த திருவடிவம். இவளை துர்க்கையாக இங்கு வழிபடுகின்றனர். இந்த துர்க்கை ஆதியில் உதயனூர்கோயிலில் இருந்ததாகவும் சிறுவனின் அன்புக்காக ஆற்றிலே அடித்து வரப்பட்டு இங்கு கோயில் கொண்டதாகவும் கூறப்படுகிறது.

இந்தத் துர்க்கையின் கோபத்தைத் தணிக்க தினசரி சந்தனக் காப்பு சார்த்தப்படுகிறது. இந்த அலங்காரத்தில் தேவியே நேரில் சிரிப்பது போல காட்சி தருகின்றாள். தேவியின் தலை, முக ஆபரண அலங்காரங்கள் இவைகளைத் தரிசனம் செய்ய பலவித உயரங்களில் தட்டு விளக்குகள் ஒளி சிந்துகின்றன. தேவிக்குப் பிரசாதமாக அடை படையலிடப்பட்டு பக்தர்களுக்கு வழங்கப்படுகிறது.

தேவியின் எதிரில் வேண்டுதலுக்காக தேங்காய் மூடியில் எண்ணெய் ஊற்றி தீபமேற்றுகின்றனர். பரிவார தெய்வங்களாக ஐயப்பனும், மாடன் தம்புரானும், மகா கணபதியும், நாகர்களும், நவக்கிரகங்களும் காட்சி அளிக்கின்றனர்.

இந்தத் துர்க்கைக்கு வேண்டுதல் செய்பவர்கள் தங்கள் கோரிக்கை நிறைவேறியவுடன் காணிக்கையாக தேவியின் வாளால் வாழை மரத்தை வெட்டி 'குருதி தர்ப்பணம்' செய்கின்றனர்.

வருடாந்திர திருவிழாவாக 'பிரதிக்ஷா' கொண்டாடப் படுகிறது. மூன்று வருடத்திற்கொருமுறை ஸ்ரீ உலகுடைய பெருமாள் உருட்டு உற்சவம் (உறியடித் திருவிழா?) நடைபெறுகிறது.

## 13. அம்மன் குடி துர்க்கா பரமேஸ்வரி

கும்பகோணத்திலிருந்து 15 கி.மி. தூரத்திலுள்ளது அம்மன் குடி துர்க்கா பரமேஸ்வரி ஆலயம். இந்த தலத்திற்குச் செல்ல கும்பகோணத்திலிருந்தும் ஆடுதுறையிலிருந்தும் பேருந்துகள் செல்கின்றன.

மனிதர்களின் கொடுஞ்செயல்களுக்குத் தெய்வம் தண்டனை அளிப்பது போல் தெய்வங்கள் செய்யும் கடுஞ்செயல்களுக்கும் தண்டனை அளிக்கப்படுகிறது என்பது



புராணங்களை நோக்க தென்படும் உண்மைகளாகும். பிரம்மனின் தலையை சீவியதனால் பிரம்மஹத்தி தோஷத்தினால் சிவனார் பட்ட பாடும் இராவணனைக் கொன்ற பாவம் தீர்க்க இராமன் சிவபூஜை செய்து தீர்த்த யாத்திரை செய்ததும், சூரசம்ஹாரம் செய்த முருகன் அந்தப் பாவம் தொலைய சிவவழிபாடுகள் செய்ததும் அறியப்படும் செய்திகளாகும். இந்த வகையில் மகிஷாசுரனை அழித்த தேவிக்கு மட்டும் பாவம் பற்றாமல் இருக்குமா என்ன?

மகிஷாசுரனைத் தனது சூலத்தால் மாய்த்த பாபத்தைத் தொலைக்க தேவியானவள் இந்த அம்மன் குடியில் பன்னிரண்டு ஆண்டுகள் கடுமையான தவமியற்றினாள். அவளது தவம் முடிந்த நிலையில் சிவபெருமான் தேவிக்கு காட்சியளித்து பக்தர்களின் துயரங்களைக் களைய இந்த இடத்திலேயே கோயில் கொண்டு அருள்பாலிக்கும்படி பணித்தார். தேவி தவம் செய்த இடமாதலின் இந்த அம்மன் குடி 'தேவி தபோவனம்' என்ற பெயராலும் அழைக்கப் படுகின்றது.

தேவர்களுக்குப் பெரும் துன்பங்களைக் கொடுத்து வந்த மகிஷாசுரனை அழிக்க துர்க்கையாக வடிவமெடுத்த தேவி போரின் முடிவில் அவனை மாய்த்தாள். ஆனால் தேவியின் திரிசூலம் மகிஷனின் ஆத்மலிங்கத்தில் பட்டுவிட்டதால் அவளது பாபத்தைப் போக்க வேண்டி இந்த அம்மன் குடி கோயிலின் வடக்கிலிருக்கும் பாப விமோசன தீர்த்தத்தில்

முழுக்காடி விக்னஹரி விநாயகரையும் கயிலாசநாதரையும் வணங்கி பன்னிரண்டு ஆண்டுகள் கடுமையான தவம் செய்தார். தேவியின் தவத்திற்கு மனமிரங்கிய சிவபெருமான் அவளது பாவங்களை நீக்கியதுடன் இத்தலத்திற்கு வந்து வேண்டிக் கொள்ளும் பக்தர்களின் பாவங்களையும் களைந்து அருள் செய்யும்படி தேவியைப் பணித்தார். சிவபெருமானின் விருப்பப்படியே அருள்மிகு துர்க்கா பரமேஸ்வரி, இத்தலத்தின் கயிலாசநாதர் சன்னதிக்கு வலப்புறத்தில் கிழக்கு திசை நோக்கி சிம்ம வாகனத்துடன் தனது எட்டு கைகளிலும் எட்டுவகை ஆயுதங்களை ஏந்தி பக்தர்களின் பாவங்களைப் போக்கிக் கொண்டிருக்கிறாள்.

ஆலயப் பிரகாரத்தின் இருபுறமும் அருள்மிகு துர்க்கா கணபதியும், சிவகணபதியும் நம்மை வரவேற்கும் முகமாக அமைத்துள்ளனர். இவர்களையடுத்து முருகன், கயிலாசநாதர், பார்வதிதேவி ஆகியோர்கள் தனித்தனி சன்னதிகளில் கொலு வீற்றிருக்கின்றனர்.

கயிலாசநாதர் சந்நிதிக்கு வலப்புறத்தில் கிழக்கு நோக்கி சிம்ம வாசனத்துடன் தனி சன்னதியில் காட்சி தருகிறாள் அன்னை துர்க்கா பரமேஸ்வரி. வலக்கரங்கள் நான்கிலும் சக்தி, சூலம், சக்கரம், பாணம் ஏந்தி, இடக்கரங்கள் நான்கிலும் சங்கு, வில், கேடயம், மகிஷன் சமேதமாக சிம்மத்தின் மீது ஏறி அமர்ந்தவளாகக் காட்சி தருகின்றாள்.

துர்க்கை தனது ஒரு கரத்தினால் மகிஷாசுரனை அலேக்காக தூக்கிய படி காட்சியளித்தாலும் கண்களில் அவனை சம்காரம் செய்வதற்கான எந்தக் கோபக் குறியையும் காணமுடியவில்லை.

இந்த அம்மன் குடி துர்க்கை கோயில் சோழநாட்டுப் பகுதியில் அமைந்திருந்தாலும் கருவறையில் குடி கொண்டுள்ள துர்க்கையம்மன் கீழைச் சாளுக்கிய நாட்டு பாணியில் அமைந்துள்ளாள்.

சோழ நாட்டில் அம்மன் குடியில் பிறந்து முதலாம் இராஜராஜனின் படைத்தலைவனாகப் பணியாற்றிய கிருஷ்ணன் ராமன் பிரம்மராயன் இந்தக் கோயிலை கி.பி 944ல் கட்டி முடித்து இராசராசேச்வரம் எனப் பெயரிட்டதாக ஒரு கல்வெட்டு வரலாற்றுக் குறிப்பு கிடைக்கிறது.

கீழைச்சாளுக்கிய நாட்டில் ஏற்பட்ட கலவரத்தை அடக்கச் சென்ற இராஜராஜன் படைகளில் இந்த கிருஷ்ணராம பிரம்ம ராயன் படைத்தலைவனாகச் சென்று அங்கிருந்து இந்த சிலையைக் கொணர்ந்து தம் சொந்த ஊரில் பிரதிஷ்டை செய்திருக்க வேண்டும்.

அட்சய ஆண்டு சித்திரை மாதம் எப்ரல் 1986ல் பூரண கும்பாபிஷேகம் செய்யப்பட்ட இக்கோயிலில் ஆறு கால பூஜையும் அருமையாக நடைபெற்று வருகிறது.

செவ்வாய்கிழமைகளில் குறிப்பாக தேய்பிறை சதுர்த்தசி செவ்வாய்கிழமைகளிலும், வளர்பிறை அஷ்டமியிலும், அமாவாசை பௌர்ணமி நாட்களிலும் கோயிலுக்கு அருகிலுள்ள பாப விமோசன குளத்தில் நீராடி துர்க்கா பரமேஸ்வரியை வணங்குவதால் பக்தர்கள் சுவாச, காச நோய்களிலிருந்து விடுகின்றனர்.

நவகோள்களுக்கும் துர்க்கை அதிதேவதையாக இருப்பதால் எந்தக் கிரக தோஷத்திற்கும் துர்க்கை பூசை இங்கு சிறப்பாகச் செய்யப்படுகின்றது. இந்தக் கோயிலில் நவக்கிரகங்களுக்குத் தனி சன்னதி கிடையாது.

தேவர்களின் சக்தியினால் தோற்றம் பெற்ற இந்த துர்க்கையை வணங்குவதால் தேவர்களும் மகிழ்ச்சியடைகின்றனர். மணமாகாதவர்களும், மகப்பேறு இல்லாதவர்களும் இந்தத் துர்க்கை அம்மனை வணங்கிப் பலனடைகின்றனர்.

## 14. திருக்கழிப்பாலை ஸ்ரீ சதுராக்னி துர்க்கை

சிதம்பரம் நகருக்குத் தெற்கே சுமார் 10 கி.மீ தொலையில் உள்ள சிவபுரி தலத்திற்கு தெற்கே உள்ளது திருக்கழிப்பாலை. இந்தத் தலத்திற்குச் செல்ல சிதம்பரம் பேருந்து நிலையத்திலிருந்து ஆட்டோக்கள் கிடைக்கின்றன.



திருக்கழிப்பாலை இறைவர் பால்வண்ண நாதேஸ்வரர். இறைவி - வேத நாயகி மூவராலும் பாடல் பெற்ற இத்தலத்தின் வடக்கு பிரகாரத்தில் தனிச் சன்னதியில் காட்சியளிப்பவள் சதுராக்னி துர்க்காதேவி.

ஒரு முறை ஈசன் மீது ஏவப்பட்ட நான்கு மாமறை வேத மூர்த்திகளும் தாங்கள் ஈசனையே எதிர்த்ததற்காக பிராயச்சித்தம்தனைத் தந்தருளுமாறு ஸ்ரீ பிட்சாடனரை வேண்டினர். பிட்சாடனரும் பரிவு கொண்டு நான்கு வேத மூர்த்திகளிடமும் எங்கு அம்பிகையே வேதமந்திரங்களையும் மாமறைத் துதிகளையும் ஓதி என் துணைவியாய் வேதவல்லியாய் அவதாரம் எடுக்கின்றாளோ, எந்த வேதமானது எம்மீது ஏவப்பட்டு பின்னப்பட்டதோ, அப்பின்னங்களைக் களைக்கின்ற துர்க்கை தேவியாய் அங்கு நான்கு வேத மறைகளின் உண்மையான மூல வேதாக்கினியிலிருந்து அம்பிகை தோன்றி சதுராக்கினி துர்க்கா தேவியாய் வடிவெடுத்து நிற்பாள். அங்கு சென்று பிராயசித்தம் பெறுவீர் என சிவபெருமான் ஆணையிட்டார்.

சிவபெருமான் உரைத்த அந்த வேதமூர்த்திகளின் பின்னங்கள் களையப் பெற்ற இடமே இந்த சதுராக்கினி

துர்க்காதேவி ஆலயமாகும். தவறான முறைகளுடன் வேத மந்திரங்களைத் தவறாக உச்சரித்தமைக்கும் இதனாலான வேதபின்னங்களையும் முறையான பூஜைகளில் மன்னித்து நல்வரங்களை அருள்பவளாக இங்கு சதுராக்கினி துர்க்கா தேவியாகக் காட்சி தருகின்றாள்.

சொல்லில் அடங்காப் பெருமைக்குரிய சதுராக்கினி துர்க்காதேவியானவள் பக்தர்களின் மனக் கொதிப்பை நீக்கும் மாமருந்தாகத் திகழ்கின்றாள். மனத்தளவில் பிரச்சனை களுக்கு முடிவு தெரியாமல் வருத்தம் கொண்டிருப்பவர் களுக்கு இந்தத் துர்க்கையானவள் மனத்துயரை தீர்க்கும் மாமருந்தாகக் காட்சி தருகின்றாள்.

எட்டு திருக்கரங்களுடன் வடக்குப் பிரகாரத்தில் கம்பீரமாய்க் காட்சி தரும் இந்த சதுராக்கினி துர்க்கையை ஒரு முறை மனதாரத் தொழுதாலே போதும். நம்மிடம் உள்ள டென்ஷன், படபடப்பு, கோபம், கொந்தளிப்பு அத்தனையும் இருந்த இடம் தெரியாமல் பறந்தோடிவிடும்.

சின்ன ஆலயம்தான் என்றாலும் இந்தத் துர்க்கையின் பெருமை அளவிடற்கரியது. இந்தத் துர்க்கையுடன் கூடிய சிவாலயம் முன்பு காரைமேடு என்ற இடத்தில் இருந்ததாகவும் அந்த ஆலயம் கொற்றிட நதியால் கொள்ளப்பட்டமையால் இப்போதுள்ள இடத்தில் அமைக்கப்பட்டது என்றும் கூறப்படுகிறது.

ஆலயத்திற்குத் திருப்பணி வேலைகள் இப்போது நடைபெற்று வருகின்றது.

“நால்வேத நற்றீயில்
நாதனவன் நிழல் வேண்டி
பால்வண்ணன் பாத முறை
பரஞ்ஜோதி துர்க்கையவள்
சால்புடனே சதுராக்கினி
சக்தியுடன் காண்போமே”

என்று துதித்து ஸ்ரீ சதுராக்கினி துர்க்கையின் அருளைப் பெறுவோமாக.



# 10. துர்க்கை துதிப்பாடல்கள்

## அ. நவதுர்கா மந்திரங்கள்

**மூல துர்காவின் மந்த்ரம்:**

ஓம் ஹ்ரீம் தும் துர்க்காயை நம:

**வன துர்காவின் மந்த்ரம்:**

ஓம் ஐம் ஹ்ரீம் ஸ்ரீம் தும்
உத்திஷ்ட புருஷி கிம்ஸ்வபிஷி பயம்மே
ஸமுபஸ்திதம் யதிசக்ய மசக்யம்வா தன்மே
பகவதி சமய ஸ்வாஹா

**சூலினி துர்காவின் மந்திரம்:**

ஓம் ஸ்ரீம் ஹ்ரீம் ச்ரௌம் தும்
ஜ்வல ஜ்வல சூலினிதுஷ்ட க்ரஹ
ஸூம் பட் ஸ்வாஹா

**ஜாதவேதோ துர்காவின் மந்த்ரம்:**

ஜாதவேதஸே ஸுனவாம ஸோமமராதியதோ
நிதஹாதி வேத: ஸந: பர்ஷததி துர்காணி
விச்வா நாவேவ ஸிந்தும் துரிதாத்யக்னி:

**சாந்தி துர்காவின் மந்த்ரம்:**

ஓம் ஹ்ரீம் தும் துர்காம் தேவீம்
சரணமஹம் ப்ரபத்யே.

**சபரி துர்காவின் மந்த்ரம்:**

ஹ்ராம் ஹ்ரீம் ஸௌ: க்லௌம் ஐம் ப்ரீம்
ஜ்வலத் துர்கே ஏஹ்யேஹி,
ஸ்புரப்ரஸ்புர ஆதிவிஷ்ணு ஸோதரி, அஸ்த்ர
ஜ்வலத்துர்கே, ஆவசயாவேசய ஜ்வலத்துர்காய
வித்மஹே ஜாஜ்வல்யமானாய தீமஹி தன்னோ
படபாநல: ப்ரசோதயாத், வமலவரயூம் ஜ்வலத்
துர்காஸ்த்ரே ஸூம்பட் ஸ்வாஹா

**லவண துர்காவின் மந்த்ரம்:**

ஓம் சிடி சிடி சண்டால்யை மஹா
சண்டால்யை அமுகம்மே வசமானய ஸ்வாஹா

**தீப துர்காவின் மந்த்ரம்:**

ஓம் ஆம் ஹ்ரீம் க்ரோம் அமும்
துர்கே ஏஹ்யேஹிஆவேசய ஆவேசய க்ரோம்
தும் துர்கே க்ரோம் ஹ்ரீம் ஆம் ஹூம்பட் ஸ்வாஹா

**ஆசூரீ துர்காவின் மந்த்ரம்:**

ஓம் கடுகே கடுகபத்ரே அஸூபகே ஆசூரி ரக்தே
ரக்தவாஸஸே அதர்வணஸ்யதுஹிதே அகோரேகோர
கர்ம காரிகே அமுகஸ்ய கதிம் தஹ தஹ உபவிஷ்டஸ்ய
குதம் தஹதஹ ஸூப்தஸ்யமனோ தஹதஹ
ப்ரபுத்தஸ்ய ஹ்ருதயம் தஹதஹ ஹனஹன பசபச
தாவத்தஹ தாவத்பச யார்வன்மே வசமாயாதி ஹூம்பட்
ஸ்வாஹா

**ஜயதுர்காவின் மந்த்ரம்:**

ஓம் துர்கே துர்கே ரக்ஷினி ஸ்வாஹா

திருஷ்டி துர்காவின் மந்த்ரம்:

ஓம் ஹ்ரீம் தும் துர்கே பகவதி
மனோக்ரஹம் மதமத ஜிஹ்வாபிசாசீருத்ஸாத –
யோருத்ஸாதய, ஹித திருஷ்டி அதிக திருஷ்டி
பரதிருஷ்டி, ஸர்பதிருஸ்டி, ஸர்வதிருஷ்டி
விஷம்நாசம் நாசய ஹூம்பட் ஸ்வாஹா

## ஆ. துக்க நிவாரண அஷ்டகம்
## (மஹிஷாஸுர மர்த்தினி விருத்தம்)

மங்கள ரூபிணி மதியணி சூலினி மன்மத பாணியளே:
சங்கடம் நீக்கிடச் சடுதியில் வந்திடும் சங்கரி சௌந்தரியே:
கங்கண பாணியன் கனிமுகங் கண்டநல்கற்பக் காமினியே
ஜெயஜெய சங்கரி கௌரி க்ருபாகரி துக்க நிவாரணி காமாக்ஷி

கானுறுமலரெனக் கதிர்ஒளி காட்டிக் காத்திட வந்திடுவாள்:
தானுறு தவஒளி தாரொளி மதியொளி தாங்கியே வீசிடுவாள்
மானுறு விழியாள் மாதவர் மொழியாள் மாலைகள் சூடிடுவாள்:
ஜெயஜெய சங்கரி கௌரி க்ருபாகரி துக்க நிவாரணி காமாக்ஷி

சங்கரி சௌந்தரி சதுர்முகன் போற்றிடச் சபையினில் வந்தவளே:
பொங்கரி மாவினில் பொன்னடி வைத்துப் பொருந்திட வந்தவளே
எங்குலந் தழைத்திட எழில் வடிவுடனே எழுந்தநல் துர்க்கையளே
ஜெயஜெய சங்கரி கௌரி க்ருபாகரி துக்க நிவாரணி காமாக்ஷி

தண தண தந்தண தவிலொலி முழங்கிடத் தண்மணி நீ வருவாய்
கண கண கங்கண கதிர்ஒளி வீசிடக் கண்மணி நீ வருவாய்
பண பண பம்பண பறையொலி கூவிட பண்மணி நீ வருவாய்
ஜெயஜெய சங்கரி கௌரி க்ருபாகரி துக்க நிவாரணி காமாக்ஷி

பஞ்சமி பைரவி பர்வத புத்திரி பஞ்சநல் பாணியளே:
கொஞ்சிடும் குமரனைக் குணமிகு வேழனைக் கொடுத்தநல் குமரியளே:
சங்கடம் தீர்த்திடச்சமரது செய்தநற் சக்தியெனும் மாயே:
ஜெயஜெய சங்கரி கௌரி க்ருபாகரி துக்க நிவாரணி காமாக்ஷி

எண்ணியபடி நீ யருளிட வருவாய் எங்குல தேவியளே:
பண்ணிய செயலின் பலனது நலமாய்ப் பல்கிட அருளிடுவாய்
கண்ணொளி யதனால் கருணையே காட்டிக் கவலைகள் தீர்ப்பவளே
ஜெயஜெய சங்கரி கௌரி க்ருபாகரி துக்க நிவாரணி காமாக்ஷி

இடர் தரும் தொல்லை இனிமேல் இல்லை யென்று நீ சொல்லிடுவாய்
சுடர் தரும் அமுதே சுருதிகள் கூறிச் சுகமது தந்திடுவாய்:
படர்தரும் இருளில் பரிதியாய் வந்து பழவினை ஓட்டிடுவாய்:
ஜெயஜெய சங்கரி கௌரி க்ருபாகரி துக்க நிவாரணி காமாக்ஷி
ஜெய ஜெய பாலா சாமுண்டேஸ்வரி ஜெய ஜெய ஸ்ரீதேவி:
ஜெய ஜெய துர்கா ஸ்ரீபரமேஸ்வரி ஜெய ஜெய் ஸ்ரீதேவி:
ஜெய ஜெய ஜெயந்தி மங்கள காளி ஜெய ஜெய ஸ்ரீதேவி:
ஜெயஜெய சங்கரி கௌரி க்ருபாகரி துக்க நிவாரணி காமாக்ஷி

## இ. ரோக நிவாரண அஷ்டகம்

1. பகவதி தேவி பர்வத தேவி
பலமிகு தேவி துர்க்கையளே
ஜெகமது யாவும் ஜெய ஜெய வெனவே
சங்கரி யுன்னைப் பாடி டுமே
உறந உறந தகதக பசபச வெனவே
தளிர்ந்திடு ஜோதி யானவளே
ரோகநி வாரணி சோக நிவாரணி
தாபநிவாரணி ஜெய துர்க்கா

2. தண்டினி தேவி தக்ஷிணி தேவி
கட்கினி தேவி துர்க்கையளே
தந்தன தான தனதன தான
தாண்டவ நடன ஈச்வரியே
முண்டினிதேவி முனையொளி சூலி
முனிவர்கள் தேவி மணித் தீவி
ரோகநி வாரணி சோகநி வாரணி
தாபநி வாரணி ஜெய துர்க்கா

3. காளினி நீயே காமினி நீயே
கார்த்திகை நீயே துர்க்கையளே
நீலினி நீயே நீதினி நீயே
நீர்நிதி நீயே நீர் ஒளியே
மாலினி நீயே மாதினி நீயே
மாதவி நீயே மான் விழியே
ரோகநி வாரணி சோகநி வாரணி
தாபநி வாரணி ஜெய துர்க்கா

4. நாரணி மாயே நான்முகன் தாயே
நாகினியாயே துர்க்கையளே
ஊரணி மாயே ஊற்று தாயே
ஊர்த்துவ யாயே ஊர் ஒளியே
காரணி மாயே காருணி தாயே
கானக யாயே காசி னியே
ரோகநி வாரணி சோகநி வாரணி
தாபநி வாரணி ஜெய துர்க்கா

5. திருமகளானாய் கலைமகளானாய்
மலைமகளானாய் துர்க்கையளே
பெருநிதி யானாய் பேரறிவானாய்
பெருவலி வானாய் பெண் மையளே
நறுமல ரானாய் நல்லவ ளானாய்
நந்தினி யானாய் நங்கையளே

ரோகநி வாரணி சோகநி வாரணி
தாபநி வாரணி ஜெய துர்க்கா

6. வேதமும் நீயே வேதியள் நீயே
வேகமும் நீயே துர்க்கையளே
நாதமும் நீயே நாற்றிசை நீயே
நாணமும் நீயே நாயகியே
மாதமும் நீயே மாதவம் நீயே
மானமும் நீயே மாயவளே
ரோகநி வாரணி சோகநி வாரணி
தாபநி வாரணி ஜெய துர்க்கா

7. கோவுரை ஜோதி கோமள ஜோதி
கோமதி ஜோதி துர்க்கையளே
நாவுறை ஜோதி நாற்றிசை ஜோதி
நாட்டிய ஜோதி நாச்சியளே
பூவுறை ஜோதி பூரண ஜோதி
பூதநற் ஜோதி பூர ணையே
ரோகநி வாரணி சோகநி வாரணி
தாபநி வாரணி ஜெய துர்க்கா

8. ஜெய ஜெயசைல புத்திரி ப்ரஹ்ம
சாரணி சந்த்ர கண்டி னியே
ஜெய ஜெய சூஷ் மாண்டினி ஸ்கந்த
மாதினி காத்யா யன்யயளே
ஜெய ஜெய கால ராத்திரி கௌரி
ஸித்திகா ஸ்ரீ நவ் துர்க்கையளே
ரோகநி வாரணி சோகநி வாரணி
தாபநி வாரணி ஜெய துர்க்கா

இந்தப் பாடலைச் செவ்வாய் கிழமை காலையிலும் அஷ்டமி தினத்திலும் படித்தால் நற்பலன்களை அடையலாம். நோயாளிகளின் ரோக நிவாரணத்திற்காக அவர்கள் அருகில் இருந்தும் மற்றவர்கள் படிக்கலாம்.

தேவியின் சந்நிதியில் படிப்பது சிறப்பு. திருவிளக்கின் முன்பும் படிக்கலாம்.

## ஈ. ஸ்ரீ ராகு கால துர்க்கா அஷ்டகம்

வாழ்வு ஆனவள் துர்க்கா வாக்கு மானவள்
வானில் நின்றவள் இந்த மண்ணில் வந்தவள்
தாழ்வு அற்றவள் துர்கா தாயும் ஆனவள்
தாபம் நீக்கியே என்னைத் தாங்கும் துர்க்கையே
தேவி துர்க்கையே ஜெய தேவி துர்க்கையே
தேவி துர்க்கையே ஜெயதேவி துர்க்கையே

உலகை யீன்றவள் துர்கா உமையு மானவள்
உண்மையானவள் எந்தன் உயிரைக் காப்பவள்
நிலவில் நின்றவள் துர்க்கா நித்யை யானவள்
நிலவி நின்றவள் எந்தன் நிதியும் துர்க்கையே
தேவி துர்க்கையே ஜெய தேவி துர்க்கையே
தேவி துர்க்கையே ஜெயதேவி துர்க்கையே
செம்மையானவள் துர்கா செபமுமானவள்
அம்மையானவள் அன்புத் தந்தை யானவள்
இம்மையானவள் துர்க்கா இன்ப மானவள்
மும்மையானவள் என்றும் முழுமை துர்க்கையே
தேவி துர்க்கையே ஜெய தேவி துர்க்கையே
தேவி துர்க்கையே ஜெய தேவி துர்க்கையே

உயிரு மானவள் துர்க்கா உடலுமானவள்
உலகமானவள் துர்க்கா எந்தன் உடைமை யானவள்
பயிரு மானவள் துர்க்கா படரும் கொம்பவள்
பண்பு பொங்கிட என்னும் பழுத்த துர்க்கையே
தேவி துர்க்கையே ஜெய தேவி துர்க்கையே
தேவி துர்க்கையே ஜெய தேவி துர்க்கையே

துன்ப மற்றவள் துர்க்கா துரிம வாழ்பவள்
துறையு மானவள் இன்பத் தோணி யானவள்

அன்பு உற்றவள் துர்க்கா அபய வீட்டவள்
நன்மை தங்கிட என்னுள் நடக்கும் துர்க்கையே.
தேவி துர்க்கையே ஜெய தேவி துர்க்கையே
தேவி துர்க்கையே ஜெய தேவி துர்க்கையே

குருவு மானவள் துர்க்கா குழந்தை யானவள்
குலமு மானவள் எங்கள் குடும்ப தீபமே
திருவு மானவள் துர்க்கா திருசூலி மாயவள்
திரு நீற்றில் என்னிடம் திகழும் துர்க்கையே
தேவி துர்க்கையே ஜெய தேவி துர்க்கையே
தேவி துர்க்கையே ஜெய தேவி துர்க்கையே

ராகு தேவனின் பெரும் பூஜை ஏற்றவள்
ராகு நேரத்தில் என்னைத் தேடி வருபவள்
ராகு காலத்தில் எந்தன் தாயே வேண்டினேன்
ராகு துர்க்கையே என்னைக் காக்கும் துர்க்கையே
தேவி துர்க்கையே ஜெய தேவி துர்க்கையே
தேவி துர்க்கையே ஜெய தேவி துர்க்கையே

கன்னி துர்க்கையே வீரக் கனக துர்க்கையே
அன்னை துர்க்கையே என்றும் அருளும் துர்க்கையே
அன்பு துர்க்கையே ஜெய துர்க்கை துர்க்கையே
தேவி துர்க்கையே ஜெய தேவி துர்க்கையே
தேவி துர்க்கையே ஜெய தேவி துர்க்கையே
தேவி துர்க்கையே ஜெய தேவி துர்க்கையே

## 2. மஹிஷாசுர மர்த்தினி ஸ்தோத்ரம்

(இந்தத் துதியை அன்புடன் ஓதுவது, எல்லாத் துன்பங்களையும் நீக்கி, எல்லாச் செயல்களையும் விருப்பப்படி நிறைவேற்றி, எல்லா நன்மைகளையும் அளிக்கும். வெள்ளி, செவ்வாய்க் கிழமைகளிலும் பௌர்ணமியன்றும் ஓதுவது மிகவும் சிறப்புடையது.)

அயிகிரி நந்தினி நந்திதமேதினி விச்வ விநோதினி நந்திநுதே
கிரிவர விந்த்யசிரோதினி வாஸினி விஷ்ணு விலாஸினி ஜிஷ்ணுநுதே
பகவதி ஹேசிதிகண்ட குடும்பினி பூரி குடும்பினி பூரிக்ருதே
ஜயஜய ஹே மகிஷாசுர மர்த்தனீ ரம்யக பர்தினி சைலஸுதே 1

ஸுரவர வர்ஷிணி துர்தர தர்ஷிணி துர்முக மர்ஷிணி ஹர்ஷரதே
திரிபுவன போஷிணி சங்கர தோஷிணி கில்பிஷ போஷிணி கோஷரதே
தநுஜ நிரோஷிணி திதிஸுத ரோஷிணி துர்மத சோஷிணி ஸந்நுஸுதே
ஜயஜய ஹே மகிஷாசுர மர்த்தினி... 2

ஆயி ஜகதம்ப மதம்ப கதம்ப வநப்பிரிய வாஸினி ஹர்ஸரதே
சிகரி சிரோமணி துங்க ஹீமாலய கிருங்க நிஜாலய மத்யகதே
மதுமதுரே மதுகைடப கந்ஜிநி கைடப பந்ஜிநி ராஸரதே
ஜயஜய ஹே மகிஷாசுர மர்த்தினி... 3

அயிசத கண்ட விகண்டித ருண்ட விதுகண்டித கண்ட கஜாதிபரே
ரிபுகஜ தண்ட விதாரண கண்ட பராக்ரம சுண்ட ம்ருகாதிபதே
நிஜபுஜ தண்ட'நிபாதிக கண்ட வியாதிநத முண்ட படாதிபதே
ஜயஜய ஹே மகிஷாசுர மர்த்தினி... 4

அயிரண துர்மத சத்ருவதோ தித துர்தர நிர்ஜர சத்திப்ருதே
சதுர விசார துரீண மகாசிவ தூதக்ருத ப்ரமநரதிபதே
துரித துரீஹ துராய சய துர்மதிதாநவ தூத க்ருதாந்தமதே
ஜயஜய ஹே மகிஷாசுர மர்த்தினி... 5

அயி சரணாகத வைரிய தூவர வீரவராபய தாயகரே
திரிவிவன மஸ்தக ஸூல விரோதி ஸிரோதிக்ரு தாபல ஸூலகரே
துமிதுமி தாமர தந்துபி நாதம் ஹோமுக ரீக்ருத திக்மகரே
ஜயஜய ஹே மகிஷாசுர மர்த்தினி... 6

அயிநிஜஹூம் க்ருதிமாத்ர நிராக்ருத தூம்ரவிலோசன தூம்ரஸதே
சமரஸ விஸோஷிய பீஜ சமுத்பவ ஸோணித பீஜலதே
சிவசிவ சும்பநிசும்ப மஹரஹவ தர்பித பூத பிசாசரதே
ஜயஜய ஹே மகிஷாசுர மர்த்தினி... 7

தநுர நிஸ்ங்கரண க்ஷண ஸ்ங்க பரிஸ்புர தங்க நடத் கடகே
கநகபி சங்க பிருஷக்த நிஷங்க ரஸத்டடச் சிருங்ஹ தாவடுகே
க்ருத சதுரங்க பலக்ஷிதரங்க கடத்பஹூாடத்படுகே
ஜயஜய ஹே மகிஷாசுர மர்த்தினி... 8

ஜயஜய ஜப்ய யே ஜய ஸப்த பரஸ்துதி தத்பரவிச்ச நு தே
பணபண பிந்ஜிமி பிங்குத நூபுர ஸிஞ்ஜித மோகித பூதபதே
நடித நடார்த்தடீ நடநாயக நாடித நாட்ய ஸுகானரதே
ஜயஜய ஹே மகிஷாசுர மர்த்தினி .. 9

அயிஸுமந; ஸுமந: ஸுமந: ஸும னோகர காந்தியுதே
ச்ரிதாஜநீ ரஜநீ ரஜநீ ரஜநீகர வக்ர வ்ருதே
ஸுநயந வி: ரமர ப்ரமா ப்ரமர பிரமாதிபதே
ஜயஜய ஹே மகிஷாசுர மர்த்தினி... 10

ஸஹித மஹா ஹவ மல்லமதல்லிக மல்லிதரல்லக மல்லரதே
விரசித வல்லிக பல்லிக மல்லிக பில்லிக பில்லி கவர் கவ்ருதே
ஸிதக்ருத புல்லிஸ முல்லஸி தாருண தல்லஜ பல்லவ ஸல்லலிதே
ஜயஜய ஹே மகிஷாசுர மர்த்தினி... 11

அவிரல கண்ட கலந்மத மேதுர மத்த மதங்கஜ ராஜபதே
திரிபுவன பூஷண பூத கலாநிதி ரூப பயோநிதி ராஜசுதே
அயிசுத தீஜன லூலஸ மானஸ மோஹன மந்மதராஜ சுதே
ஜயஜய ஹே மகிஷாசுர மர்த்தினி... 12

கமலதலாமல கோமள சாந்தி கலாதலி தாமல பால லதே
சகல விலாச கலாநில யக்ரம கேலிசலத்கல ஹம்ச குலே
அலிகுல சங்குல குவலய மண்டல மௌலி மிலத்பகு ளாளிகுலே
ஜயஜய ஹே மகிஷாசுர மர்த்தினி... 13

கரமுர ளீரவ விஜித கூஜித லஜ்ஜித காகில மஞ்சுமதே
மிலித புலிந்த மனோகர குஞ்சித ரஞ்சித சைலநி குஞ்சகரே
நிஜகுண பூத மஹா சபரீ குண சத்குண ஸம்ருத கேலிதலே
ஜயஜய ஹே மகிஷாசுர மர்த்தினி... 14

கடித பீடிதது சூலவிசித்ர மயூக திரஸ்கிருத சந்த்ரருகே
ப்ரணத ஸுராஸுர மௌலி மணிஸ்புரதம் சுல ஸந்நக சந்த்ரருசே
ஜிதனகாசல மௌலிப தோர்ஜித நிர்பரக் குஞ்சர கும்ப குசே
ஜயஜய ஹே மகிஷாசுர மர்த்தினி... 15

ஜித சகஸ்ரகரைக ஸகஸ்ரகரைக ஸஹஸ்ர கரைகநுதே
க்ருதஸுதாரக ஸங்கரதாரக ஸங்கரதாரக ஸூநுஹுதே
ஸுத ஸமாதி ஸமாக ஸமாதி ஸமாதி ஸமாதி ஸ ஜாதரதே
ஜயஜய ஹே மகிஷாசுர மர்த்தினி... 16

பதகமலம் கருணாநிலய வரிவஸ்ய தி யோநுதி நம்ஸசிவே
அயி கமலே கமலா நிலயே கமலா நிலய: ஸகதம் நபவேத்
தவபத மேவ பரம்பத மேவ மநிசீலயதோ மம கிம்நசிவே
ஜயஜய ஹே மகிஷாசுர மர்த்தினி... 17

கனகல ஸத்கல ஸிந்துஜலைரநு ஸிஞ்ஜிநு தேகுணரங்க புவம்
பஜதி ஸகிம் நச சீகு சகும்ப தடீபரிரம் பஸுகாநுபவம்
தவ சரணம், சரணம், கரவாணி நதாமரவாணி நிவாஸி சிவம்
ஜயஜய ஹே மகிஷாசுர மர்த்தினி... 18

தவவிம லேந்து குலம் வதனேந்துமலம் ஸகலம்தநு கூலயதே
கிமு புருஹீ த புரீந்து முகீ ஸுமுகீ பிரஸ்ஸன்ன விமுகீ க்ரியதே
மமது மதம் சிவ நாம ததே பலதீக்ருபயா குமுதக்ரியதே
ஜயஜய ஹே மகிஷாசுர மர்த்தினி... 19

அயி மயிதீன தயாளு தயாக்கிருய யைவ த்வயா பவிதம் யமுமே
அயி ஜகதோ ஜனணீ கிருபயாஸியதாசி தநாந்து மிதாஸிரதே
யது சித மத்ர பவத்யுரரீ குருதா துரு தாபம பாகுருதே
ஜயஜய ஹே மகிஷாசுர மர்த்தினிரம்யா பர்த்தினி சைவ ஸுதே 20

◆ ◆ ◆



ஸ்கந்தமாதா



கார்த்தியாயிணி



மஹாகௌரி



சித்தார்த்திரி

